# சித்தர் இலக்கியம் - ஓர் ஆய்வு

**சென்னைப் பல்கலைக் கழக**
**முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காக**
**அளிக்கப்பெறும் ஆய்வேடு**


பகுதிநேர ஆய்வாளர்

**மு. இராசாபாபு,** எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்,
**தமிழ்த்துறை,**
**மாநிலக் கல்லூரி (தன்னாட்சி),**
**சென்னை-600 005.**

நெறியாளர்

**முனைவர் மு. முத்துவேலு,**
எம்.ஏ., பி.எல்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
மாநிலக்கல்லூரி (தன்னாட்சி),
சென்னை-600 005.






தமிழ்த்துறை,
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை-600 005.

**மார்ச்சு - 2010**

**முனைவர் மு. முத்துவேலு,** எம்.ஏ., பி.எல்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை-600 005.

## நெறியாளர் சான்றிதழ்

திரு.மு. இராசாபாபு அவர்கள் ''சித்தர் இலக்கியம்-ஓர் ஆய்வு'' என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொண்டு எழுதியுள்ள இந்த ஆய்வேடு, சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறையில் என் மேற்பார்வையில் நிகழ்த்தப்பெற்ற ஆய்வின் வடிவாக்கமாகும். இந்த ஆய்வேடு இவரது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்தப் பட்டப் பேற்றிற்கோ ஆய்வரங்கிற்கோ இது அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : சென்னை-600 005
நாள் : 26 - 03 - 2010

(மு. முத்துவேலு)
நெறியாளர்

Dr. M.MUTHUVELU, M.A., Ph.D., B.L.,
Dept. of Tamil
Presidency College
Chennai - 600 005.

**மு. இராசாபாபு,** எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்.,
ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை-600 005.

## ஆய்வாளர் உறுதிமொழி

''சித்தர் இலக்கியம்-ஓர் ஆய்வு'' என்னும் பொருளில் முனைவர் பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்பெறும் இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்தப் பட்டப்பேற்றிற்கோ ஆய்வரங்கிற்கோ அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

மு. இரா. பா 26/3/10

இடம் : சென்னை-600 005
நாள் : - 03 - 2010

(மு. இராசாபாபு)
ஆய்வாளர்

# நன்றியுரை

யான் இவ்வாய்வை மேற்கொள்ள இடமளித்த சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு என் நன்றி. சென்னை நந்தனம் கல்லூரி மற்றும் மாநிலக்கல்லூரி முதல்வர்களுக்கும் மாநிலக்கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் மற்றும் பேராசிரியர்கள் அனைவருக்கும் உளமார்ந்த நன்றிகள் பல.

நான் முனைவர் பட்டத்திற்கான ஆய்வை மேற்கொள்ள விழைந்தபோது ஏற்று என் ஆய்வுக்குக் களம் அமைத்துத் தந்து இந்நாள் வரை ஆய்வு சிறக்கக் கருத்துரைகள் வழங்கி உறுதுணையாய் இருந்து வழிகாட்டிய என் ஆய்வு நெறியாளர் முனைவர் மு. முத்துவேலு அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

என் ஆய்வு மேலும் சிறப்புறப் பல்வேறு பணிகளுக்கு இடையிலும் பல வகையிலும் உதவியாய் இருந்த என் தமிழ்ப் பேராசான் முனைவர் அ. முத்துசாமி அவர்களுக்கு வாழ்நாள் முழுதும் நன்றிக்கடன் பட்டவனாவேன்.

ஆய்வுத் தலைப்பைத் தேர்ந்தெடுக்க ஆலோசனை கேட்டபோது சித்தர் இலக்கியத்தில் ஆய்வுக்கான களத்தை விளக்கிக்கூறி ஆலோசனைகள் பல வழங்கிய தமிழ்ப்பேராசிரியர் முனைவர் வச்சிரவேலு அய்யா அவர்களுக்கும் அகம்குழைந்த நன்றி.

சென்னை அசோக் நகரில் சித்தர் ஆய்வுமையம் நிறுவி, மாதந்தோறும் ஒவ்வொரு சித்தர்களைப் பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தி அதனை நூலாகத் தொகுத்தும், சித்தர்கள் பற்றிய பல்வேறு நூல்கள் கிடைக்கப் பேருதவியாகவும் இருந்த தமிழ்ப்பேராசிரியர் முனைவர் அரங்க இராமலிங்கம் அவர்களுக்கும் உளமார்ந்த நன்றி.

ஆய்வுக்குத் தேவையான நூல்களைக் குறிப்பிடும்போது உடனே அந்நூல்களைப் பெற்றுவந்து, தந்து பேருதவி புரிந்த மாதவனுக்கு என் மறவா நன்றி.

ஈன்று புறம்தந்து என்னைச் சான்றோனாக்க அரும்பாடுபட்ட என்னுயிர்த்தாய் - தந்தையர்க்கு என் மறவா நன்றியை அவர்களின் திருவடிகளில் காணிக்கையாக்குகிறேன்.

என் வாழ்க்கையின் நலத்திலும், உயர்விலும் பெரிதும் ஈடுபாடு கொண்டிருக்கும் என் மனைவி தீபாவிற்கும், ஆய்வினை நன்முறையில் முடிக்க அன்பும் ஆதரவும் தந்த என் மாமனார் மாமியார்க்கும் நன்றிகள் பல.

இவ்வாய்வேட்டினைச் சிறப்புற ஒளிஅச்சு செய்துகொடுத்த மாசறு கணினிநிறுவனத்தார்க்கும் என் மனமார்ந்த நன்றி!

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| குதம்பை. | - | குதம்பைச் சித்தர் |
| குறள். | - | திருக்குறள் |
| கொங். | - | கொங்கணச் சித்தர் |
| சிவ.வாக். | - | சிவவாக்கியர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| தொல். பொருள். | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பட். | - | பட்டினத்தார் |
| பாம்பாட்டி. | - | பாம்பாட்டிச்சித்தர் |
| புறம். | - | புறநானூறு |
| மு.கு.நூ. | - | முன்னரே குறிப்பிட்ட நூல் |
| வாலை. | - | வாலைக்கும்மி |

# பொருளடக்கம்

# முன்னுரை

சங்க காலத்தில் அகமும் புறமும் இலக்கியப் பாடுபொருள்கள். சங்கம் மருவிய காலத்தில் அற இலக்கியங்கள் பல்கிப் பெருகின. அதனைத் தொடர்ந்து சித்தர் பலர் சீர்திருத்தக் கருத்துக்கள், புரட்சிச் சிந்தனைகள் பயனுறு உண்மைகள் எனப் பல வாழ்வியல் உண்மைகளை வழங்கினார்கள். அவர்தம் கருத்துக்கள் மக்களால் மறுக்கப்பட்டும் மறைக்கப்பட்டும் வந்தன. சித்தர்களின் போக்கை எள்ளி நகையாடும் நிலையும் எழுந்தது. அதனை மாற்றிச் சித்தர்களின் சிந்தனைகளை மீட்டுருவாக்கம் செய்தல் வேண்டும் என்ற நோக்கில் ஆய்வுகள் எழுந்து வருகின்றன. அவ்வகையில் சித்தர் பாடல்களில் காணப்பெறும் மனித வள மேம்பாட்டிற்குத் தேவையான பல்வேறு வகையான கூறுகளைப் பன்முக நோக்கில் ஆய்வு செய்வது இன்றியமையாததாகும் என்னும் நன்னோக்கில் எழுந்ததே இவ்வாய்வாகும்.

**ஆய்வின் எல்லை**

சித்தர்கள் எண்ணிக்கையில் பலராக இருந்த போதிலும் அவர்களில் அகத்தியர், திருமூலர், சிவவாக்கியர், பட்டினத்தார், பாம்பாட்டியார், கொங்கணர், இடைக்காட்டுச் சித்தர், கடுவெளியார், குதம்பைச் சித்தர் ஆகிய ஒன்பது சித்தர்களின் பாடல்களே ஆய்வின் எல்லையாகக் கொள்ளப்பட்டுள்ளன.

'சித்தர் பாடல்கள் பெரிய ஞானக்கோவை', மானோஸ் - 'சித்தர் பாடல்கள்' ஆகிய நூல்களில் உள்ள சித்தர் பாடல்கள் கையாளப்பட்டுள்ளன. இந்த ஒன்பது சித்தர்களின் பாடல்களோடு தொடர்புடைய மற்ற சித்தர்களின் பாடல்கள் சிலவும் எடுத்தாளப் பெற்றுள்ளன. ஆய்வோடு தொடர்புடைய அறிஞர் பலரின் கருத்துக்களும் இடம்பெற்றுள்ளன.

**முதன்மை ஆதாரங்கள்**

மேற்கூறப்பெற்ற சித்தர்கள் ஒன்பதின்மர் பாடிய பாடல்கள் முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்பெறுகின்றன.

**துணை ஆதாரங்கள்**

த.ந. கணபதி எழுதிய தமிழ்ச்சித்தர் மரபு, ஸ்ரீஞானஜோதி சம்பங்கியின் சிவவாக்கியர் பாடல், சித்தர் பாடல்கள் பெரிய ஞானக்கோவை, க. நாராயணன் இயற்றிய சித்தர் தத்துவம், சி.எஸ்.தேவநாதன் படைத்த உள்ளொளி பெருக்கும் சித்தர்கள், சாமி சிதம்பரனார் இயற்றிய சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் - தத்துவம் முதலிய நூல்கள் துணை ஆதாரங்களாகக் கொள்ளப்பெறுகின்றன.

**ஆய்வு முன்னோடிகள்**

சித்தர்கள் குறித்த ஆய்வு பரவலாக நிகழ்த்தப்பட்டுள்ளது. சித்தர் குறித்துப் பலர் பல நூல்களும் செய்துள்ளனர். சித்தர்களைப் பற்றி ஆய்வு நோக்கில் சிந்தித்து நூல் வடிவம் கண்டவர்கள் பலராவர்,

த.ந. கணபதி தமிழ்ச்சித்தர் மரபு, இரா. மாணிக்கவாசகம் 'நம் நாட்டுச் சித்தர்கள்', எஸ்.பி. ராமச்சந்திரன் சித்தர்கள் வரலாறு, க. நாராயணன் சித்தர் சிவவாக்கியர் ஆகிய நூல்களை எழுதி வெளியிட்டுள்ளனர். 'சித்தர் பாடல்களில் நடப்பியல்' எனும் தலைப்பில் இரா. கலாவதி ஆய்வு செய்துள்ளார்.

மேலும் சென்னப் பல்கலைக்கழகத்தில் தி. சண்முகம் என்பவர் 'கல்வியியல் தத்துவத்தின் அடிப்படையில் தமிழிலுள்ள சித்தர் பாடல்கள்' எனும் தலைப்பில் ஆய்வு செய்து 2007-இல் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். அதே ஆண்டில் தி. மகாலட்சுமி என்பவர் 'அகத்தியரின் பல்துறைச் சிந்தனைகள்' எனும் தலைப்பில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றிருக்கிறார். இவ்வாய்வு முன்சொல்லப்பட்டோரை முன்னோடியாகக் கொண்டு நிகழ்த்தப்பட்டுள்ளது.

**ஆய்வு நோக்கம்**

மேற்காணும் முனைவர் பட்ட ஆய்வுகளில் ஒன்று கல்வியியல் தத்துவ அடிப்படையில் அமைந்துள்ளது. மற்றொன்று அகத்தியச் சித்தரின் பாடல்களை மட்டுமே எல்லையாகக் கொண்டு அப்பாடல்களில் கூறப்பட்டுள்ள மருத்துவம், சோதிடம், மந்திரம், மாந்திரீகம், இரசவாதம் போன்ற பல்துறைச் சிந்தனைகளை ஆய்ந்து செல்கின்றது.

''சித்தர் இலக்கியம் - ஓர் ஆய்வு'' என்னும் இவ் ஆய்வு சித்தர் பாடல்களில் காணப்படும் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனைகளை முழுமையாக வெளிப்படுத்தும் நோக்கில் அமைந்துள்ளது.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்வாய்வேடு பல்வேறு தலைப்புகளின்கீழ்ச் சித்தர்களின் பாடல்களைத் தொகுத்து ஆய்ந்துள்ளமையால் தொகுப்பு முறை ஆய்வாகவும், சித்தர்கள் பலரும் பல இடங்களில் குறிப்பிட்ட கருத்துக்களைப் பகுத்துக் கூறுவதனால் பகுப்பு முறை ஆய்வாகவும் விளங்குகிறது.

**ஆய்வேட்டின் அமைப்பு**

''சித்தர் இலக்கியம் - ஓர் ஆய்வு'' என்னும் இவ்வாய்வு முன்னுரை முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது. அவை,

***இயல் ஒன்று - சித்தர் பாடல் ஓர் அறிமுகம்***

***இயல் இரண்டு - சித்தர் பாடல்களும் சாதி சமய மறுப்பும்***

***இயல் மூன்று - சித்தர் பாடல்களும் மூடநம்பிக்கைச் சாடலும்***

***இயல் நான்கு - சித்தர் பாடல்களும் தனி மனித மேம்பாடும்***

***இயல் ஐந்து - சித்தர் பாடல்களும் சமுதாய மேம்பாடும்***

என்பனவாகும்.

முன்னுரையில் ஆய்வுத் தலைப்புத் தேர்வு, ஆய்வின் எல்லை, ஆய்வின் முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வின் நோக்கம், ஆய்வேட்டின் அமைப்பு முதலியன சுட்டப்பெறுகின்றன.

**இயல் ஒன்று - சித்தர் பாடல் ஓர் அறிமுகம்**

''சித்தர் பாடல் - ஓர் அறிமுகம்'' என்னும் முதல் இயல் சித்தர்கள் வரையறை, சித்தர்கள் நோக்கம், தமக்கென வாழாத சித்தர்கள், சித்தர்களின் சிறப்பு, சித்தம், சித்தி ஆகிய சொற்களுக்கான விளக்கங்கள், சித்தன் பற்றிச் சித்தர்கள், சித்தரும் வல்லமையும், சித்தர் கொள்கைகள், சித்தர்களின் புறத்தோற்றம், சித்தர்களின் மூடமதி சாடும் சிந்தனை, சித்தர்களின் மொழியாளுமை, சித்தர் பாடல்கள் போற்றப்படாமல் போனமைக்குக் காரணம், சித்தர்களின் குறியீட்டு மொழி, மருத்துவத் துறையில் சித்தர்கள், சித்தர்கள் காலம், சித்தர்களின் எண்ணிக்கை, பதினெண் பெயர்க்காரணம், சித்தர் பாடல்களில் இசைமரபு, சித்தர் பாடல்களும் இன்றைய மக்கள் கண்ணோட்டமும் முதலியன குறித்து விளக்குகின்றது.

**இயல் இரண்டு - சித்தர் பாடல்களும் சாதி சமய மறுப்பும்**

'சித்தர் பாடல்களும் சாதி சமய மறுப்பும்' என்னும் இவ்விரண்டாமியலில் சாதி என்னும் சொல்லுக்குரிய விளக்கம், சாதி

உருவான முறை, சாதியின் தோற்றம், பண்டைத் தமிழிலக்கியங்களில் மானுடப் பகுப்பு முறை, சித்தர்களும் சாதியொழிப்பும், சித்தர்களும் சமய ஒழிப்பும், சித்தர்களும் சமயச் சடங்குச் சாடலும், சித்தர்கள் சாத்திரங்களைச் சாடலும், ஆகியன விரிவாக விளக்கப்பெறுகின்றன. சித்தர்கள் வழியில் சாதியைச் சாடிய சான்றோர் பெருமக்கள் பற்றியும், இருபதாம் நூற்றாண்டில் சாதியை ஒழிக்க அரும்பாடுபட்டோர் பற்றியும் இவ்வியலில் ஆராய்ந்து விளக்கப் பெறுகின்றன.

**இயல் மூன்று - சித்தர் பாடல்களும் மூடநம்பிக்கைச் சாடலும்**

நம்பிக்கை, மூடநம்பிக்கை ஆகிய சொற்களுக்கான விளக்கம், மூடநம்பிக்கையின் இலக்கணம், மூடநம்பிக்கை தோன்றியமைக்கான காரணம், மூடநம்பிக்கையைத் தோற்றுவித்தவர்கள், மூடநம்பிக்கைக்கு மக்கள் அடிமையாகக் காரணம் முதலியன ஈண்டு விளக்கப்பெறுகின்றன. மூடநம்பிக்கையொழிப்பின் பயன்கள், மூடநம்பிக்கையைச் சித்தர்கள் சாடக் காரணம், மூடநம்பிக்கையைச் சாடிய சித்தர்கள், உருவ வழிபாடு எதிர்ப்பு, பூசை மற்றும் சடங்குகளைச் சாடல் முதலியன ஆய்ந்துரைக்கப் படுகின்றன. சித்தர்தம் அறிவியல் பார்வை சுட்டப்படுகின்றது. பாம்பாட்டிச் சித்தரின் பகுத்தறிவுச் சிந்தனை எடுத்துரைக்கப்படுகின்றது.

**இயல் நான்கு - சித்தர் பாடல்களும் தனி மனித மேம்பாடும்**

சித்தர்கள் பலரும் தனிமனித மேம்பாட்டை வலியுறுத்துகின்றனர்.

தனிமனித ஒழுக்கமே சமுதாய மேம்பாட்டுக்கு வழிவகுக்கும் என்பது சித்தர்களின் முடிபாகும். மக்களாகப் பிறந்த ஒவ்வொருவரும் தத்தம் உடம்பைப் பேணிக்காப்பது இன்றியமையாததாகும் எனச் சித்தர்கள் அறிவுறுத்தினர். இளமையும், யாக்கையும், செல்வமும் நிலையுடையனவல்ல என்னும் பேருண்மையைச் சித்தர்கள் வெளிப் படுத்தியுள்ளனர். சித்தர்களது பாடல்களின் துணைகொண்டு தனிமனித மேம்பாட்டிற்கான வழிமுறைகளை இவ்வியல் விளக்குகின்றது.

**இயல் ஐந்து - சித்தர் பாடல்களும் சமுதாய மேம்பாடும்**

சித்தர்கள் 'எம் கடன் பணிசெய்து கிடப்பதே' என்னும் கொள்கையுடையவர்களாவர். இவர்கள் மனித சமுதாயம் வளமோடும் நலமோடும் வாழ்வாங்கு வாழவேண்டும் என்ற நன்னோக்கில் பாடல்கள் பலவற்றைப் புனைந்த பெருமைக்குரியவர்கள்; போலிச் சாமியார்களைத் தோலுரித்துக் காட்டியவர்கள்; பெண்ணின் பெருமை பேசியவர்கள் இச்சித்தர்களது நற்கருத்துக்கள் எக்காலத்தவர்க்கும் ஏற்புடையனவாகும் முதலிய உண்மைகளை இவ்வியல் ஆய்ந்துரைக்கின்றது.

முடிவுரைப் பகுதியில் ஒவ்வோர் இயலிலும் கண்டறியப்பட்ட உண்மைகளும் முடிபுகளும் இடம் பெறுகின்றன.

பாம்பாட்டிச் சித்தரின் வல்லமை குறித்த பாடல்கள், படிக்காத பாமரனும் எளிதில் பொருள் விளங்கிக் கொள்ளும் சித்தர்களின் பாடல்கள், மறைபொருள் கொண்ட பாடல்கள், பொருள் விளக்கங்கள் ஆகியன பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.

# சித்தர் பாடல் ஓர் அறிமுகம்

## 1.0 முன்னுரை

சித்தர்கள் வரையறை, சித்தர்கள் நோக்கம், தமக்கென வாழாத சித்தர்கள், சித்தர்களின் சிறப்பு, சித்தம், சித்தி என்னும் சொற்களுக்கான விளக்கம், சித்தன் பற்றிச் சித்தர்கள், சித்தரும் வல்லமையும், சித்தர் கொள்கைகள், சித்தர்களின் புறத்தோற்றம், சித்தர்களின் மூடமதி சாடும் சிந்தனை, சித்தர்களின் மொழியாளுமை, சித்தர் பாடல்கள் போற்றப்படாமல் போனமைக்குக் காரணம், சித்தர்களின் குறியீட்டு மொழி, மருத்துவத் துறையில் சித்தர்கள், சித்தர்கள் காலம், சித்தர்களின் எண்ணிக்கை, பதினெண் பெயர்க்காரணம், சித்தர் பாடல்களில் இசைமரபு, சித்தர் பாடல்களும் இன்றைய மக்கள் கண்ணோட்டமும் முதலியன குறித்து இவ்வியல் விளக்குகின்றது.

## 1.1. சித்தர்கள் - வரையறை

> ***"சித்தர் என்ற சொல்லிற்கு உள்ளார்ந்த வெவ்வேறான பொருள்கள் இருக்கின்றன. இந்த வடமொழிச் சொல்லுக்கு நிறைவடைந்தவன் என்று பொருள்"***[1]

எனத் த.ந. கணபதி சுட்டுகின்றார். சித்தர்கள் என்பவர்கள் சித்தத்தை வென்றவர்கள். 'சித்து' என்றால் இயற்கையைக் கடந்த செயல் என்றும், அற்புதம் என்றும் பொருள் கூறுவர். எனவே சித்தர்கள் என்பவர்கள் இயற்கையை மீறிய செயல்களைச் செய்பவர்களென்றும், பல்வேறு அற்புதங்களை நிகழ்த்துபவர்களென்றும் பொருள்கொள்ள முடிகின்றது.

*‘‘சித்தர்கள் தங்களை இறைவனின் கால்வழியினர் என்று சொல்லிக் கொள்கிறார்கள். அவர்களைப் பொருத்தமட்டில் சிவன்தான் முதற்சித்தன். ஏனையோரெல்லாம் சிவனுடைய கால்வழியினர்’’*[2]

என்று கருதுபவர்கள் சித்தர்கள். அவர்கள், தம்முடைய உடம்புக்குள்ளேயே இறைவனைக் காணமுடியும் என்ற திடமான நம்பிக்கை கொண்டவர்கள் என்பதனை அவர்களது பாடல்கள் புலப்படுத்துகின்றன.

‘சித்தர்கள் எனப்படுவோர் இறையுணர்வுமிக்கவர்கள்; அழியும் உடலை நெடுங்காலம் பாதுகாக்கும் வழியைக் கண்டவர்கள்; சீவனுக்குள்ளேயே சிவனைக் கண்டுணர்ந்தவர்கள்; அளப்பரிய ஆற்றல் மிக்கவர்கள்; தூய எளிய வாழ்க்கை வாழ்ந்தவர்கள்; அவர்கள் தம்முடைய ஆன்ம விடுதலைக்காகச் செயல்பட்டாலும் யாம்பெற்ற பெரும்பேறு இவ்வையகமும் பெறவேண்டும் என்னும் பரந்த மனதுடன் அறநெறிகளைப் புகட்டியவர்கள் ஆவர்; உயிர்களின் உடல் மற்றும் மனநோய்களைப் போக்கி நலம்பெறச் செய்த மருத்துவர்களுமாவர்; சாத்திரங்களின் உண்மையை அறியாமல், பொருளற்ற சடங்குகளில் உழலும் மக்களின் அறியாமையை அகற்றி, உண்மையை உணர்த்துபவர்களாவர்; உலகினில் காணப்படுகின்ற சாதி சமய இனவேறுபாடுகள், மூடப்பழக்கங்கள் முதலிய பொய்மைகளைக் களைந்து

சமுதாய ஒற்றுமைக்கு வித்திட்ட புரட்சியாளர்களாகவும் சித்தர்கள் விளங்கி உள்ளனர்.

சித்தர் என்னும் சொல்லுக்குப் பலர் பல்வேறு விளக்கங்களைக் கூறுவர். ‘சித்து என்னும் சொல் சித்தம் என்னும் சொல்லில் இருந்து வந்ததாகும். ‘சிந்தையிலே கலங்கமற்றார் சித்தராவார்’ என்பார் அகத்தியர். ‘செகமெல்லாம் சிவனென்றே அறிந்தோன் சித்தன்’. அவனது அனுபவ அருள்நிலையைச் சித்து அல்லது சித்தி எனலாம். சித்தி என்ற சொல்லிற்கு அடைதல் என்று பொருள் கொள்ளலாம்.’[3]

ஆய்வாளர்கள் சித்தன் என்ற சொல்லிற்குத் தக்க விளக்கம் தருகிறார்கள்.

> ***“சமயச் சடங்குகளுக்குக் கட்டுப்படாமல் தனக்குள் இருக்கும் இறைநிலையைக் காண மனவடக்கத்தால் உயர்ந்தவன் சித்தன்”***[4]

என்பார் ஸ்ரீ ஞானஜோதி சம்பங்கி.

தந்தை பெரியார், சித்தன் என்னும் சொல்லுக்கு,

> ***“புத்தியை உடையவன் புத்தன். எனவே அறிவைப் பயன்படுத்தி உண்மையைக் காண்பவன் புத்தன். அதேதான் சித்தன் என்பதும். அறிவைப் பயன்படுத்த, சித்தத்தை***

***உறுதியுடன் அடக்கிக் கட்டுப்பாட்டுடன் பயன்படுத்து கின்றவன் சித்தன்''[5]***

எனப் பொருத்தமான விளக்கத்தைத் தருகின்றார்.

***''தங்கள் ஆற்றல்களையெண்ணித் தற்பெருமை கொள்ளாதவன் சித்தன். உரிய தருணங்களில் தனது ஆற்றலை வெளிப்படுத்துவதோடு மற்ற நேரங்களில் அதுபற்றிப் பேசாமலிருப்பதே சித்தனின் இயல்பு''[6]***

என்பார் சி.எஸ். தேவநாதன்.

***சித்தர் என்றால் ''ஞானசித்தி படைத்தோர், சித்தி பெற்றவர், தேவகணத்துள் ஒருசாரார். யாவும் உணர்ந்தவர் எனும் பொருள்களைத் தமிழகராதி கூறுகின்றது.''[7]***

சித்தர்களைப் பற்றி இத்தகு கூற்றுகளையெல்லாம் தொகுத்துப் பார்க்கும்போது சமயச்சடங்குகளுக்குக் கட்டுப்படாமல், மனத்திலே சிவத்தை நிறுத்தி, மனவலிமையோடும் அறிவுக் கூர்மையோடும் அனைத்தையும் அறிந்து தமது ஆற்றலை உலகுக்கு வெளிப்படுத்துபவர்கள் என்றும், உலகியல் வாழ்வைவிட்டு ஒதுங்கி வாழாமல் சமுதாயத்திற்காகவும் சமுதாய முன்னேற்றத்திற்காகவும் வாழ்பவர்கள் சித்தர்கள் என்றும் ஒருவாறு விளங்கிக் கொள்ளலாம்.

### 1.2. சித்தர்கள் நோக்கம்

உலக நன்மைக்காகவே தொடர்ந்து உழைப்பவர்கள் சித்தர்கள், அவர்கள் சமுதாயத்தில் செருப்புத் தைப்பவராகவும், ஆடு மாடுகளை மேய்ப்பவராகவும், பாம்பினைப் பிடித்துப் பழக்கி வாழ்பவராகவும் விளங்கியிருக்கிறார்கள். வனத்திடை இருந்துகொண்டு தவம் செய்வதைத் தங்கள் கடமையென்று அவர்கள் எண்ணவில்லை. எதையும் இறையுணர்வோடு செய்யவேண்டும் என்பதும், அது மக்களுக்குப் பயனுள்ளதாக இருக்க வேண்டும் என்பதும் சித்தர்களின் நோக்கமாகக் கூறலாம்.

'சித்தர்களை இறைநிலை மாந்தர் என்பதே தகும். அவர்கள் தவசி, யோகி, ஞானி என்ற மூன்று நிலைகளையும் கடந்து நிற்பவர்கள். ஆன்மீகத்தில் மிக உயர்ந்த இடம் சித்தனுடையது. தான் செய்கின்ற அற்புதங்களை அற்பமாய் எண்ணிக் கொள்பவன் அவன். இறைவன் இருக்கின்ற தூயவெளியில் கலப்பதே அவனுடைய வாழ்வின் நோக்கம்'[8] என்பர். எனவே சித்தர்களின் வாழ்வியல் நோக்கம் என்பது இவ்வுலகில் ஏற்ற தொழிலை மேற்கொண்டு சிறப்பதும் இறையுணர்வோடு வாழ்வதுமாகும் எனக் கொள்ளலாம்.

#### 1.2.1. தமக்கென வாழாமை

மக்களிடம் நிரம்பப் பரிவுடையவர்கள் சித்தர்கள். அடுத்தவருடைய பிணியையும் துன்பத்தையும் போக்குபவர்கள் அவர்கள். எவருக்குமே

என்றுமே அவர்கள் கெடுதல் என்பதைச் செய்வதேயில்லை. புராணங்களில் வருகின்ற முனிவர்களைப் போல் 'பிடிசாபம்' என்று மிரட்டல் விடுப்பது இல்லை. அடுத்தவர் துயர்நீக்கவே வாழ்ந்தவர்கள் சித்தர்கள் என்பர்.

இக்கூற்றுகள் யாவும் சித்தர்கள் தமது வாழ்நாளில் தமக்கென வாழாமல் பிறருக்காகவே வாழ்ந்தவர்கள் என்பதையும் தன்னலம் என்பதைச் சிறிதேனும் எண்ணாதவர்கள் என்பதையும் நன்கு புலப்படுத்துகின்றன.

> மேலும், *"சித்தர்கள் ரசவாத வித்தைகள் மூலமாக இரும்பையும், பாறையையும், பித்தளையையும் பொன்னாக மாற்றுபவர்கள். ரசவாதம் என்ற சொல்லில் வேதித்தல் என்ற சொல்லே வாதம் என வந்துள்ளது. (வேதித்தல் - மாறுபடுதல்; வாதம்- மாறுபடுவது) எனவே ரசவாதம் என்பது ரசம் என்னும் இயற்கைப் பொருளின் தன்மைகளை ஆராய்ந்து அறிதல். மருந்து வகைகளில் ரசம் என்பது ஒரு முதன்மையான மருந்து. ரச பஸ்பம், ரசசெந்தூரம், ரசக்கட்டு முதலியன ஒப்புயர்வற்ற மருந்துகள். எனவே ரசவாதம் என்பதற்கு ரசத்தின் மாறுதல்களை அறிவது என்பதே பொருள். வாதம் என்றால் பொருட்களில் மாறுதலைக் காண்பது. இந்த வாதவித்தையே*

*சித்தர்களின் அறிவியல் ஆராய்ச்சியாகும். உலோக வகை, உப்பு வகை, பாஷான வகை, வேர் வகை, இலை, விதை, பட்டை, பூவகைகள், முத்து, பவளம், கஸ்தூரி, மூத்திரம், மலம் இவைகளின் குணங்களையெல்லாம் சித்தர்கள் ஆராய்ந்தனர்''*[9]

என்பர். இவ்வாறு மேற்கண்ட ஆராய்ச்சிகளை எல்லாம் சித்தர்கள் நிகழ்த்தியிருந்தாலும் அவையனைத்தும் உலக மக்களின் நன்மைக்காகவேயாகும் என்பது துணிபு மேலும், நோய்நொடியின்றி வாழ மேற்கொண்ட ஆராய்ச்சி என்பதும் தெள்ளத்தெளிவாக அறிந்து கொள்ளமுடிகின்றது.

**1.2.2. சித்தர்களின் சிறப்பு**

சித்தர்கள் பல்வேறு சிறப்புகளைப் பெற்றிருந்தனர் என்பது அவர்கள் பாடல்கள் வழி புலனாகின்றன.

*''விஞ்ஞான முறையும், விஞ்ஞான ஆராய்ச்சியும் தமிழகத்துக்குப் புதியன அல்ல. ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே தமிழகத்தில் விஞ்ஞானிகளாகச் சித்தர்கள் பலர் வாழ்ந்திருந்தனர். அவர்கள் மனித சமுதாயத்திற்குச் செய்த தொண்டுகள் அளவற்றது. மக்கள் நோயின்றி வாழவும் துன்பத்திலிருந்து விடுபடவும் பல வழிகள்*

*கண்டறிந்தனர். உண்மைகள் பலவற்றை ஆராய்ந்து தெளிந்தனர். அவர்கள் கண்ட விஞ்ஞான ஆராய்ச்சியையும், பலனையும் மனித சமுதாயம் இன்றும் அனுபவித்துக் கொண்டிருக்கின்றது''*[10]

என்பார் சாமிசிதம்பரனார். சித்தர்கள் என்பதற்குச் சாகாநிலையைப் பெற்றவர்கள், அழியா உடம்பைப் பெற்றவர்கள் எனப் பல பொருள்களைக் கூறுவர். மேலும் தம்முடைய உடம்பை அப்படியே விட்டுவிட்டு வேறோர் உடம்பினுள் புகுந்து நடமாடும் ஆற்றல் பெற்றவர்கள். இதற்குக் கூடுவிட்டுக் கூடுபாய்தல் என்று பெயர். அவர்கள் முக்காலங்களைப் பற்றி ஆய்ந்து அறியும் அறிவு பெற்றவர்கள். இவர்களை மக்கள் பித்தலாட்டக்காரர்கள் என அழைப்பர். இவ்வாறு அழைப்பதற்குக் காரணம் பித்தளையை ஆடகமாக (பொன்) மாற்றுகின்ற வித்தை தெரிந்தவர்கள் சித்தர்கள் என விளக்கம் தருவார் கு.ந.கணபதி.

**1.2.3. சித்தம் - சித்தி - சொல் விளக்கம்**

சித்தம் - சித்தி என்ற சொற்களுக்குப் பலரும் பல விளக்கங்களைத் தருகின்றனர்.

*''சித்தி என்ற சொல்லில் சித் - என்றால் அறிவு என்று பொருள். எனவே சித்தை உடையவர்கள் சித்தர்கள். சித்தம் என்பதற்கும் அறிவு என்னும் பொருளுண்டு. ஆகவே சித்தர்கள்*

*என்றால் அறிவு படைத்தவா கள், மேதைகள், அறிஞர்கள், பேரறிவு படைத்தவர்கள், நுண்ணறிவு படைத்தவர்கள், விஞ்ஞானிகள் மெய்ஞானிகர் என்று பொருள்கொள்வதே பொருத்தமாகும் என்கிறார்''*[1]

சாமிசிதம்பரனார். சித் என்பதற்கு 'யாதும் அறியும் ஞானம்' என்று த.ந. கணபதி விளக்கம் தருகின்றார். மேலும் க. நாராயணன் சித்தர் எனும் சொல் தமிழில் எப்பொழுது முதல் வழக்கில் இடம்பெற்றுள்ளது என்பதனைப் பற்றி ஆய்ந்துள்ளார். அவர்,

*'சித், சித்தம், சித்து, சித்தர் எனும் சொற்கள் பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படவில்லை. மகான் புத்தரின் இயற்பெயாரன சித்தார்த்தர் என்பதில் 'சித்து' என்ற சொல் பயிலப்படுகிறது. சித்தார்த்தம் என்றால் தத்துவஞானம் என்று பொருள் கூறுகிறார். எனவே தத்துவஞானி என்ற பொருள்படுமாறு சித்தார்த்தர் என்ற பெயர் அமைகிறது. புத்தரின் தாய்மொழியாக வழக்கிலிருந்த பாலிமொழியில் வழங்கிய இச்சொல் பின்னர் வடமொழியில் சேர்ந்திருக்கக் கூடும். வடமொழியும் புத்தசமயமும் தமிழகத்தில் செல்வாக்குப் பெற்ற காலத்தில் இச்சொல் தமிழில் இடம்பெற்று வழக்கில் நிலைத்து விட்டது''*[12]

என்கிறார்.

*'சித்-சித்து-சித்தி-சித்தம்-சித்தர் என்பன ஒன்றோடொன்று தொடர்புடைய அல்லது ஒரு மூலத்திலிருந்து தோன்றிய சொற்களாகக் காணப்படுகின்றன. இறைவனைச் சத்-சித்-ஆனந்தம் என்ற மூன்று நிலைகளை உடையவனாகக் கூறுவது வழக்கம். இத்தொடரிலுள்ள சித்-எனும் சொல் இறைவனைப் பேரறிவாளன் என்று சாற்றுகிறது. சித்தர்களின் கருத்துப்படி சித்தம் என்பது மனம் (உள்ளம்) ஆகும். 'சித்தி என்பது பெறத்தக்க பேற்றை அடைதல்' என்னும் பொருளை உடையது.'*[13]

எனவே அறிவுப்பூர்வமான சிந்தனைத் தெளிவின் மூலம் பெறத்தக்க பேறு இதுவெனத் தீர்மானித்து, அப்பேற்றினைப் பெற முயன்றவர்களே சித்தர்கள் என்று கருதுவது சாலப் பொருத்தமுடையதாகும்.

''சித்தர்கள் தாம் பெற்ற அறிவைப் பயன்படுத்தி எட்டு வகையான வல்லமைச் (அற்புதம்) செயல்களைச் செய்துள்ளனர். இதனை அட்டமாசித்தி என்பர் (அட்டம்-எட்டு).

*'1.அணிமா (நுண்மை) - அணுவைக் காட்டிலும் மிகவும் சிறிய உருவில் உலவும் ஆற்றல்.*

*2.மகிமா (பருமை) - மலையினும் பெரிய உருப்பெற்று நிற்கும் ஆற்றல்.*

*3.இலகிமா (விண்தன்மை) - உடம்பைக் காற்றுப்போல் லேசாக்கி, நீரிலும் சேற்றிலும் அழுந்தாமல் விரைந்து செல்லும் வல்லமை காற்றில் மிதக்கும் ஆற்றல்.*

*4.கரிமா (மென்மை) - ஐம்புலன் நுகரும் இன்பதுன்பம் பற்றிக் கவலைப்படாதிருப்பது. எங்கும் வியாபித்திருக்கும் ஆற்றல்.*

*5.பிராப்தி (விரும்பியதெய்தல்) - தான் நினைத்ததை, விரும்பியதை அடையும் வல்லமை.*

*6.ஈசத்துவம் (கவர்ச்சி) - எல்லோரும் தன்னை வணங்கும்படியான தெய்வத் தன்மையை அடைவது.*

*7.வசித்துவம் (நிறைவுண்மை) - உலகப்படைப்புகளையெல்லாம் அடக்கியாளும் ஆற்றல். இதனை உலகம் முழுவதையும் தன்வயப்படுத்தி நடத்தும் ஆற்றல் என்பர்.*

*8. பிரகாமியம் (ஆட்சியனாதல்) - கூடுவிட்டுக் கூடுபாயும் ஆற்றல்"*'[14] முதலிய எட்டுவகையான சாதனைகள் கைவரப் பெற்றவர்கள் சித்தர்கள் என்று கூறுவர்

**1.3. சித்தன் பற்றிச் சித்தர்கள்**

சித்தன் என்ற சொல் சித்தர் பாடல்களில் மிகுதியாக இடம்

பெற்றுள்ளது. சித்தர்கள் என்பதற்கு வல்லமைச் செயல்கள் செய்பவர்கள்; பேரின்பம் சித்திக்கப் பெற்றவர்கள்; மனிதர்களாகப் பிறந்து சித்தர்களாக ஆகி இறைநிலையை உணர்ந்தவர்கள்; அவர்கள் தாம் பிறப்பெடுத்த இந்த மானிட குலத்திற்கு வழிகாட்ட வேண்டுமென்ற நல்லெண்ணம் கொண்டு, மனிதர்கள் பசியும் பிணியும் நீங்கி வாழ்ந்து உயர்ந்த நிலையை அடையும் பொருட்டுப் பாடல்கள் பல எழுதிய பெருமைக்குரியவர்கள். அப்பாடல்களில் சித்தர் என்ற சொல் சமயங் கடந்தவர், அற்புதம் நிகழ்த்தும் ஆற்றல் உடையவர், அறிவைப் பயன்படுத்துபவர் என்ற பல பொருளில் கையாளப் படுவதனைக் காணமுடிகின்றது. இதனை,

*'எழும்பாமல் வாசனையைக் கொன்றோன் ஞானி*
*ஏகாமல் வாசனையை அடித்தோன் சித்தன்'* [15]

என்கிறார் சட்டை முனிநாயனார். இங்கு வாசனை என்பதற்குக் கர்மவினை எனப் பொருள்கொண்டு, கர்மவினையைக் கொன்றுவிடுபவன் ஞானி, கர்மவினையைத் தடுத்து நிறுத்துபவன் சித்தன் என்று சட்டைமுனி ஞானிக்கும் சித்தனுக்கும் உள்ள வேறுபாட்டினைச் சுட்டிக் காட்டுகின்றார்.

சித்தர்கள் சமய வரையறை மற்றும் சாத்திர விதிமுறைகளை மீறிச் செயல்படுபவர்கள் என்பதனை,

*'சாத்திரத்தைச் சுட்டெரித்தால் அவனே சித்தன்'*[16]

என்ற அகத்தியரின் பாடல்வரி தெளிவுபடுத்தும்.

மனிதன் வாழுமிடமும் இறைவன் வாழும் இடமும் சித்தர்களுக்கு ஒரே இடமாகவே தோன்றும். இதனை,

*'சித்தரென்றும் சிறியரென்றும் அறியொனாத சீவர்காள்*
*சித்தர்இங்கு இருந்தபோது பித்தரென்றும் எண்ணுவீர்*
*சித்தர்இங்கு இருந்துமென்ன பித்தன்நாட் டிருப்பரோ?*
*அத்தன் நாடும் இந்தநாடும் அவர்களுக் கெலாமொன்றே*[17]

எனச் சிவவாக்கியர் கூறுகிறார்.

''சித்தி கைவரப் பெற்றவர்களே சித்தர்கள் ஞானத்தைச் சிக்கெனப் பற்றிக் கொண்டு வாழ்பவன் சித்தன்.

*'சிந்தை தெளிந்திருப்பான் அவனே சித்தன்' (வால்மீகர் - 2)*
*'சிந்தை தெளிந்தார்' (திருமந்திரம், 1989)*

அலையில்லாது தெளிந்து துலங்கும் கடலைப்போல் தெளிவான, அமைதியான மனநிலையை உடையவனே சித்தன் என்பர். பிரபஞ்சம் அனைத்தையுமே சிவமாகக் காண்பவனே சிந்தன்[18]

*''சித்தர் சிவத்தைக் கண்டவர்', (திருமந்திரம் 2526)*

*'யோகச்சமாதி உகந்தவர் சித்தரே', (திருமந்திரம், 1490)*

*'வாலையைப் பூசித்தவன் சித்தன்', (கொங்கணர்-74)'*

*'ஆத்தாளைப் பூசித்தோன் அவனே சித்தன்' (கருவூரார் செ.18)'*[19]

என்று சித்தர் பாடல்களில் பல இடங்களில் சித்தர் என்ற சொல் பயின்று வருவதனைப் பார்க்க முடிகின்றது. பல்வேறு பொருள்களில் அச்சொல் வழங்கி வருவதனையும் அறிந்துகொள்ள ஏதுவாகிறது.

**1.4 சித்தரும் வல்லமை ஆற்றலும்**

சித்தர்கள் மூச்சுப் பயிற்சியை மேற்கொள்ளும்போது அவர்களுக்குப் பல அரிய அதீத ஆற்றல்கள் கைகூடுவதாகக் கருதப்படுகிறது. அவ்வாறு கைகூடும் ஆற்றல்கள் எண்வகைச் சித்திகளாக ஏற்கனவே கூறப்பட்டுள்ளன. அவற்றையும் கடந்து சித்தர்களால் பல்வேறு வல்லமைகளைச் செய்ய இயலும் என்பது பாம்பாட்டிச்சித்தரின் திடமான சிந்தனையாக உள்ளது. இதனை,

*''எட்டுநாகம் தம்மைக் கையால் எடுத்தே ஆட்டுவோம்*
*இந்திரனார் உலக்தை இங்கே காட்டுவோம்*
*கட்டுக்கு அடங்காத பாம்பைக் கட்டிவிடுவோம்*
*கடுவிடந் தன்னைக் கக்கி ஆடுபாம்பே''*[20]

என்பார். மேலும்,

*"தூணைச்சிறு துரும்பாகத் தோன்றிடச் செய்வோம்*

*துரும்பைப் பெருந்தூணாகத் தோற்றச் செய்குவோம்*

*ஆணைப் பெண்ணும் பெண்ணை ஆணும் ஆகச்செய்குவோம்*

*ஆரவாரித் தெதிராய் நின்றாடு பாம்பே"[21]*

எனவும்,

*"மண்டலமுற்றும் எம்கையால் மறைத்து விடுவோம்*

*வானத்தையும் வில்லாக வளைத்து விடுவோம்"[22]*

எனவும்,

*"மூண்டெரியும் அக்கினிக்குள் மூழ்கி விடுவோம்*

*முந்நீருள் இருப்பினும் மூச்சடக்குவோம்*

*தாண்டிவரும் வன்புலியைத் தாக்கி விடுவோம்*

*தார்வேந்தன் முன்புநீ நின்றாடு பாம்பே"[23]*

எனவும்,

*செப்பரிய மூன்றுலகுஞ் செம்பொன் ஆக்குவோம்*

*செங்கதிரைத் தண்கதிராய்ச் செய்துவிடுவோம்*

*இப்பெரிய உலகத்தை இல்லாமல் செய்வோம்*

*எங்கள் வல்லபங் கண்டுநீ ஆடுபாம்பே[24]*

எனவும் பாம்பாட்டிச் சித்தர் கூறுகின்றார். சித்தர்களாகிய நாங்கள் கடும் நஞ்சையுடைய எட்டுத் தலை நாகத்தையும் மிகச் சாதாரணமாகப்

பிடித்து ஆட்டுவோம்; இந்திரனின் உலகத்தைப் பூலோகத்திற்கு வரச்செய்குவோம்; எட்டு மலைகளையும் பந்தாக எடுத்து வீசி எறிவோம்; ஏழுகடல்களையும் குடித்து ஏப்பம் விடுவோம்; அளந்து மதிப்பிட முடியாத மணலையும் அளந்து விடுவோம்; வெம்மையான சூரிய ஒளியைத் தண்மையானதாக்குவோம்; பிரபஞ்சத்தைப் படைத்த பிரம்மனையே எங்களுக்கு அடிமையாக்கிக் கொண்டு அவனுடைய தொழிலை நாங்களே மேற்கொண்டு சிவனுக்குச் சமமாக வாழ்வோம்; சீறும், புலி, யானை, சிங்கம் முதலிய யாவற்றையும் எங்களுக்குக் குற்றேவல் செய்யச் சொல்லுவோம். கடவுளை எங்களோடு விளையாடச் செய்வோம் என்று பல்வேறு நிகழ்வுகள் தங்களால் முடியுமென்று தற்பெருமையாகக் கூறியிருந்தாலும், அப்பாடல்களைப் படிக்கும்போது மக்களிடையே மனஉறுதியும், தன்னம்பிக்கையும் பிறப்பதை உணர முடிகின்றது. புதுஆற்றல் பிறக்கின்றது. அவ்வாற்றல் பல்வேறு சாதனைகள் புரிய மனிதனுக்குத் துணை நிற்பதனைத் தெள்ளத் தெளிவாக அறிந்திட முடிகின்றது.

மேற்காணும் பாம்பாட்டியாரின் கூற்றுகளை ***'அவர் வீணாக அகந்தையாகப் பாடுவதாகக் கருதக்கூடாது. கவிதை உணர்விலே கற்பனை போன போக்கிலே பாடிச் செல்வதாக நினைக்கக்கூடாது. குண்டலினி யோகத்தில் பலநிலைகளில் தோன்றும் அனுபவ வெளிப்பாட்டு உணர்வுகளாகவே***

*அவற்றை மதித்தல் வேண்டும். மெய்ப்பொருளோடு ஒன்றிவிட்ட ஒரு யோகியின் அனுபவ வெளிப் பாடுகளே அவை.'*[25] என்று த.ந.கணபதி குறிப்பிடுகிறார்,

**1.5 சித்தர் கொள்கைகள்**

*''சித்தர் மரபு என்பதும் சித்தர் கொள்கை என்பதும் ஒன்றோடொன்று முரண்பட்டனவல்ல. சித்தர் மரபு என்பது, சித்தர்களிடையே நிலவிய பெரும்போக்கைக் (Trend) குறிப்பது. சித்தர் கொள்கை என்பது அவர்களுடைய கருத்து நிலையைக் (idealogy) குறிப்பது என்பர்.''*[26]

ஆன்மீக வாதிகளைப் போல சமயக் கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டுப் பக்தி, கர்மம் முதலிய மார்க்கங்களின் மூலம், உருவ வழிபாடு செய்தும் தலையாத்திரை, தீர்த்த யாத்திரை முதலியவைகளை மேற்கொண்டும், வேதம் முதலிய புனித நூல்களை ஓதியும், காணக்கூடிய உலகத்திற்கு அப்பாற்பட்டு விளங்குவதான பேரின்ப உலகொன்றை அடையவேண்டும் என்றும் முயன்றவர்கள் அல்லர் சித்தர்கள். இவர்கள் இறைவனைத் தம்மினின்றும் புறத்தே இருப்பதாகக் கொள்ளவில்லை. இளந்தெங்கில் நீர் புகுந்தாற்போல, இறைவன் தம் உள்ளேயே குடிகொண்டவன் என்பது சித்தர் கொள்கையாகும். இதனை,

*"செய்யதெங்கிலே இளநீர் சேர்ந்தகார ணங்கள்போல்*
*ஐயன்வந்து என்னுளம் புகுந்துகோயில் கொண்டனன்*
*ஐயன்வந்து என்னுளம் புகுந்துகோயில் கொண்டபின்*
*வையகத்தில் மாந்தர் முன்னம் வாய்திறப்ப தில்லையே"*[27]

எனத் தேங்காய்க்கு உள்ளேயே இளநீர் இருப்பதுபோல நமக்குள்ளேயே இறைவன் இருக்கின்றான். எனவே உடலைக் கோயிலாகவும் உயிரைக் கடவுளாகவும் கருதுவது இவர்களின் கொள்கையாக உள்ளது. மேலும்,

*"மூலநாடி தன்னிலே முளைத்தெழுந்த சோதியை*
*ஆலம்உண்ட கண்டர்ஆணை அம்மைஆணை உண்மையே"*[28]

எனச் சிவவாக்கியர் தனக்குள்ளே இறைவனாகிய சோதியைக் கண்டதாக அம்மையப்பன் மீதே ஆணையிடுவதனைக் காணமுடிகின்றது. எனவே இறைவனை அறிவதற்கு அடைவதற்குச் சமயநெறிப்பட்ட வழிமுறைகள் எதுவுமே தேவையில்லை என்பது சித்தர் கொள்கையாக உள்ளதைக் காண்கிறோம்.

உயிரும் உடம்பும் ஒன்றே; உடம்பில்லாமல் உயிர்வாழ முடியாது. இரண்டும் தனித்தனியாக இயங்கமுடியாது. உடம்பிலே தோன்றி உடம்புடன் வாழ்வதே உயிராகும். உடம்பு அழிந்தால் உயிரும் அழிந்து போகும். ஆதலால் உடம்பைப் பாதுகாப்பதே உயிரைப் பாதுகாப்பதாகும் இதனைத் 'தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்' (திருமந்திரம்.1823) என்றும்,

*"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்*
*திடம்பட மெய்ஞானம் சேரவும் மாட்டார்*
*உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே*
*உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"*[29]

என்றும் திருமூலர் உடம்பின் முக்கியத்துவத்தை அறிந்த பின்பு உடம்போடு, உயிரையும் சேர்த்து வளர்த்தேன் என்கிறார். இதுபோன்று உடம்பினை அப்பழுக்கின்றி வைத்துக் காப்பதே சித்தர்களின் கொள்கையாக இருந்து வந்துள்ளது.

*"இவ்வுலகிலுள்ள ஆண்களும் பெண்களுமே உலகைப் படைப்பவர்கள், காப்பவர்கள், அழிப்பவர்கள். ஆண்பெண் கூட்டுறவாலும், சேர்க்கையாலும்தான் முத்தொழில்களும் நடைபெறுகின்றன. உலகத்துக்கு மூலகாரணம் 'சிவசக்தி'. இதில் சிவம் என்பது ஆண், சக்தி என்பது பெண். இவ்வுண்மையைக் காட்டவே சிவலிங்கங்கள் தோன்றின. லிங்கத்தின் அடிப்பாகம் சக்தியைக் குறிப்பது. மேலேயுள்ள குழவி போன்ற பகுதி சிவத்தைக் குறிப்பது. சிவமாகிய ஆணும், சக்தியாகிய பெண்ணும் சேர்ந்ததே சிவலிங்கம். உலக உற்பத்தியை உணர்த்தவே லிங்க உருவம் தோன்றியது. இதுவே சித்தர்களின் கொள்கை"*[30]

என்பார் சாமிசிதம்பரனார். பரமாத்மா எங்கும் தனியாக இல்லை. நமது உடம்புதான் பரமாத்மாவின் இடம். ஆதலால் கடவுளைத் தேடி எங்கும் அலைய வேண்டியதில்லை. உடம்பைப் பேணுவதே கடவுளுக்குச் செய்யும் பணி. எனவே, உடம்பினுள்ளேயே பரமாத்மாவைக் கண்டு மகிழ்தலும் சித்தர்களின் வழியாகும். இதனை,

*''உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்*
*உடம்பினில் உத்தமனைக் காண்''*[31]

என்னும் அவ்வையின் ஞானக்குறள் மூலம் தெளியலாம். உடம்பினைப் பெற்ற பயன் உடம்பினுள்ளே உத்தமனைக் காணமுடியும் என்பதே இதன் கருத்தாகும்.

மனித இனம் அனைத்தும் ஒரேயினம்; ஒரே சாதி; ஒரே தெய்வம் என்பதும் சித்தர் கொள்கையாக உள்ளது. இதனை,

*'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'*

என்ற திருமூலரின் கூற்று வெளிப்படுத்துகிறது.

சித்தர்கள், மானிடரில் சாதிவேற்றுமையைப் பலவாறாகத் தாக்கிப் பாடியுள்ளனர். சாதிவேற்றுமையைப் பாராட்டுவோனை மூடர்களென்றும், கொடியவர்கள் என்றும் கடிந்துள்ளனர்.

*"சாதிப் பிரிவினிலே தீயை மூட்டுவோம்"*[32]

என்பார் பாம்பாட்டிச் சித்தர். மேலும்,

*"சாதிபேதம் என்பதொன்று சற்றுமில்லை இல்லையே,"*[33]

*"சாதிபேதம் ஓதுகின்ற தன்மையென்ன தன்மையே"*[34]

என்பார் சிவவாக்கியர்.

மேற்கண்ட கூற்றுகளையெல்லாம் ஆராயும்போது உடம்புக்குள் உத்தமன் குடிகொண்டிருப்பதால் அதனைப் போற்றிப் பாதுகாக்க வேண்டும் என்பதும், மானிடரில் பிரிவினைகள் இல்லை, உயர் சாதி, கீழ்ச்சாதி என்ற பேதமில்லை; மனிதர்கள் அனைவரும் ஒரே இனம். இம்மானுட உலகம் முழுவதற்கும் ஒரேகடவுள் என்பதும் சித்தர்களின் கொள்கைகளாக இருந்துள்ளமையைத் தெளிய முடிகிறது.

**1.5.1. சித்தர்களின் புறத்தோற்றம்**

நடை உடை தோற்றம் செய்கைகளால் சித்தர்கள் மற்ற மனிதர்களிடமிருந்து வேறுபடுகின்றனர். சித்தர்கள் பலரும் சடைமுடியும், நீண்ட தாடியும், கழுவாத உடலும், கந்தல் உடையும் தாங்கியவர்களாக இருந்திருக்கின்றனர். ஆனால் சித்தர்களின் வெளித்தோற்றம் பற்றிப் பட்டினத்தார் கூறும்போது உடுத்தற்கு ஒரு கோவணம், உண்பதற்குக் காய்கனிகள், உறங்குவதற்கு ஒரு புறத்திண்ணை, வேர்த்தால்

குளிப்பதற்கு வெள்ளிய ஆற்றுநீர் எனச் சித்தர்கள் எளிய புறவாழ்வை மேற்கொண்டதாகக் கூறுகின்றார். இதனைப் பின்வரும் பாடலடிகள் மூலமாகத் தெளியலாம்.

*"உடைகோவணம் உண்டு உறங்கப் புறந்திண்ணையுண்டு உணவிங்கு*

*அடைக் காய் இலையுண்டு, அருந்தத் தண்ணீர் உண்டு"*[35]

என்பார் பட்டினத்தார். மேலும் சித்தர்களின் செயல்களைப் பற்றியும் அவர் பின்வரும் பாடலில் பட்டியலிடுகிறார்.

*"பேய்போல் திரிந்து பிணம்போல் கிடந்து இட்ட பிச்சையெல்லாம்*
*நாய்போல் அருந்தி நரிபோல் உழன்று நன்மங்கையரைத்*
*தாய்போல் கருதித் தமர்போல் அனைவர்க்கும் தாழ்மைசொல்லிச்*
*சேய்போல் இருப்பர் கண்டீர் உண்மைஞானம் தெளிந்தோரே"*[36]

எனச் சித்தர்கள் இடம் பொழுது பாராமல் பேய்போல் எங்கும் திரிவர்; எதையும் பொருட்படுத்தாது பிணம்போல் கிடப்பர்; நாய்போல் அருந்துவர்; நரிபோல் உழல்வர்; பெண்களைத் தாயாக எண்ணுவர்; மற்ற அனைவரையும் உறவினராக எண்ணிப் பரிவு காட்டுவர் என்று ஞானியர்களான சித்தர்களின் வெளித்தோற்றத்தையும் செயல்களையும் இப்பாடல் புலப்படுத்துகிறது. எனவே, சித்தன் என்பவன் பேயைப் போல் திரிபவன். செத்த பிணம் போல் கிடப்பவன்; தன்னைச் சுற்றி நடப்பது

எதைப்பற்றியும் அறியாதிருப்பவன்; உணவு என்று இடப்படுவதை நாயைப்போல் உண்பவன்; தன் இந்திரியங்களை அடக்கி ஆள்பவன்; நன்றி உள்ளவன்; நரியைப்போல் இயங்குபவன்; சுறுசுறுப்பாய் இருப்பவன்; தான் என்பதன் சிறுமையை உணர்ந்தவன்; எல்லாப் பெண்களையும் தன் தாயாகப் பாவிப்பவன்; எல்லாரிடமும் குண்டலினி சக்தியைக் கண்டு மதிப்பவன்; எல்லோரையும் நண்பர்களாகக் கருதுபவன்; ஆன்ம நெறியிலே பிறருக்கு உற்றுழி உதவும் வழிகாட்டியாக விளங்குபவன்; குழந்தையைப் போன்று எளிமையானவன்; மிகுந்த எளிமையும், குற்றமற்ற தன்மையும் கொண்டவன். அத்தகைய பண்புகள் ஒருவருக்குக் கைவரும் நாள் என்றோ என்று பத்திரகிரியாரும் புலம்புகிறார்.

*''பேய்போல் திரிந்து பிணம்போல் கிடந்து பெண்ணைத்*
*தாய்போல் நினைத்துத் தவம் முடிப்ப தெக்காலம்''*[37]

என்று அவர் ஏங்குகிறார்.''

ஒளிக் கதிர்களால், மந்திரவோசையால், மருந்தினால் உடம்பினைப் பேணிக்காப்பது எப்படியென்று சித்தர்கள் அறிந்ததனால் சித்த தேகமாகிய தூய தேகத்தைப் பெற்றனர். இந்தச்சித்த தேகத்தை அடையும்போது அந்த உடம்பிலுள்ள ரோமங்கள்கூட ஒளியைச் சிந்தும் என்று திருமூலரின் பாடல் கூறுகிறது. இதனை,

*"உருக்கிய ரோமம் ஒளிவிடுந் தானே" (திருமந்திரம்.6393)*

என்ற பாடலடி தெளிவாக்குகிறது. மற்றுமோர் இடத்தில் சித்தர்கள் அல்லது சிவயோகிகளை இந்த உடலோடே முக்தியடைந்தவர்கள் என்றும், சிவானுபவத்தைப் பெற்றவர்கள் என்றும் திருமூலர் வரையறுக்கின்றார்.

*"................... உடம்போடு*

*செத்திட் டிருப்பர் சிவயோகி யார்களே"[38]*

என்று சித்தர்களின் வெளித்தோற்றத்தைப் பற்றித் திருமூலரும் கூறியிருப்பது அவர்தம் பாடல்வழி புலனாகிறது.

**1.6. சித்தர்கள் சாடும் மூடநம்பிக்கைகள்**

கடவுள் பெயரால் நடத்தப்படுகின்ற தேர்த்திருவிழாக்களையும் உருவ வழிபாடுகளையும் சித்தர்கள் கண்டித்துப் பாடியிருக்கின்றனர். இவை அறிவற்ற செயல்கள் எனச் சாடியிருக்கின்றனர்.

*"ஊரிலுள்ள மனிதர்காள் ஒருமனதாய்க் கூடியே*

*தேரிலே வடத்தைவிட்டுச் செம்பைவைத்து இழுக்கிறீர்"[39]*

என்று சிவவாக்கியர், ஒரு போர்க்களத்தைப் போன்று மக்கள் கூடித் தேரினை இழுப்பதனால் எல்லாம் இறைவனை அடைய முடியாது என்பார். மேலும்,

*''செம்மைசேர் மரத்திலே சிலைதலைகள் செய்கிறீர்''*[40]

என்றும்,

*''கல்லுவெள்ளி, செம்பிரும்பு காய்ந்திடும் தராக்களில்*
*வல்லதேவ ரூபபேதம் அங்கு அமைத்துப் போற்றிடில்*
*தொல்லையற்று இடம்பெரும் சுகந்தருமோ சொல்லுவீர்''*[41]

என்றும்,

*'எங்கள்தேவர் உங்கள்தேவர் என்றிரண்டு தேவரோ?'*[42]

என்றும்,

*''செங்கலும் கருங்கலும் சிவந்தசாதி லிங்கமும்*
*செம்பிலும் தராவிலும் சிவனிருப்பன் என்கிறீர்''*[43]

என்றும், சிவவாக்கியர் குறிப்பிடுகின்றார். அவர் தேர்இழுப்பதையும், உருவச்சிலை அமைத்து வழிபடுவதனையும், ஆரவாரப் பூசைகளையும் செய்தால் அது அறிவற்றவர்களின் மூடச்செயல் எனச் சாடுவதனைப் பார்க்க முடிகிறது.

*'கல்லினைச் செம்பினைக் கட்டையைக் கும்பிடல் புல்லறிவாகும்டி'*

என்று குதம்பைச் சித்தரும் கூறுகிறார்.

எனவே சாதி சமயங்கள் மக்களை அடிமைகளாகவும், அறிவற்றவர்களாகவும் ஆக்குவதைக் கண்ட சித்தர்கள் உளம்

கொதித்தனர். மக்களிடையே மத-சாத்திர-சடங்குகளில் காணப்படுகின்ற மூடப்பழக்கங்களைத் துணிவுடன் எடுத்துக் கூறினர்.

பொய், சூது, கொலை, குடி, கூடாவொழுக்கம் முதலியவற்றையும் சித்தர்கள் வன்மையாகக் கண்டித்தனர். கூடா ஒழுக்கம், உடல் நோயை உண்டாக்கும். நல்வாழ்வுக்கு உலைவைக்கும் என்று கூறியிருக்கின்றனர். ஒழுக்கமே உடலுக்கும் உள்ளத்துக்கும் வலிமை சேர்க்கும். நீண்டநாள் வாழ்வதற்கும் சிறந்த வழிவகுக்கும் என்று சித்தர்கள் வலியுறுத்துகின்றனர்.

**1.6.1. சித்தர்களின் மொழியாளுமை**

'சித்தர் பாடல்கள் பாமர மக்களின் மொழியையே ஆளுகின்றன. நாம் இன்று சித்தர் பாடல்கள் என்று அறிவனவெல்லாம் சித்தர்களால் கைப்பட எழுதிவைக்கப்பட்டவை அல்ல. இவை ஏறத்தாழப் பதினைந்தாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் பனைவோலைகளில் எழுதப்பெற்று, பின் அண்மைக் காலங்களில் அச்சுக்கு வந்தவை. அதற்கு முந்தைய காலங்களில் இவை செவிவழிச் செய்திகளாகக் காற்றில் உலவி வந்தன. இத்தகையவற்றைத் தமிழ்மொழி எழுதாக்கிளவி அல்லது வாய்மொழி வழக்கு என்று வழங்குகிறது.'[44]

சித்தர் பாடல்களில் சொன்ன செய்தியையே சிறிய வேறுபாடுகளுடன் திரும்பவும் சொல்வது போன்ற குறைபாட்டுக்

கெல்லாம் காரணம் அது வாய்மொழி வழக்காகவே நெடுங்காலம் வழங்கி வந்திருப்பதுதான். ஒருவர் இன்னொருவருக்குச் சொல்லும்போது சொற்கள் சிதைவதும் சொல்கிறவரின் சொந்தச் சரக்கும் அதில் சேர்வதும் இயல்பு என்கிறார் த.ந. கணபதி.

''எதிர்ப்புப் போக்குடையவர்களின் அபாயம் கருதியே சித்தர்கள் தங்கள் பாடல்களைப் பாமரர்களின் மொழியில் எழுதிவைத்தார்களோ என்றுகூட எண்ண இடமளிக்கிறது. சித்தர்கள் பயன்படுத்திய இந்த மொழி ஒப்பனையற்ற கடுமையான, முகம்சுளிக்க வைக்கிற, பேச்சு வழக்கு மொழியாகுமென்றும், சேரிமொழியென்றும் அறிஞர்கள் கூறுவதாகத் த.ந. கணபதி குறிப்பிடுகின்றார்.''[45]

மக்களுக்குப் பழக்கமான தமிழை, மக்களுக்குப் பழக்கமான சந்தங்களில் பயன்படுத்தும் சித்தர்களின் இந்த இயல்பை 'விளையாட்டுப் போக்கில் ஆன்மீகம் கற்பிக்கும் முயற்சி' என்று தெ. பொ.மீ. குறிப்பிடுகிறார். தற்கால அரசுப் பள்ளிகளின் மொழியில் சொன்னால் இது ''கற்றலில் இனிமை'' சேர்க்கும் முயற்சி என்பர். நாட்டுப்புற வழக்குமொழியை இலக்கிய வாகனத்தில் ஏற்றியதன் மூலம் சித்தர்கள் அதற்கு நிலையான இலக்கிய அங்கீகாரம் பெற்றுத் தந்திருக்கின்றனர் என்பதுடன் தமிழ் இலக்கியத்துக்கும் புதிய பரிமாணம் சேர்ந்திருக்கிறார்கள் என்பார் த.ந. கணபதி.

**1.6.2. சித்தர் பாடல்கள் போற்றப்படாமைக் துக் காரணம்**

சித்தர் பாடல்கள் அண்மைக் காலம் வரையில் வாய்மொழி இலக்கியமாகவும், நாட்டுப்புற மக்களின் பாடல்களாகவுமே இருந்திருக்கின்றன. அவை இலக்கியப் படைப்புகளாக ஏற்றுப் போற்றப்படவில்லை. அறநெறி நூல்களாகவும் ஏற்கும்நிலை எட்டப்படவில்லையென்றே கூறலாம். அதற்கான காரணங்களை அறிஞர் பலரும் பல்வேறு விதமாக எடுத்துக் கூறியுள்ளனர்.

''சித்தர் பாடல்கள் என்று, இன்று நமக்குக் கிடைக்கும் இலக்கியங்கள் அனைத்தும் எந்தத் துறையைச் சார்ந்ததாக இருப்பினும் அவ்வவ் ஆசிரியரால் இயற்றப்பட்டனவல்ல. செவிவழியாக வந்த சித்தர் கருத்துக்களை அண்மைக் காலத்தில்தான் உலகுக்கு உணர்த்த வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்கள் பாடல்களாகப் பாடி அச்சேற்றினர்''[46] என்று சித்தர் பாடல்களின் எளிமையினைக் கருத்தினில் கொண்டு இரா. மாணிக்கவாசகனார் கருதுகிறார்

''வேதமரபினரைப் போலச் சைவ சித்தாந்திகளும் சித்தர்களைத் தீண்டத்தகாதவர்களாகவே கருதினார்கள். சித்தர்களின் கருத்துக்கள் தங்களின் தோத்திர நூல்களிலும் சாத்திர நூல்களிலும் இடம் பெறாமல் பார்த்துக்கொண்டார்கள் என்றும், சித்தர்களின் நடைமுறைத் தமிழ், சங்கத்தமிழுக்கு மாபெரும் அநீதி இழைத்துவிட்டது என்றும்

பூரணலிங்கம்பிள்ளை வருத்தம் தெரிவிப்பதாகத் த.ந.கணபதி தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.’[47]

மேலும், ‘‘சித்தர் இலக்கியம் சைவ வைணவத் திருமுறை இலக்கியங்களுக்கு மிகவும் கீழானது என்றும், பெரும்பாலான சித்தர்கள் போலிகள் என்றும், அறிவுக் களவாளிகள் என்றும், கஞ்சாக்குடியர்கள் என்றும், இந்துசமயத்தைக் களங்கப்படுத்த வந்தவர்கள் என்றும், சைவத்தைக் கடுமையாகப் பின்பற்றுகின்ற பண்டார சந்நிதிகள் சிலர் சித்தர் பாடல்களைத் தேடிப்பிடித்து அழித்ததாகவும் இரா. மாணிக்கவாசகனார் தம் நூலில் குறிப்பிடுகிறார்.’’[48]

அரசியல் ஆதரவும் சமயச் சார்பும் உடைய இலக்கியங்கள் அன்று ஆள்வோராலும் அறிஞர்களாலும் பேணிக்காக்கப்பட்டன. அவை பெருமளவில் மக்களிடையே பரப்பப்பட்டன. சித்தர் பாடல்கள் மன்னர்களைப் பற்றியதாகவோ சாத்திர வழிபாடுகள் பற்றியதாகவோ அமையவில்லை. எனவே ஆள்வோரும் அன்றைக்குப் பெரும்பான்மையும் கல்வி கற்றிருந்தவர்கள் என்று கூறிக்கொண்டோரும் சித்தர் பாடல்களை மக்களிடையே பரப்ப முன்வரவில்லை.

சாத்திரச் சடங்குகளை எதிர்த்ததால், மூடப்பழக்கங்களைச் சுட்டிக் காட்டியதால், சமூக அநீதியை எடுத்துக் கூறியதால் அன்று உயர்நிலையில்

இருந்தவர்கள் சித்தர்களை எதிரியாகக் கருதினர். இதுபோன்ற பல்வேறு காரணங்களால் சித்தர் பாடல்களும், கோட்பாடுகளும், படித்தவர் களிடமும், பண்பாளர்களிடமும் அங்கீகாரம் பெறமுடியாமல் போனது.

''சமயச் சார்புடைய பக்தி இலக்கியங்களும் சமண, பவுத்த காப்பியங்களும், நூல்களும் சமய ஆதரவாளர்களால் காலந்தோறும் பாதுகாக்கப்பட்டு மக்களிடையே பரப்பப்பட்டன. ஆனால், சமயச் சடங்குகளை இழித்தும் பழித்தும் எதிர்த்தும் உரைத்த சித்தர் பாடல்கள் பாதுகாப்பாரற்று இருளில் மூழ்கின. சித்தர்களை நாத்திகர் என்றும், சித்தர் பாடல்கள் நாத்திகம் சார்ந்த கருத்துக்களையே உரைக்கின்றன என்றும் பொய்யுரைத்துச் சித்தர்களையும் சித்தர் பாடல்களையும் விலக்கிவைத்திருந்தனர்''[49] என்பார் க. நாராயணன்.

''சித்தர் பாடல்கள் பேணப்படாமலும் சித்தர் வரலாறு அறியப்படாமலும் போனமைக்கு அவர்கள் பாடல்களில் அமைந்துள்ள வேத, புராண, சமய, சாத்திர எதிர்ப்பும், பிராமண எதிர்ப்புமே போதுமானவை. மக்களுக்கு விழிப்புணர்வையும் பகுத்தறிவுச் சிந்தனைகளையும் ஏற்படுத்துகின்ற பாடல்களை அவற்றை நம்பும் பிராமணர் எவ்விதம் ஏற்பர். ஏற்காமலே பரப்பாமலே விட்டுவிட்டனர்''[50] என்பதும் எண்ணத்தக்கதாகும்.

‘நூல்கள் அழிந்து போகாமல் இருக்கவும் பாதுகாக்கவும் ஏதாவது ஒரு சமயப் பாதுகாப்புத் தேவை. சித்தர் இலக்கியம் எந்தச் சமயப் பாதுகாப்பும் பெறவில்லை. சித்தர்கள் சிவனைத் தெய்வமாகக் கொண்டபோதும் அவர்கள் சைவர்கள் அல்லர். சித்தர்களைத் திருமுறைகளில் ஈடுபாடு கொண்டவர்களாய் அவர்கள் பாடல்கள் தெரிவிக்கவில்லை. அதேபோல் சைவ மடங்களின் நுழைவு வாயிலைக் கூடச் சித்தர் நூல்கள் தொட்டுப்பார்க்கவில்லை என்பார்’[51] சா. மாடசாமி.

‘‘சித்தர் பாடல்கள் பல, மறைபொருள் உடையவை. அவற்றில் குழூஉக்குறிச் சொற்கள் பெருமளவில் பயிலப்பட்டு வருகின்றன. வெறும் மொழியறிவைக் கொண்டு சித்தர் பாடல்களுக்குப் பொருள்காண இயலாது. சித்தர் பாடல்களில் ஆர்வமும் ஈடுபாடும் கொண்டோரால் மட்டுமே சித்தர் பாடல்களுக்குப் பொருளறியக் கூடும். எனவே பொருள்புரியாச் சித்தர் பாடல்களைப் போற்றிப் பாதுகாக்கப் பெரும்பான்மையோர் ஆர்வம் காட்டவில்லை.’’[52]

தற்காலத்தில் தமிழகத்தில் கல்வி கற்றோர் பெருகி அச்சுப் பதிப்பும் மிகுந்த பின்னர் எல்லோருக்கும் கல்வி என்ற நிலை வந்த பிறகு அனைத்து இலக்கியங்களையும் மக்கள் கற்றனர். சித்தர் பாடல்களில் காணக்கிடக்கும் பல அரிய செய்திகளை அறிந்திடவும், அதனை மக்களிடையே பரப்பிடவும் ஏராளமானோர் முனைந்து பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டு வருவதனைப் பார்க்க முடிகின்றது.

## 1.7. சித்தர்களின் குறியீட்டு மொழி

சித்தர்களின் கோட்பாடுகள் மற்ற சமயவாதிகளிடமும், மன்னர்களிடமும் நம்பிக்கையும் அங்கீகாரமும் பெறமுடியாமல் போனதற்கு அவர்களுடைய குறியீட்டுமொழிப் பயன்பாடும் ஒரு காரணம் என்பர். இந்த மொழியைச் சித்தர்களின் ஏமாற்றுவேலை என்றும், இரக்கமற்ற மொழி என்றும், உள்ளே ஒன்றை வைத்து வெளியே ஒன்றைப் பேசுகிறது என்றும், சித்தர்களின் மொழியை அப்படியே பொருள்கொள்வது பனியை நம்பி உழுதவன் கதை போன்றது என்றும் ஞானபோதகம் என்ற நூல் குறிப்பிடுகிறது.

''சித்தர்களின் இந்த வேலைக்குக் காரணம் தங்கள் கருத்துக்களைத் தகுதியற்றவர்களுக்குக் கொடுக்க விரும்பாததால் அவற்றைக் குறியீட்டு மொழியில் பொதிந்துவைத்தார்கள். அதேசமயம் அவை தகுதியானவர்களுக்குப் போய்ச் சேரவேண்டும் என்றும் நினைத்தார்கள். அதாவது அந்தப் பாடல்கள் புழக்கத்திலும் இருக்க வேண்டும், அதேநேரம் தகுதியற்றவர்களுக்கு விளங்காதபடியும் அமையவேண்டும். ஆகவேதான் இத்தகு மொழியை அவர்கள் கையாள்கிறார்கள். எளிய மொழி, இனிய சந்தம், வேட்கையைத் தூண்டும் பாலுறவுச் சொல்லாடல்கள் இவையெல்லாம் பாமரர்களிடையே பிரபலம் அடையப் பயன்பட்டன என்பார்''[53] த.ந. கணபதி.

இதன் மூலம் நல்லெண்ணம் கொண்டோர்க்கும், பொதுநலன் கொண்ட சமூகச் சிந்தனை உடையோர்க்கும், சொல்லிய கருத்தையேற்றுப் பின்பற்றிப் போற்றுவோர்க்கும் சென்று சேரவேண்டும் என்று கருதியே குறியீட்டு மொழியைச் சித்தர்கள் பயன்படுத்தியுள்ளனர் என்பது தெளிவாகிறது.

### 1.7.1. மருத்துவத் துறையில் சித்தர்கள்

சித்தர் நூல்களுள் மருத்துவத் தொழிலுக்குத் தேவையான, மருந்தியல் தொடர்புடைய நூல்கள் மட்டுமே சித்த மருத்துவர்களால் பரம்பரையாகப் பேணிப் பாதுகாக்கப்பட்டன. யோக ஞானநூல்கள் தொழில்செய்யவோ, வருவாய் ஈட்டவோ பயன்படாமையால் அவற்றைக் காக்கவோ நினைவில் கொள்ளவோ மக்கள் ஈடுபடவில்லை என்று எண்ண இடமளிக்கின்றது.

இருபதாம் நூற்றாண்டில் சித்தர்கள் கூறியுள்ள யோகநிலை எனும் கலையில் மனப்பயிற்சி, உடற்பயிற்சி, மூச்சுப்பயிற்சி முதலிய பயிற்சிகள் கற்றுத்தரப்படுகின்றன. அப்பயிற்சிகள் இன்றைக்கு இயந்திரம் போன்று வாழ்கின்ற மக்களுக்கும், பல்வேறு மன உளைச்சலுக்கு ஆளாகியிருக்கின்றவர்களுக்கும் பெரிதும் நலம் பயப்பனவாக விளங்குகின்றன. வருவாய் ஈட்டித்தருகின்ற தொழிலாகவும் இன்று மாறியுள்ளது. எனவே நாடென்ன, உலகம் முழுவதும் பல்வேறு யோகப் பயிற்சி மையங்கள் உருவாகி வருவதனைக் கண்கூடாகக் காணமுடிகின்றது.

யோகாப் பயிற்சிக்குச் செல்வதனால் பலவித நோய்களும் குணமாகின்றன என்று மக்கள் நம்புகின்றனர். இதன்மூலம் சித்தர்கள் எழுதிவிட்டுச் சென்ற கலைகளுக்கு, யோகாப் பயிற்சிகளுக்குப் பெரும்வரவேற்பு இருப்பது 21 ஆம் நூற்றாண்டிலும் தொடர்கிறது.

**1.8. சித்தர்களின் காலம்**

தமிழகத்தில் சித்தர்களின் தோற்றக் காலம் என்பது பல்வேறு கருத்துக்களுக்கு உட்பட்ட களமாக விளங்குகிறது. அவர்கள் மிக நீண்டகாலம் வாழ்ந்திருக்க வேண்டும் என்பதை மட்டும் உணர முடிகின்றது. இதனை,

*''நிலந்தொட்டுப் புகாஅர் வானம் மேறார்*
*விலங்கிரு முந்நீர் காலிற் செல்லார்*
*நாட்டி னாட்டி னூரி னூரிற்*
*குடிமுறை குடிமுறை தேரிற்*
*கெடுநரு முளரோநங் காத லோரே''* (குறுந்.130)

என்ற குறுந்தொகைப் பாடலில் காணமுடிகின்றது. நிலத்தினுள் உறைதல், வானத்தில் மறைதல், கடலின்மீது நடத்தல் என்னும் கருத்துகள் அட்டமா சித்திகளுள் அடங்கும். இக்கருத்துக்களை வைத்துத் தமிழகத்தில் சித்தர் மரபு சங்க காலந்தொட்டே நிலவி வருகிறது என்பர்.''[54]

மேற்குறித்த வெள்ளிவீதியாரின் பாடல் தலைவனது பிரிவால் வருந்திய தலைவியைத் தோழி தேற் றும் வகையில் அமைந்துள்ளது. தலைவன் நிலத்தைத் தோண்டி அத்னுள்ளே சென்றுவிடமாட்டான்; ஆகாயத்தில் ஏறி மறைந்துவிடமாட்டான்; பெருங்கடலைக் காலால் கடந்து போய்விடவும் முடியாது. அவன் இந்நிலவுலகிலே ஏதோவொரு நாட்டில் ஏதோ ஒரு ஊரில் ஏதோ ஒரு வீட்டில்தான் இருப்பான். தன் வினை முடிந்ததும் திரும்ப வருவான். எனவே நீ கவலைப்படாதே என்று கூறுகிறாள். நிலந்தொட்டுப் புகல், வானமேறல், கடல் நீரின்மேல் காலால் நடந்து கடத்தல் போன்ற சாதாரண மானுடச் செயல்களால் அல்ல. அவை சித்தர்களின் சித்து விளையாடல்கள் என்று சங்ககாலத்திலேயே மக்களால் பேசப்பட்டு வந்திருக்கின்றன என்பது நன்கு புலனாகிறது.

தமிழ் இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் ‘சித்தர் இலக்கியம் கி.பி.ஐந்தாம் நூற்றாண்டில் தொடங்கியிருக்கலாம் எனக் கருதுகிறார்கள்.’[55]

‘தமிழகத்தில் சித்தர் என்ற சொல்லாட்சியையும் சித்தர் மரபுகளையும் முதன்முதலில் திருமூலரின் திருமந்திரத்திலேயே காண முடிகிறது. திருமூலரின் இயற்பெயர் கைலாயம் என்றும், இயற்பெயர் நாதன் என்றும் பெரியபுராணம் குறிப்பிடுகின்றது. எனவே இவருடைய காலம் கி.பி.6ஆம் நூற்றாண்டு என்று கணிக்கப்பட்டுள்ளது.’[56] எனவே,

தமிழகச் சித்தர் மரபின் வரலாற்றைத் திருமூலரிலிருந்தே தொடங்க வேண்டும் என்பது புலனாகிறது.

'திருமூலரையடுத்து ஒரு நீண்ட இடைவெளிக்குப் பிறகே மீண்டும் சித்தர் பற்றிய செய்திகளை அறிய முடிகிறது. கி.பி.14ஆம் நூற்றாண்டு முதற்கொண்டே சித்தர்களின் வரலாறு தொடர்ச்சியாக அமைந்து வருகிறது. சிவவாக்கியர் வாழ்ந்தகாலம் கி.பி.14ஆம் நூற்றாண்டு. இதே நூற்றாண்டில் பட்டினத்தார், பத்திரகிரியார், ஔவையார் முதலிய சித்தர்கள் வாழ்ந்துள்ளனர். இவர்களைத் தொடர்ந்து 15ஆம் நூற்றாண்டில் அகப்பேய், அழுகுணி, இடைக்காடர், கடுவெளி, குதம்பை, பாம்பாட்டி முதலியோர் வாழ்ந்துள்ளனர். இவர்கள் அனைவருமே ஞானசித்தி அல்லது யோகச்சித்தி மரபினர் ஆவர்.'[56]

''ஞானசித்தி என்பது புறவுலகைப் புறக்கணித்து, அகவுலகை வேண்டியவர்கள். ஐம்பூதங்களுள் காற்றையே முதன்மையாகக் கொண்டவர்கள். மனிதனுக்கு மூலாதாரமாய் இருப்பது காற்றே - சுவாசமே இதுவே உயிர். இச்சுவாசத்தை வெளியேவிடாமல் தன்னுள்ளே அடக்கிப் பாதுகாத்து மரணமிலாப் பெருவாழ்வு கிட்டிப் பேரின்பத்தில் திளைத்தவர்கள். தன்னுள் தான் ஒடுங்கி தன்னுள்ளேயே லயிப்பது ஞானசித்தி அல்லது யோகசித்தி என்பர்.''[57]

"15-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு சித்தர் என்ற பெயரில் ஏராளமானோர் வாழ்ந்துள்ளனர். இக்காலகட்டத்தில் ஞானசித்தியை விட காயசித்தியைப் பற்றிக் கூறும் மருத்துவ, நாடி சாத்திர, வான சாத்திர, நூல்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. எனவே சித்தர் வரலாற்றில் கி.பி.14, 15 ஆம் நூற்றாண்டு வரையுள்ள காலகட்டத்தில் ஞானச்சித்தர் மரபு செல்வாக்குப் பெற்றிருந்ததையும் 16ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு காயச்சித்தர் மரபு வளர்ந்து வந்துள்ளமையையும் அறிய முடிகிறது."[58]

எனவே மேற்கண்ட கூற்றுகள் மூலம் ஞானசித்தர்கள் என்பவர்கள் உயிர்ப்புக் காற்றினை உள்ளேயே அடக்கி, சிந்தை ஒடுங்கி, சமாதிநிலையை அடைவர். இவர்கள் இந்நிலையைத் தூங்காமல் தூங்குதல் மாளாமல் மாளுதல் என்றெல்லாம் வருணிக்கின்றனர். இவர்கள் உயிரைக் கடவுளாகக் கருதினர். காயசித்தர்கள் உடலைக் கடவுளாகக் கருதி உடலுக்கு முக்கியத்துவம் அளித்து அதனைப் பேணும் வழியாக மருத்துவம் தொடர்புள்ள பலதுறைகளில் கவனத்தைச் செலுத்தினர். இவர்கள் உடலைப் பேணுவதற்கு உதவும் மூலிகைகளையும், மருந்து செய்முறைகளையுமே கூறிச்சென்றுள்ளனர். அகத்தியர், போகர், தேரையர், யூகிமுனி, புலிப்பாணி, புலத்தியர், மச்சமுனி, கோரக்கர், தன்வந்திரி, ரோகமுனி, காகபுசுண்டர், புண்ணாக்கீசர் முதலியோர் காயச்சித்தர் மரபில் குறிப்பிடத் தகுந்தவர்கள் ஆவர்.

**1.9. சித்தர்கள் எண்ணிக்கை**

சித்தர்கள் எண்ணிக்கையில் எண்ணிலடங்காதோராக இருந்த போதிலும் தமிழகச் சித்தர்களைப் பதினெட்டுப் பேர்களாகக் கொண்டு 'பதினெண் சித்தர்' என எண் அடைசாற்றி வழங்குவது பொதுவான வழக்கமாக உள்ளது.

*திருமூலர், இராமதேவர், கும்பமுனி, இடைக்காடர், தன்வந்திரி, வான்மீகி, கமலமுனி, போகநாதர், குதம்பைச்சித்தர், மச்சமுனி, கொங்கணர், பதஞ்சலி, நந்திதேவர், போதகுரு, பாம்பாட்டிச் சித்தர், சட்டைமுனி, அந்தரானந்தத் தேவர், கோரக்கர்*

எனத் திருமூலரை முதலாகவும் கோரக்கரை இறுதியாகவும் கொண்ட பதினெண் சித்தர் பெயர்ப்பட்டியல் ஒன்றைச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகராதி தருகிறது.

பெரிய ஞானக் கோவை நாற்பதுக்கும் மேற்பட்ட சித்தர்களைப் பட்டியலிடுகிறது.

1. காலாங்கி 2. கமலநாதர் 3. கலசநாதர் 4. யூகி 5. கருணானந்தர் 6. போகர் 7. சட்டைநாதர் 8. பதஞ்சலி 9. கோரக்கர் 10. பவணந்தி 11. புலிப்பாணி 12. அழுகணி 13. பாம்பாட்டி 14. இடைக்காட்டுச் சித்தர் 15. கௌசிகர் 16. வசிட்டர் 17. பிரம்மமுனி 18. விநாயகர் 19. தன்வந்திரி 20. சட்டைமுனி 21. புண்ணாக்கீசர் 22. நந்தீசர் 23.

அகப்பேய் 24. கொங்கணர் 25. மச்சமுனி 26. குருபாதநாதர் 27. பரத்துவாசர் 28. கூன்தண்ணீர் 29. கடுவெளி 30. ரோமரிசி 31. காகபுசுண்டர் 32. பராசரர் 33. தேரையர் 34. புலத்தியர் 35. சுந்தரானந்தர் 36. திருமூலர் 37. கருவூரார் 38. சிவவாக்கியர் 39. தொழுகண் 40. சத்யநாதர் 41. சகோதநாதர் 42. ஆதிநாதர் 43. அனாதிநாதர் 44. வகுளிநாதர் 45. மதங்கநாதர் 46. மச்சேந்திரநாதர் 47. கஜேந்திரநாதர் 48. கோரக்கநாதர் 49. அஷ்டவசுக்கள் 50. சப்தரிஷிகள்[59] எனச் சித்தர் பெயர்ப்பட்டியல் பலவாறு நீண்டு செல்கிறது. மேலும் "திருவண்ணாமலையில் 205 சித்தர்கள் இருந்ததாக அறியமுடிகின்றது. அத்திரிமகரிசி, மச்சமுனி, கோரக்கர், கிராமதேவர், துர்வாசர், சட்டைமுனிவர், அகத்தியர், போகர், புசுண்டர், கவுதமர், தொழுகன்னிச்சித்தர்... என இருநூற்றியைந்து சித்தர்களின் பெயர்ப்பட்டியலைத் தருகின்றது. இது தவிர இன்னும் 150 மகாசித்தர்களும் திருவண்ணாமலையில் உலா வருவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.[60]

திருவண்ணாமலையில் மட்டும் இத்துணை சித்தர்கள் என்றால் மீதமுள்ள மலைகளில் எத்தனை சித்தர்கள் வாழ்ந்திருக்கக்கூடும் என்ற வியப்பு ஏற்படுகிறது. எனவே சித்தர்கள் எண்ணிக்கை கணக்கில் அடங்காது என்பது மட்டும் உறுதியாகின்றது.

**1.10. பதினெட்டு என்று பெயர் வந்தமைக்கான காரணம்**

இந்திய மக்களிடையே பதினெட்டு என்ற எண் மிகவும் பிரபலமாக வழங்கிவரும் எண்ணாகும்.

***"செங்குட்டுவன், கனக விசயன் போர் - 18 நாழிகையும்***
***பாண்டவர் மற்றும் கவுரவர் போர் - 18 நாளும்***
***இராமர், இராவணன் போர் - 18 மாதமும்***
***தேவர், அசுரர் போர் - 18 ஆண்டும்***

நடந்தனவென்று சொல்லப்படுகிறது. ஆயின் தமிழ் ஆரியப் போரோ பதினெண் நூற்றாண்டு நடந்துவந்தும் இன்னும் முடிந்தபாடில்லை என்பார் தேவநேயப் பாவாணர்."[61] மேலும்,

***பதினென் மேற்கணக்கு நூல்கள் - 18***
***பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் - 18***
***தமிழில் மெய்யெழுத்துக்கள் - 18***

என்று பெரும்பாலானவற்றைப் பதினெட்டு என எண்ணிக்கைப் படுத்திக் கூறும் மரபு இருந்திருப்பது தெளிவாகிறது.

பதினெட்டுத் தரும சாத்திரங்கள், பதினெட்டு யுகங்கள், பதினெட்டுக் குற்றங்கள் பதினெட்டு வகை இசைக் கருவிகள், பதினெட்டு ஆகமங்கள், பதினெட்டுத் தேவர்கள், பதினெட்டுக் கனங்கள், பதினெட்டுப் புராணங்கள் என்று பலவும் பதினெட்டு என்ற எண்ணிக்கையில் வருவதனைக் காண முடிகிறது.

*"பதினெட்டுப் பேர் எனக் குறித்ததன் நோக்கம் ஒருவேளை சித்தர் கூட்டம் எனக் கணக்கெடுக்கப்பட்ட காலத்தில் பதினெட்டுப் பேர் மட்டும் இருந்திருக்கலாம். அதுவே மரபாக வந்திருக்கலாம் அல்லது சித்தர் கூட்டத்தில் சிறப்போடு விளங்கியவர்கள் பதினெட்டுப் பேராக இருந்திருக்கலாம்"*[62]

என்றே கருதவேண்டியுள்ளது என்பார் இரா. மாணிக்கவாசகம்.

சோதிடத்தில் 9 என்ற எண் கேதுவைக் குறிக்கிறது. அது ஞானத்தைக் குறிக்கும் ஒருகோளாகும். 18 என்ற எண்ணில் ஒன்றையும் எட்டையும் கூட்டினால் வருவது ஒன்பதாகிறது. எனவே 18 என்ற எண்ணும் உயர்ந்த ஞானத்தை உடையதாகக் கருதப்படுகிறது. எனவேதான் 'பதினெண் சித்தர்கள்' என்று குறிப்பிடும்போது உயர்ந்த ஞானத்தைக் கொண்ட சித்தர்கள் என்று பொருள்படுவதாக இரா. மாணிக்கவாசகம் கருதுகிறார்.

"சோதிடர் காழியூர் நாராயணன் 18 என்ற எண்ணிற்கு ஒரு விளக்கம் தருகிறார். பதினெட்டில், ஒன்றையும் எட்டையும் கூட்டினால் ஒன்பது வரும். இந்த 9-ஆதியும் அந்தமும் இல்லாத எண். ஒற்றை இலக்கத்தில் கடைசி எண்ணாக இருந்தாலும், எண் கணித சோதிடத்தில் தலைமை எண்ணாக இதுதான் திகழ்கிறது என்கிறார். மேலும் நவதானியங்கள், நவ பாஷாணங்கள், நவரசங்கள், நவகிரகங்கள் என்பன

ஒன்பதிலே பெயர்சூட்டப்பட்டிருப்பதனை அவர் சுட்டிக் காட்டுகிறார். மேலும், ஒன்பதாம் வாய்பாட்டில் வருகின்ற விடைகளைக் கூட்டினால் ஒன்பதாகவே வரும் (1x9:9) (2x9:18) ( 3x9:27). இவ்வாறு 18, 27, 36, 45, 54, 63, 72, 81, 90, 99, 108, 117 என இவைகளைக் கூட்டினால் ஒன்பதாகவே வருவதாக அவர் சுட்டிக் காட்டுகிறார்.''[63]

ஒன்பதாம் எண்ணோடு எந்த எண்ணைப் பெருக்கினாலும் வரும் விடையின் கூட்டுத்தொகை ஒன்பதுதான் வரும் (9x5:45) (9x8:72). இந்தக் கணித நுட்பத்தை அவர் தனது சோதிடக் கலைக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கிறார் என்பது நன்கு புலனாகிறது.

மேற்கண்ட பல்வேறு கூற்றுகளும் சோதிடத்தில் அதிக நம்பிக்கை வைத்தவர்களே பதினெண் மேற்கணக்கு, பதினெண் கீழ்க்கணக்கு என்று எண்ணிக்கையில் தொகுத்தது போலவே 'பதினெண் சித்தர்கள்' என ஒரு வரையறை செய்துள்ளனர் என்பது தெள்ளத் தெளிவான முடிபாகும். பதினெண் சித்தர் என்ற இத்தொடர் யாரால் எக்காலத்தில் முதன்முறையாக ஏற்படுத்தப்பட்டது என்று உறுதியாகக் கூற இயலவில்லை. எனவே, இத்தொடர் ஏற்பட்ட காலத்திற்கு முன்னும் பின்னும் பல சித்தர்கள் வாழ்ந்துள்ளனர் என்பது புலனாகும். பதினெண் சித்தர் என்ற தொடர் ஒரு மரபுத் தொடரேயன்றித் தமிழகத்துச் சித்தர்களின் எண்ணிக்கையை வரையறுத்து முற்றுப்புள்ளி வைக்கும் தொடராக அதனைக் கருத இயலாது.

**1.11. சித்தர் பாடல்களில் இசை மரபு**

சித்தர் பாடல்கள் பலவும் கலைநயத்தோடு அமைந்துள்ளன. அவை எளிய இனிய சந்த நயத்தில் படிப்பவரின் மனதைக் கவரும் ஆற்றல் வாய்ந்தனவாக உள்ளன. தமிழிலக்கிய வரலாற்றில் பிற இலக்கிய வகைகளுக்கு ஒப்பாகவே சித்தர் இலக்கியமும் மக்களிடையே ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

சித்தர் பாடல்கள் கும்மி, ஆனந்தக்கும்மி, கண்ணி, ஒப்பாரி முதலிய இசை வடிவங்களில் அமைந்துள்ளன. சித்தர் பாடல்கள் பெரும்பாலும் இசையோடு பாடக்கூடிய இனிய சந்தப்பாடல்களாக அமைந்து இன்பம் பயப்பனவாக உள்ளன.

எடுத்துக்காட்டிற்கு இரு கும்மி பாடல்கள்:

*''ஏழைப் பனாதிகள் இல்லையென் றாலவர்க்(கு)*
*இருந்தால் அன்னம் கொடுக்க வேண்டும்*
*நாளை யென்றுசொல்ல லாகாதே யென்று*
*நான்மறை வேதம் முழங்குதடி''*

*-கொங்கணர் வாலைக்கும்மி. 86.*

*''மாதாவாய் வந்தே அமுதம் தந்தாள் - மனை*
*யாட்டியாய் வந்து சுகங்கொ டுத்தாள்*
*ஆதரவாகிய தங்கை யானால் - நமக்கு*
*ஆசைக் கொழுந்தியும் மாமியானாள்''*

*-வாலைக்கும்மி. 65.*

எனக் கும்மி போன்ற மெட்டுக்களில் சித்தர் பாடல்கள் அமைந்திருப்பதனால் கல்லாதாரிடையே பரவி நிலைத்திருக்கக் காரணமாயிற்று.

'அகப்பேய்ச் சித்தர், குதம்பை, பாம்பாட்டிச் சித்தர் முதலியோர் அழகான சிந்து மெட்டுக்களைக் கையாளொடு பாடல்கள் புனைந்துள்ளனர். தமிழ்நாட்டில் இப்பாடல்கள், சிறப்புப் பெற்றிருப்பதற்கு இதுவும் ஒரு முக்கியக் காரணமாகும். கடுவெளிச் சித்தர் ஆனந்தக் களிப்பையும், அகப்பேய்ச்சித்தர் சமனிலைச் சிந்துவையும், இடைக்காடர் வயனிலைச் சிந்துவையும் மேற்கொண்டு பாக்களை யாத்துள்ளனர். பொதுமக்கள் நன்கு அறிந்த கும்மியைக் கொங்கணச்சித்தரும், மதுரை வாலைச்சாமியும் கையாண்டு பாக்களைப் படைத்துள்ளார். பத்திரகிரியார் தாம் இயற்றிய பாடல்களைக் கண்ணி முறையில் அமைத்துள்ளார்.'[64]

சித்தர்கள் தம் பாடல்களைக் கற்றறிந்த மக்களை நோக்கிப் பாடியவர்கள் அல்லர். பாமரமக்களுக்காகவே பாடியுள்ளனர். அவர்கள் மரபிலக்கியப் போக்குகளை மீறிப் பழுகு தமிழில் எளிய நடையில் பாடிச் சென்றுள்ளனர். அதே நேரத்தில் யாப்பு வரையறைகளையும் பயன்படுத்தியுள்ளனர்.

*''நாட்டுப்புறப் பாடல்களில் வருகின்ற தங்கரத்தினமே, தங்கமே தங்கம்! ஞானத்தங்கமே முதலிய விளிப்பெயர்களைப்*

*போன்றே சித்தர் பாடல்களில் குதம்பாய், ஞானப்பெண்ணே, வாலைப் பெண்ணே, கோனாரே, தாண்டவக் கோனே, ஆடு பாம்பே என்றவாறு விளிகள் அமைந்து வந்துள்ளன. சித்தர் பாடல்களில் காணப்படும் பேச்சு வழக்குச் சொற்களும் வந்த சொல்லோ அன்றி அடியோ மீண்டும் வரும் தன்மையும் மக்களிடையே மிகப் பரவலாக வழங்கி வருதலும் சித்தர் இலக்கியத்திலுள்ள நாட்டுப்புற இலக்கியச் சாயலைப் பறைசாற்றுவனவே''*[65]

என்பார் சு.சண்முகசுந்தரம்.

சித்தர் பாடல்கள் நாட்டுப்புறப்பாடல்கள் என்று பலரும் கருத்துத் தெரிவிக்கின்றனர். வாய்மொழிப் பண்புகள் பலவற்றைப் பெற்றிருப்பதாலும் வாய்மொழி வடிவங்களைக் கையாண்டிருப்பதாலும் சித்தர் பாடல்கள் இவ்வாறு அழைக்கப்படுகின்றன. சித்தர் பாடல்களில்

*''நாட்டுப் புறவடிவங்கள் கையாளப்படுவதால் நாடோடி வகை இலக்கியம் என்றே கூறலாம்''*[66]

என மீ.ப. சோமசுந்தரம் குறிப்பிடுகிறார்.

*''பொதுமக்களுக்குப் பயன்படும் வகையில் பாடல்கள் இயற்ற விரும்பிய காரணத்தால் நாட்டுப்புற வடிவங்களைப் பயன்படுத்திக் கொண்டனர்''*[67]

என்று மு. வரதராசன் சுட்டுகின்றார்.

பாமர மக்களிடையே பரவியிருந்த சித்தர் பாடல்கள் இன்று கற்றவர்களிடையேயும், இலக்கிய ஆர்வலர்களின் நெஞ்சங்களிலும் இடம்பிடித்து வருகின்றதைப் பார்க்கமுடிகிறது. மக்கள் பொதுவாழ்வில் பயன்படுத்தும் உவமைகள், பழமொழிகள் முதலியவற்றையெல்லாம் சித்தர் பாடல்கள் தாராளமாகப் பயன்படுத்தி வழங்குவதால் அவை மக்களின் நெஞ்சுக்கு உகந்தவையாக உள்ளன என்பதனை எவரும் அறிவர்.

**1.12. இருபதாம் நூற்றாண்டில் சித்தர்கள் - ஒரு கண்ணோட்டம்**

நூல்கள் ஓலைச் சுவடிகளில் இருந்தபோது அதனைப் பயில்வோரின் எண்ணிக்கை மிகவும் குறைவாகவே இருந்தது. ஆனால் அச்சு எந்திரம் வந்தபின்னர் ஓலைச் சுவடிகளில் கிடந்த நூல்களெல்லாம் அச்சேறின. எனவே அதன்பின்பு தமிழகத்தில் கல்விகற்றோர் எண்ணிக்கை பெருகியது. மக்கள் தொகைக்கு ஏற்ப அச்சுப்பதிப்பும் பல்கிப் பெருகின. குறைந்த செலவில் நூல்கள் மக்களுக்குக் கிடைக்க ஆரம்பித்தன. படித்தவர்களின் எண்ணிக்கை மேலும் கூடியது. சித்தர் பாடல்களைப் பலரும் அறியும் சூழல் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உருவாயிற்று. சித்தர்கள் நெறியைப் பலரும் பின்பற்றத் தொடங்கினர்.

சமயச் சடங்கு எதிர்ப்பும், எதையும் அறிவியல் பார்வையோடு ஆராயும் ஆர்வமும், சமுதாய விழிப்புணர்வும் மக்களிடையே பரவத்

தொடங்கின. இவ்வுணர்வுகளுக்கு ஊக்கம் தந்து உற்சாகப்படுத்தும் கருத்துக்கள் கொண்ட சித்தர்பாடல்கள் மக்களிடையே விரைந்து பரவின. பரவியும் வருகின்றன. மக்களின் தேவைக்கேற்பச் சித்தர் பாடல்கள் அறிஞர்களால் பல்வேறு அளவில் தொகுக்கப்பட்டு அச்சேறின. தற்போது சித்தர் பாடல்களுக்கு எளிய உரைகள் பல தமிழறிஞர்களால் எழுதி வெளியிடப்பட்டும் வருகின்றன.

சித்தர் ஆர்வலர்கள் உலகச் சித்தர் நெறி மாநாடுகளை நடத்திச் சித்தர்களின் கருத்துக்களைப் பரப்பி வருகின்றனர். சென்னையிலும் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் சித்தர் ஆய்வு மையங்களை நிறுவிச் சித்தர்கள் கருத்துக்களைச் சொற்பொழிவுகளாக நிகழ்த்தி அவற்றைத் தொகுத்து நூல்களாக வெளியிட்டு வருகின்றனர்.

தினத்தந்தி நாளிதழும் செவ்வாய்க் கிழமை தோறும் அருள்தரும் ஆன்மீகம் என்னும் இலவச இணைப்பிலும், வெள்ளிக் கிழமை தோறும் வெளிவரும் வெள்ளி மலரிலும் சித்தர்களைப் பற்றியும் அவர்கள் செய்த அற்புதங்களைப் பற்றியும் எழுதி மக்கள் அறிந்துகொள்ளத் துணைபுரிவதனைப் பார்க்க முடிகின்றது. தொலைக்காட்சி ஊடகங்களும் சித்தர்கள் பற்றிய அரிய செய்திகளைத் தற்போது வெளியிட்டு வருகின்றன.

## 1.13. தொகுப்புரை

சித்தர் என்ற சொல்லுக்குப் பல்வேறு பொருட்கள் வழங்கி வருகின்றன. சித்தர்களின் கொள்கைகளும், சித்து விளையாடல்களும் மக்கட்குப் பயன்தரத் தக்கனவாகும். சித்தர்கள் உடலையும், உயிரையும் பேணிக்காத்துள்ளனர். சித்தர்களின் வல்லமைக் கூற்றுகள் மனிதர்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டுவனவாகவே அமைந் திருப்பதனைக் காண முடிகின்றது. சித்தர்கள் மூடநம்பிக்கையைச் சாடுபவர்களாக விளங்கினர். மருத்துவத்துறையில் அவர்கள் ஆற்றிய பங்களிப்பு போற்றற்குரியதாகும். அவர்கள் தமது பாடல்களில் பயன்படுத்தியுள்ள நாட்டுப்புற மெட்டமைப்பும் செவிக்கினியதாகும். சித்தர்கள்மீதும் சித்தர் பாடல்கள்மீதும் மக்கள் பெருமதிப்புக் கொண்டுள்ளனர்.

## அடிக்குறிப்பு விளக்கம்

1. த.ந.கணபதி, தமிழ்ச்சித்தர் மரபு, ப.25.
2. மேற்படி. ப.3.
3. வரதகோவிந்தராசன், சித்தர் பாடல்கள், ப.5.
4. ஸ்ரீஞானஜோதி சம்பங்கி, சித்தர் சிவவாக்கியர் பாடல், ப.15.
5. தந்தை பெரியார், புத்தநெறி, ப.4
6. சி.எஸ். தேவநாதன், உள்ளொளி பெருக்கும் சித்தர்கள், ப.5.
7. அரிமதி. தென்னகன், தமிழ்-தமிழ் அகராதி, ப.162.
8. சி.எஸ். தேவநாதன், மு.கு.நூ.ப.7.
9. சாமிசிதம்பரனார், சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம், ப.23.
10. மேற்படி.ப.19.
11. மேற்படி. ப.20.
12. க. நாராயணன், சித்தர் சிவவாக்கியார், ப.11.
13. தமிழ்வளர்ச்சிக் கழகம், சித்த மருத்துவம், தொகுதி-1, ப.4.
14. சாமி சிதம்பரனார், மு.கு.நூ.ப.30.
15. சித்தர் பாடல்கள், சட்டைமுனி ஞானம்நூறு, 56.
16. அகத்தியர் ஞானப்பாடல் (தனி ஞானம்), 5.
17. சிவவாக்கியார் பாடல், 504.
18. த.ந.கணபதி, மு.கு.நூ.ப.27.
19. மேற்படி.ப.30.

20. பாம்பாட்டிச் சித்தர் பாடல், 25.
21. மேற்படி.27.
22. மேற்படி.29.
23. மேற்படி.30.
24. மேற்படி.31.
25. த.ந. கணபதி, மு.கு.நூ.ப.84.
26. சித்த மருத்துவம், தொகுதி-1, ப.18.
27. சிவவாக்கியர் பாடல், 33.
28. மேற்படி.70.
29. திருமூலர், திருமந்திரம், 724.
30. சாமி சிதம்பரனார், மு.கு.நூ.ப.42.
31. மேற்படி.ப.42.
32. பாம்பாட்டிச் சித்தர்.134.
33. சிவவாக்கியார் பாடல், 216.
34. மேற்படி.47.
35. பட்டினத்தார், 92.
36. பட்டினத்தார், 126.
37. பத்திரகிரியார், கண்ணி.8.
38. திருமூலர், திருமந்திரம், 121.
39. சிவவாக்கியர் பாடல், 243.

40. சிவவாக்கியர் பாடல், 518.
41. மேற்படி.520.
42. மேற்படி.132.
43. மேற்படி.36.
44. த.ந.கணபதி, மு.கு.நூ.ப.7.
45. மேற்படி.ப.7.
46. இரா. மாணிக்கவாசகம், நம்நாட்டுச் சித்தர்கள், ப.220.
47. த.ந.கணபதி, மு.கு.நூ.ப.15.
48. மேற்படி.ப.16.
49. க. நாராயணன், சித்தர் சிவவாக்கியார், ப.37.
50. ச.மாடசாமி, பாம்பாட்டிச்சித்தர், ப.10.
51. மேற்படி.ப.10.
52. க. நாராயணன், மு.கு.நூ, ப.37.
53. த.ந.கணபதி, மு.கு.நூ.ப.59.
54. கலைக்களஞ்சியம், தொகுதி-4, ப.645.
55. த.ந.கணபதி, மு.கு.நூ.ப.59.
56. சித்த மருத்துவம், தொகுதி-1, ப.8.
57. மேற்படி.ப.14.
58. மேற்படி.ப.11.
59. சித்தர் பாடல்கள், பெரியஞானக் கோவை, ப.5.

60. தினத்தந்தி நாளிதழ் (11.12.2009), வெள்ளிமலர்.

61. தேவநேயப் பாவாணர் பேருரைகள், ப.26.

62. இரா. மாணிக்கவாசகம், மு.கு.நூ, ப.108.

63. குமுதம் சிநேகிதி இதழ், ஜூன் 2009 (1-15), ப.15

64. த.ந.கணபதி, மு.கு.நூ.ப.63.

65. சு. சண்முக சுந்தரம், நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கு, ப.35.

66. மீ.ப.சோமு, சித்தர் இலக்கியம்-1, ப.19.

67. மு. வரதராசனார், தமிழிலக்கிய வரலாறு, ப.190.

# சித்தர் பாடல்களும் சாதிசமய மறுப்பும்

**2.0. முன்னுரை**

'சித்தர் பாடல்களும் சாதி சமய மறுப்பும்'-என்னும் இவ்விரண்டாமியலில் சாதி என்னும் சொல்லுக்குரிய விளக்கம், சாதி உருவான முறை, சாதியின் தோற்றம், பண்டைத் தமிழிலக்கியங்களில் மானுடப் பகுப்பு முறை, சித்தர்களும் சாதியொழிப்பும், சித்தர்களும் சமய ஒழிப்பும், சித்தர்களும் சமயச் சடங்குச் சாடலும், சித்தர்கள் சாத்திரங்களைச் சாடலும் ஆகியன விரிவாக விளக்கப்பெறுகின்றன. சித்தர்கள் வழியில் சாதியைச் சாடிய சான்றோர் பெருமக்கள் பற்றியும், இருபதாம் நூற்றாண்டில் சாதியை ஒழிக்க அரும்பாடுபட்டோர் பற்றியும் இவ்வியலில் ஆராய்ந்து விளக்கப் பெறுகின்றன.

**2.1.சாதி-சொல் விளக்கம்**

இன்று தமிழ்மொழியில் வழங்கிவரும் 'சாதி' என்னும் சொல் 'ஜாதி' என்னும் வடமொழிச் சொல்லிலிருந்து திரிந்து வந்ததாகும். இதனைப் பின்வரும் சான்றுகளும் தெளிவுபடுத்துகின்றன.

> *"சாதியைக் குறிக்க கேஷ்ட், ஜாதி, வருணம் என்னும் சொற்கள் பயன்படுகின்றன. 'Caste' என்னும் சொல் 'Caster' என்னும் போர்த்துக்கீசியச் சொல்லில் இருந்து வந்திருக்கின்றது. வருணம் என்னும் சொல் மனிதர்களின் நிறத்தைக் குறிப்பதாகவே கொள்ளப்பெறுகின்றது. பார்ப்பனர் வெள்ளை*

*நிறமென்றும், சத்திரியர் சிவப்பு நிறமென்றும், வைசியர் கோதுமை நிறமென்றும், சூத்திரர் கறுப்பு நிறமென்றும் சொல்லப்படுகின்றது. ஜாதி என்னும் சொல் ஒரு குறிப்பிட்ட கலாச்சார, சடங்கு, எல்லை, தொழில் என்ற தனித் தன்மைகளையே குறிக்கின்றது. சாதி என்னும் சொல் தமிழன்று; வடசொல்.''*[1]

*''சாதி என்பது தமிழ்ச்சொல் அன்று; ஜாதி என்ற வடமொழிச்சொல்லே சாதி என்று தமிழில் வழங்குகிறது. இந்தச் சாதி என்ற சொல்லும் மக்களைக் குறிக்கும் சொல்லாகப் பண்டைக் காலத்தில் வழங்கவில்லை''*[2]

இக்கருத்தினைப் பின்வரும் தொல்காப்பிய நூற்பாக்கள் தெளிவுபடுத்துவன.

*''நீர்வாழ் சாதியுள் அறுபிறப்பு உரிய,''*[3]

*''நீர்வாழ் சாதியுள் நந்தும் நாகே''*[4]

என்ற தொல்காப்பிய நூற்பாக்களில் இடம் பெற்றுள்ள சாதி என்னும் சொல் மக்களைச் சுட்டவில்லை; நீரில் வாழும் உயிர் வகைகளையே சுட்டுகின்றது.

எனவே சாதி என்ற சொல் மக்களைப் பாகுபடுத்துகின்ற சாதியைக் குறிக்கவில்லை. நீர்வாழ்வன, பறவைகள், விலங்குகள் போன்றவைகளைச் சுட்டுவதற்கே தொல்காப்பியர் காலத்தில் சாதி என்ற சொல்லானது பயன்படுத்தப்பட்டிருக்கின்றது என்பது தெளிபு.

இதே சிந்தனையில் பாரதியும்,

*'காக்கை குருவி எங்கள் சாதி'*

என்று குறிப்பிட்டுத் தெளிவுபடுத்துகின்றார்.

மேலும், 'இனம் என்னும் சொல்லிற்குத் தமிழ் அகராதிகளில் ஒப்பு, குலம், சுற்றம், நிரை, வருக்கம், வருணம், சாதி, வம்சம், கூட்டம் முதலிய பல சொற்கள் வழங்கி வருவதனையும் காண முடிகின்றது.'[5]

**2.2 சாதிகளின் தோற்றமும் வளர்ச்சியும்**

*''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா*
*செய்தொழில் வேற்றுமை யான்''*[6]

என்னும் திருவள்ளுவரின் கூற்றுப்படி பிறப்பு என்பது நான்கு வருணத்தார்க்கும் பொதுவானதாகும். பிறப்பில் உயர்வு தாழ்வு இல்லை. எனவே செய்கின்ற தொழிலை வைத்தே வேறுபாடு காணமுடியுமே யொழியப் பிறப்பினால் எவ்வித வேறுபாடும் இல்லை என்பது வள்ளுவரின் முடிபாகும்.

ஆனால் மனுநீதி 'அந்த பிரம்மானாவர் இந்த உலகத்தைக் காப்பாற்றுவதற்காகத் தன் முகம், தோள், தொடை, பாதம் இவைகளினின்று உண்டான பிராமண, சத்திரிய, வைசிய, சூத்திர வருணத்தார்க்கு இம்மைக்கும் மறுமைக்கும் உரிய உபயோகமான கருமங்களைத் தனித்தனியாகப் பகுத்துச் சொல்கின்றது.'[7]

*"சூத்திரனைக் கூலி கொடுத்தோ கொடுக்காமலோ பிராமணர் வேலை வாங்கலாம். பிராமணனுக்குத் தொண்டு செய்யவே சூத்திரனைப் பிரம்மா படைத்திருக்கிறார். (மனு-அத்8-சு413). வருணாசிரமப்படி நடக்கவில்லையானால் பிராமணர்கள் ஆயுதம் எடுத்துச் சண்டை செய்ய வேண்டும் (அத்-8-சு-348)"*[8]

என்று மனுநீதி சுட்டுகிறது. இவ்வாறு ஆண்டான் அடிமை, மேலோர் கீழோர் என்னும் பாகுபாடுகளை வலியுறுத்தும் மனுநீதியின்பால் வெறுப்புக்கொண்ட அண்ணல் அம்பேத்கர்,

*"கி.பி.200இல் வாழ்ந்த மனு என்பவர் வருணாசிரம முறைகளை இந்து சமயத்தில் புகுத்தி மக்களை இழிவுபடுத்த முயன்றுள்ளதை மனுமூலம் பார்க்கிறோம்"*[9]

என்று குறிப்பிடுகிறார்.

மனுநீதி வலியுறுத்தும் சாதிப்பாகுபாடுகள் மனித இனத்திற்கே அவமானதாகும்; மனிதனை மனிதன் சுரண்டித் தின்பதற்கு ஒப்பானதாகும். பிறப்பால் மக்களிடையே ஏற்றத்தாழ்வுகளைக் கற்பிப்பது இழிசெயலாகும். 'குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்' என்னும் பாரதியாரின் மந்திரமொழியை அனைத்துத் தரப்பினரும் மனங்கொண்டு வாழ முற்படின் சாதியம் ஒழிவது திண்ணம்.

சாதியமைப்பை ஆராயத் தொடங்கியவர்கள் அனைவரும் இயல்பாகவே சாதியமைப்பின் தோற்றத்தையும் ஆராயத் தலைப்பட்டனர். மனுவே சாதியமைப்பை விவரித்த முன்னோடியாவார். சாதிகள் எப்படித் தோன்றின என்பது பற்றி அவர் கூறும் விளக்கம் பின்வருமாறு:

*''நாற்பெரும் மூலச் சாதிகளைச் சேர்ந்த ஆண் பெண்களின் கூடாவொழுக்கத்தில் இருந்து உருவானவையே இந்தச் சாதிகள். இந்நால்வருண ஆண் பெண்களிடையே நிலவிய பரவலான ஒழுக்கக் கேடுகளும், நடத்தைப் பிறழ்வுகளும் எண்ணற்ற சாதிகள் உருவாக வழிவகுத்தன. இத்தகைய சாதிமக்கள் பல்லாயிரக் கணக்கில் பெருகக் காரணமாயின. நாற்பெருஞ்சாதி ஆடவர் பெண்டிரின்பால் எத்தகைய பழியைச் சுமத்துகிறோம் என்பதைச் சிறிதளவும் பொருட்படுத்தாமலேயே அவர்கள் ஒழுக்கத்தின்மீது குற்றம் சுமத்துகிறார் மனு.''*[10]

என்று மனுகூறியதை அம்பேத்கார் தமது நூலில் சுட்டிக்காட்டுகிறார்.

*''சாதி வேறுபாடுகள் அறியாத் தமிழ்நாட்டில்*
*சாதி வேறுபாட்டு முறையைப் புகுத்தியது*
*ஆரிய நூல்களல்லவா''*

என்று சி. இலக்குவனார் செந்தமிழ்ச் செல்வி எனும் நூலில் கூறியிருப்பதாக அ. முத்துசாமி தம் நூலில் குறிப்பிடுகிறார்.''[11]

மேலும்,

***"சாதி குலம் பிறப்பு என்னும் நிறுவனங்களால் மனிதகுலம் பிளவுண்டு கிடப்பதைக் கண்டு அந்நிலையை மாற்ற விரும்பினார்கள். அன்றைய சமுதாயத்தில் வைதீகச்சமயமும், வருணாசிரம தருமமுமே அடக்குமுறையின் அடிப் படைகளாகவும் அருள் வாழ்க்கைக்குத் தடைகளாகவும் தென்பட்டமையால் சித்தர்களின் கேள்விக்கணைகள் அவை மீதே தொடுக்கப்பட்டன"***[12]

என்று க. கைலாசபதி கூறியுள்ளதனைத் தம் நூலில் சுட்டிக் காட்டுகின்றார் இரா.கலாவதி.

**2.3. தமிழிலக்கியங்களில் மாந்தர் பகுப்புமுறை**

முழு முதல் இலக்கண நூலான தொல்காப்பியம் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என மானிடரைப் பட்டியலிடுகிறது. ஒவ்வொரு பிரிவினர்க்குமுரிய தொழில்களையும் அறிவுறுத்துகின்றது.

'ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன' எனும் நூற்பாவில் உயர் வருணத்தாரே வேதம் ஓதுவதற்கும் தூது செல்வதற்கும் தகுதியுடையவர்களாக இருந்ததனைத் தொல்காப்பியர் சுட்டிக் காட்டுகின்றார். எனவே வேதம் பயிலும் உரிமை கீழ்வருணத்தார் என்று கூறப்பட்ட வேளாண் தொழில்சார்ந்த பொதுமக்களுக்கு மறுக்கப்

பட்டுள்ளது. அக்காலப் பெண்களுக்கும் குறிப்பாக மேல்வருணத்தார் என்று கூறிக்கொண்ட அந்தணர் பெண்களுக்கும் கல்வி மறுக்கப்பட்ட நிலைமையைத் தொல்காப்பியத்தின் வாயிலாக அறிய முடிகின்றது. இதனை 'முந்நீர் வழக்கம் மகடூஉ வோடு டில்லை' எனும் நூற்பா விளக்குகின்றது.

> ***''வேதம் பயில்வதைக் கீழ்வருணத்தார்க்கு மறுக்கப்பட்டதால் உலகியல் வாழ்க்கையில் அறியாமையும் எழுத்தறிவின்மையும் மண்டின. படிப்பதும் எழுதுதலும் வேதம் கற்பதும் கற்றுத் தருவதுடனும் பின்னிப் பிணைந்திருந்ததால் வேதம் கற்க உரிமைபெற்ற உயர்குடியினரிடம் மட்டுமே படிப்பதும் எழுதுதலும் நிலவியது. ஆனால் வேதம் கற்க உரிமை தரப்படாத பொதுமக்களுக்கு எழுதவும் படிக்கவுமான உரிமை மறுக்கப்பட்டது. எனவே எழுத்தறிவும் படிப்பறிவும் வேதக்கல்வி கற்பாருக்கு மட்டுமே தேவைப்படுவதாயின. எனவே வேதம் படிக்கும் உரிமை உள்ளவருக்கு எழுதப் படிக்கும் உரிமை கிடைத்தது. உரிமை மறுக்கப் பட்டவருக்கு எழுதப்படிக்கும் உரிமை கிடைக்காமல் போனது***[13]

என்று தம் நூலில் குறிப்பிடுகிறார் அண்ணல் அம்பேத்கார்.

### 2.3.1. குழுமுறைப் பகுப்பு

சாதிப் பகுப்புமுறை மக்கட் சமுதாயத்தைப் பிளவுபடுத்தி, ஒற்றுமையையும் சீர்குலைக்கின்றது. அன்றைய சமுதாயத் தேவைகளை நிறைவுசெய்வதற்காக நான்கு பெரும்பிரிவுகளாகப் பகுக்கப்பட்டுக் குழுக்களாகச் செயல்பட்டனர்.

1. கல்வி பயின்று கற்பிப்போர்,
2. நாட்டு மக்களையும் செல்வத்தையும் காக்கும் வீரம் செறிந்த மன்னர்கள்,
3. மக்களுடைய பொருட்தேவைகளை நிறைவு செய்வோர்,
4. தனித்துச் செயல்படும் ஆற்றலின்மையால் பிறர் ஆணையேற்றுப் பணிசெய்வோர்.

என்ற நான்கு பிரிவுகளே சமுதாயத்தில் நிலவின.

### 2.4. தொல்காப்பியத்தில் நால்வருணப் பாகுபாடு

தொல்காப்பியர் வாழ்ந்த காலம் ஆரியப் பண்பாட்டின் தாக்கம் தமிழகத்தில் ஊடுருவிய காலம். ஆரியர்களின் நான்கு வருணப் பாகுபாடுகள் தமிழ் மண்ணில் ஊன்றப் பட்ட காலம். அதனால்தான் தமிழிலக்கியங்களில் நான்கு வருணம் சார்ந்த நான்கு வருணத்தாரின் பழக்க வழக்கங்கள் இடம்பெற்றுள்ளன.

*''இலக்கியத்தில் ஊடுருவிய மரபையேற்று இலக்கணம் படைப்பது ஓர் இலக்கண ஆசிரியரின் கடமை. ஆகவேதான் தொல்காப்பியரும் நான்கு வருணப் பாகுபாட்டு மரபுக்குத் தம் நூலில் இடம் தந்துள்ளார். ஆனால் ஓர் அறவாணர் என்ற முறையில் அதனை எதிர்த்துள்ளார் என்பார் முனைவர் கு. மோகனராசு. அவர் 'காப்பியர் ஓர் அறவாணர்' எனும் தமது நூலில் நான்கு வருணப் பாகுபாடு என்பது அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் எனும் பாகுபாடாகும்''*[14]

என்று எடுத்துரைக்கின்றார்.

தொல்காப்பியர் காலத்திலேயே இத்தகைய வைப்புமுறைமை தோன்றிவிட்டது. மேலோர் கீழோர் எனும் நோக்கு ஊடுருவி விட்டது. இதனை 'இடையிரு வகையோர்'[15] என்னும் தொல்காப்பிய நூற்பாவடி அரசர் வணிகர் ஆகிய இருபிரிவினரைச் சுட்டுவதைக் கொண்டு அறியமுடிகின்றது.

*'மேலோர் மூவர்க்கும் புணர்ந்த கரணம்*
*கீழோர்க் காகிய காலமும் உண்டே,'*[16]

அந்தணர், அரசர், வணிகர் இம்மூவரும் மேலோரென்றும், வேளாளர் என்போர் கீழோர் என்றும் கூறும் பாகுபாட்டினைத் தொல்காப்பியக் கற்பியல் நூற்பாவும் உறுதி செய்கின்றது.

**2.4.1. தொல்காப்பியத்தில் தொழில்முறைப் பகுப்பு**

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் வாகைத்திணையில் வாகையின் எழுவகை மாந்தர்களாகப் பார்ப்பனர், அரசர், வணிகர், வேளாளர், அறிவர், தாபதர், பொருநர் என்போர் குறிப்பிடப்படுகின்றனர். இவர்களனைவரும் பல்வேறு தொழில்வகைப் பகுப்பு முறையில் வகைப்படுத்தப்பட்டுள்ளமையைக் காணமுடிகின்றது. இவ்வுண்மையினை,

*"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்*
*ஐவகை மரபின் அரசர் பக்கமும்*
*இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்*
*மறுவில் செய்தி மூவகைக் காலமும்*
*நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்*
*நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும்*
*பாலறு மரபின் பொருநர் கண்ணும்*
*அனைநிலை வகையொடு ஆங்கெழு வகையின்*
*தொகைநிலை பெற்றது என்மனார் புலவர்"*[17]

என்னும் நூற்பாக்கொண்டு உணரலாம்.

**1. பார்ப்பனர்களின் அறுவகைத் தொழில்கள்**

பார்ப்பனர்களின் அறுவகைத் தொழில்கள் 1 ஓதல் 2. ஓதுவித்தல் 3. வேட்டல் 4. வேட்பித்தல் 5. ஈதல் 6. ஏற்றல் ஆகியனவாகும்.

**2. ஐவகைத் தொழில்களைக் கொண்ட அரசர்**

1. ஓதல் 2. வேட்டல் 3. ஈதல் 4. படை வழங்கல் 5. குடிகாத்தல் ஆகியன அரசர்க்குரிய ஐவகைத் தொழில்களாகும்.

**3. அறுவகைத் தொழில்களை உடைய வணிகர்**

1. ஓதல் 2. வேட்டல் 3. ஈதல் 4. உழுதல் 5. வாணிகம் செய்தல் 6. நிரை காத்தல் ஆகியன வணிகர்க்குரிய அறுவகைத் தொழில்களாகும்.

'இரு மூன்று மரபின் ஏனோர் பக்கமும்' என்பது மற்ற இருபிரிவினர்களான வணிகர், வேளாளரைக் குறிப்பனவாகும்.

**4. அறுவகைத் தொழில் செய்யும் வேளாளர்**

1. உழுதல் 2. பிறதொழில் செய்தல் 3. விருந்தினரைக் காத்தல் 4. ஆநிரை ஓம்பல் 5. வழிபடுதல் 6. வேதம் நீங்கிய கல்விகற்றல் என்பன வேளாளர்க்குரிய அறுவகைத் தொழில்களாகும்.

**5. அறிவன்**

போர் மற்றும் பல நல்ல நிகழ்வுகளுக்குக் காலம் நேரம் பார்த்துக் கணித்துக் கூறுபவன் அறிவன் என்றழைக்கப்பெற்றான்.

**6. தாபதர் (முனிவர்)**

நாலிரு வழக்கமான நீராடல், நிலத்திடைக்கிடத்தல், தோலுடுத்தல், சடைபுனைதல், எரியோம்பல், ஊர் அடையாமை, காட்டிலுள்ள உணவு

கோடல், தெய்வபூசையும் அதீதி பூசையும் செய்தல் என்ற எட்டும் தாபதர்க்கு உரிய பொருள்களாக இளம்பூரணர் சுட்டுகின்றார்.

**7. பொருநர்**

ஆண்வேடத்தையும் பெண்வேடத்தையும் தாங்களே ஏற்று நடிக்கும் திறனுடையவர்கள் பொருநர்கள் எனப்பெற்றனர்.

இவ்வாறு தொழில்முறைப் பகுப்பு முறையில் எழுவகையான மாந்தர்களை வகைப்படுத்திக் கூறியிருப்பதனைத் தெள்ளத் தெளிவாகக் காண முடிகின்றது.

''அறுவகைத் தொழிலையுடைய அந்தணர்'' என்று இளம்பூரணர் கூறுவதற்குக் காரணம் வேத நூல்களை வழுவற நன்கு கற்றுணர்ந்ததால் எனலாம். மேலும் இதனை,

***''ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்***
***காவலன் காவான் எனின்''***[18]

என்னும் திருக்குறள் கொண்டும் தெளியலாம். இத்திருக்குறளை மனதிற்கொண்டே அறுவகைத் தொழிலையுடைய அந்தணர் என மேற்கண்ட தொல்காப்பிய நூற்பாவிற்கு இளம்பூரணர் உரைவிளக்கம் கொடுத்திருக்கிறார் என்பதும் தெள்ளத்தெளிபு.

**2.4.2. புறநானூற்றில் மானுட உயர்வு தாழ்வு**

*''சங்க காலத்தில் இயற்கையின் அமைப்பையொட்டி நிலப்பாகுபாடு தோன்றியது. தொழிலின் அடிப்படையில் குலப்பாகுபாடு கிளைத்தெழுந்தது. குலப்பாகுபாடு பலவகையான சாதிப்பிரிவுகள் தோன்றக் காரணமாக அமைந்தது''*[19]

என்று அ. முத்துச்சாமி தம் நூலில் குறிப்பிட்டிருப்பது எண்ணத் தக்கது.

சங்க காலத்தில் மேலோர் கீழோர் என்னும் பாகுபாடுகளும் பரவலாகக் காணப்பெறுகின்றன. பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்,

*'வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்*
*கீழ்ப்பா லொருவன் கற்பின்*
*மேற்பா லொருவனும் அவன்கட் படுமே'*[20]

என்னும் புறநானூற்றுப் பாடலடிகளில் அக்காலத்திலிருந்த மேலோர் கீழோர் என்னும் வேற்றுமையை வெளிப்படுத்தி இருப்பதனைக் காணமுடிகின்றது.

எனினும் தொடக்க காலத்தில் இருந்த சாதிப்பிரிவுகளும் மேலோர் கீழோர் என்ற பாகுபாடுகளும் இன்றிருப்பது போன்று இழிநிலையில் அன்றில்லை. காலப்போக்கில் ஒவ்வொரு தொழிலிலும் உயர்வு தாழ்வு

கற்பிக்கப்பெற்று இன்னின்ன தொழில்களைச் செய்வோர் உயர்ந்த சாதியினர், இன்னின்ன தொழில்களைச் செய்வோர் தாழ்ந்த சாதியினர் என்னும் நிலை ஏற்படுத்தப்பட்டது. இதனை,

> ***"தொழிலில் உயர்வு தாழ்வு பாராட்டியதன் காரணமாகத் தான் உயர்ந்த வகுப்பு, தாழ்ந்த வகுப்பு என்ற பிரிவுகள் பிறந்தன. தொழில்களிலே, சில உயர்ந்தவை என்று கருதப்பட்டன. சில இழிந்தவை என்று கருதப்பட்டன. உயர்ந்த தொழில்களைச் செய்வோர் உயர்ந்தவர் ஆயினர். இழிந்த தொழில்களைச் செய்வோர் தாழ்ந்தவர் ஆயினர்"***[21]

என்ற சாமிசிதம்பரனாரின் கூற்று தெளிவாக்கும். இருப்பினும், பண்டைத் தமிழ் இலக்கியங்களில் சாதிகள் பற்றிய குறிப்புகள் குறைவாகக் காணப்படுகின்றன. இடைக்கால மற்றும் இக்கால இலக்கியங்களில் சாதிகள் பற்றிய குறிப்புகள் அதிக அளவில் இடம்பெற்றிருப்பதனை அறிந்துகொள்ள முடிகின்றது.

### 2.4.3. திருக்குறளில் மானுடப் பகுப்பு

திருவள்ளுவர் தமது திருக்குறளில் பல்வேறு இடங்களில் தொழில் முறைமை வைத்தே மானுடப் பகுப்பை வேறுபடுத்திக் காட்டுகிறார். இதற்கு மக்கள் வெவ்வேறு தொழில்களைச் செய்து வாழ்ந்து வந்தமையே காரணமாகும். ஒருவரே புலவராகவும், புரோகிதராகவும், மன்னராகவும்,

வணிகராகவும், உழவராகவும், கொல்லராகவும், குயவராகவும், முரசுகொட்டுபவராகவும் வாழ்தல் என்பது அரிது. எனவே தொழில்முறைப் பெயரைக் குறிப்பிடாமல் எழுதியிருந்தால் யாரைக் குறிப்பிடுகிறார் என்று எவருக்குமே விளங்காமல் போயிருக்கும். மக்கள் எளிதில் புரிந்து கொள்ளவே திருக்குறளில் ஆங்காங்கே வணிகர், உழவர், அந்தணர் பெரியோர், சிறியோர், மேற்பிறந்தார், கீழ்ப்பிறந்தார் எனத் தொழில் மற்றும் குணத்தை வைத்துப் பாகுபடுத்திக் கூறுவதனைப் பல குறள்களில் காணமுடிகின்றது. 'செய்தொழில் வேற்றுமை யான்'[22] எனும் குறளில் செய்கின்ற தொழிலை வைத்தே மக்கள் வேறுபடுத்தப் படுகின்றனர் என்கிறார் திருவள்ளுவர். அவர்,

*'ஏரின் உழாஅர் உழவர்' (குறள் எண்:14)*

என்னும் இக்குறளில் உழவுத் தொழில் செய்யும் உழவர்களைக் குறிப்பிடுகிறார்.

*'செயற்கரிய செய்வார் பெரியார் சிறியர்*
*செயற்கரிய செய்கலா தார்' (குறள் எண்:26)*

என்ற இக்குறளில் குணத்தைவைத்து அவர் வகைப்படுத்துகிறார்.

*'அந்தணர் என்போர் அறவோர்' (குறள் எண்:30).*

செந்தொழில் பூண்டு ஒழுகுதலால் அந்தணர் என்போரைத் தொழில்முறைப் பகுப்பினராகத் திருவள்ளுவர் காட்டுகிறார்.

*'வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்*

*பிறவும் தமபோல் செயின்' (குறள் எண்:120)*

இக்குறளில் வாணிகம் செய்வோரை வணிகர் என்று குறிப்பிடுகிறார். இது தொழில்முறைப் பகுப்பாகும். மேலும்,

*'மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்*

*கற்றார் அனைத்திலர் பாடு' (குறள் எண்:409)*

எனும் குறளில் தம் காலத்திலிருந்த மேலோர் கீழோர் என்னும் பிரிவினைகளை அவர் சுட்டுகிறார்.

*'சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்*

*சுற்றமாச் சூழ்ந்து விடும்' (குறள் எண்:451).*

இங்கு செய்கை மற்றும் குணத்தைக்கொண்டு பாகுபடுத்தியுள்ளார்.

*'நிலத்தியல்பால் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு*

*இனத்தியல்ப தாகும் அறிவு' (குறள் எண்:452).*

இக்குறளில் நிலத்தின் தன்மைக்கேற்ப நீரின்தன்மை மாறும். அதுபோல் சேரும் மாந்தரின் செய்கை மற்றும் குணத்திற்கு ஏற்பவே ஒருவரின் அறிவு காணப்படும் என்கிறார். இங்கும் செய்கை மற்றும் குணங்களை வைத்தே பாகுபடுத்துவதனைப் பார்க்க முடிகிறது.

*'அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்*

*நின்றது மன்னவன் கோல்' (குறள் எண்:543).*

அறவழியில் நின்று நாட்டையும் மக்களையும் காப்பவன் அரசன் என்று கூறுவதனால், தொழில்முறைப் பாகுபாட்டினை நன்கு அறிந்துகொள்ள முடிகின்றது.

*'எரியால் சுடப்படினும் உய்வுண்டாம்; உய்யார்*

*பெரியாரைப் பிழைத்து ஒழுகுவார்,' (குறள் எண்:896)*

*'மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்*

*கீழல்லார் கீழல்லர் அவர்.' (குறள் எண்:973)*

மேற்காணும் குறட்பாக்களில் பெரியோர். கீழோர், மேலோர் என்பதையெல்லாம் செய்கை மற்றும் குணங்களை வைத்தே குறிப்பிடுகின்றார்.

*'உழுவார் உலகத்தார்க்கு ஆணியஃ தாற்றாது*

*எழுவாரை எல்லாம் பொறுத்து' (குறள் எண்:1032).*

உழவுத் தொழில் செய்வாரை உழுவார் என்பது தொழில்முறைப் பகுப்பாகும்.

*'அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்*

*அவாவுண்டேல் உண்டாம் சிறிது' (குறள் எண்:1075).*

மேற்கண்ட குறட்பாக்களின் வாயிலாகத் திருவள்ளுவர் செய்தொழில், செய்கை, குணம் முதலியவற்றைக் கொண்டே மானிடரைப் பாகுபடுத்தியுள்ளமையைக் காணமுடிகிறது.

**2.4.4 சாதி பற்றி நாலடியார்**

நீதி நூல்களில் ஒன்றான நாலடியாரும் மானிடரில் குல வேறுபாடு கொண்டு பாராட்டப்படுவதைக் கண்டித்து உண்மையான குலம் எது என்பதனையும் சுட்டுகிறது.

*நல்ல குலமென்றும் தீய குலமென்றும்*
*சொல்லள வல்லாற் பொருளில்லை - தொல்சிறப்பின்*
*ஒண்பொரு ளொன்றோ தவங்கல்வி யாள்வினை*
*என்றிவற்றான் ஆகும் குலம்'*[23]

என்று நாலடியாரும் நல்ல குலம், தீய குலம் என்று மானிடர்களைப் பிரிப்பதனைச் சாடுகின்றது.

**2.5 பெரியபுராணம் காட்டும் சாதிப் பிரிவுகள்**

திருத்தொண்டர் புராணம் என்று போற்றப்படுகின்ற பெரிபுராணத்தை இயற்றிய சேக்கிழார் பெருமான் வாழ்ந்த காலத்தில் பல்வேறு சாதிப்பிரிவுகள் மக்களிடையே இருந்து வந்துள்ளன. நால் வருணத்தையும் தாண்டி ஒவ்வொரு வருணத்திலும் பல்வேறு சாதி உட்பிரிவுகள் கிளைத்து விட்டதையும் காண முடிகின்றது. இவ்வுண்மையினை,

*பெரியபுராணத்தில் 63 நாயன்மார்களில் "ஆதிசைவர் நால்வர், பிராமணர் பன்னிருவர், மாமாத்திரப் பிராமணர் ஒருவர், சத்திரியர் அறுவர், குறுநில மன்னர் ஐவர், வணிகர் ஐவர், வேளாளர் பதின்மூவர், இடையர் இருவர் மற்றும் குயவர், பாணர், பரதவர், வேடர், சான்றார், சாலியர், செக்கார், ஏகாலியர், புலையர் என ஒன்பதின்மர், மரபே அறியாதவர் என அறுவர் ஆகமொத்தம் அறுபத்துமூவர்"*[24]

என்னும் பகுதிகொண்டு அறியலாம். இந்நூலை இயற்றிய சேக்கிழாரும் தொண்டை மண்டலத்திலேயுள்ள குன்றத்தூரில் வேளாளர் குலத்திலே உதித்தவர். அவர் பல்வேறு சாதிப்பிரிவுகளைச் சார்ந்த நாயன்மார்களை யெல்லாம் தமது நூலில் பதிவுசெய்திருக்கிறார். தாழ்த்தப்பட்ட குலத்திலே பிறந்த திருநாளைப் போவார் எனும் நந்தனாரைச் சிவபெருமான் மீது கொண்ட பக்தியின் காரணமாக அய்யர் என்று உயர்த்திப்பாடுவதனையும் காணமுடிகிறது.

தில்லைவாழ் அந்தணர்கள் எல்லாம் நந்தனாரை அய்யரே என அழைக்கும் வண்ணம் சேக்கிழார் தம் நூலில் படைத்துப் புரட்சி செய்திருக்கிறார். எனவே சாதி ஏற்றத் தாழ்வினை உடைத்தெறியும் உளப்பாங்கு சேக்கிழாரிடத்தில் இருந்தமையைக் காணமுடிகின்றது. இறைவன் என்பவன் ஓர் இனத்தார்க்கே உரியவன் என்ற மாயையை உடைத்தெறிந்து பல்வேறு இனமக்களுக்கும் அருள்புரிந்த திறத்தை

வெளிப்படுத்துவதனையும் அறிந்து கொள்ள முடிகின்றது. இறைவன் சாதி மதங்களுக்கு அப்பாற்பட்டுத் தன்னை நினைந்து இளகி உருகுகின்ற எவர்க்கும் அருள்புரிபவன் என்பதனைச் சேக்கிழார் தெளிவுபடுத்துகிறார்.

வேந்தர்கள், முனிவர்கள், வேடுவர்கள், குரங்கினத்தவர்கள், அரக்கர்கள் எனப் பாகுபடுத்திப் பதிவுசெய்திருத்தலைக் கம்பராமாயணத்தில் பார்க்க முடிகிறது.

முக்கூடற்பள்ளு எனும் சிற்றிலக்கிய நூல் பயிர்த்தொழில் செய்து வாழும் பள்ளர் என்னும் இனத்தவரின் வாழ்க்கை வரலாற்றை மட்டுமே விளக்குகின்ற நூலாக இருந்தமையைக் காண முடிகின்றது.

தொல்காப்பியம், சங்க இலக்கியம், திருக்குறள் முதலிய, யாவும் மக்களிடையே காணப்பட்ட சாதிப் பிரிவுகள் செய்த தொழிலின் அடிப்படையிலேயே அமைந்திருந்தன என்று தெளிவுபடுத்துகின்றன.

சங்கம் மருவிய காலத்தில் களப்பிரர் போன்ற மாற்று இனத்தவர்கள் தமிழகத்தில் ஆட்சி செய்த போது மக்களின் ஒழுக்கம் மற்றும் கலாச்சார - பழக்க வழக்கங்கள் மாறத் தொடங்கின. மக்களிடையே பல்வேறு பிரிவினைகள் தோன்ற ஆரம்பித்தன. தொழில் அடிப்படையில் சாதிகள் பல்கிப் பெருகின. அதன்பின்னர் மக்களில் உயர்ந்தவர் தாழ்ந்தவரென்ற பாகுபாடுகள் உருவாயின. எனவே மக்களிடையே ஒற்றுமைச்

சிந்தனைகள் குறைந்தன. இப்பிரிவினைகளைப் பயன்படுத்திச் சமயங்கள் பல தோன்றின.

சமயங்கள் தங்களுக்கென்று சாத்திரங்கள், சடங்குகள் மற்றும் வழிபாட்டு முறைகளை ஏற்படுத்தின. அறியாமையில் உழன்ற மக்கள், கண் மூடித் தனமாக அவற்றைப் பின்பற்றினர். எனவே மக்களைத் திருத்தவும் நல்வழிப்படுத்தவும் பல்வேறு நீதிநூல்கள் தோன்றின. பல அறிவுரைகளையும், நீதிகளையும் சான்றோர்கள் மக்களுக்குப் புகட்டினர். அவர்களைத் தொடர்ந்து சித்தர்களும் தம் பாடல்கள் மூலமாக மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்த முனைந்தனர். மக்களை வேறுபடுத்தி உயர்வு தாழ்வு கற்பிக்கின்ற சாதி சமயங்களை வன்மையாகச் சாடினர். சாதிப் பிரிவினைகளை எதிர்த்துக் குரலெழுப்பினர். சாதிப் பிரிவுகளால் ஏற்படும் தீமைகளை மக்களிடையே எடுத்துக் கூறினர். அவ்வப்போது சித்தர்கள் சாதி சமய சாத்திரச் சடங்குகளை எதிர்த்துக் குரல்கொடுத்து வந்திருந்தாலும் இடைக்கால இலக்கியங்களிலும், இக்கால இலக்கியங்களிலும் பல்வேறு சாதிகள் பற்றிய குறிப்புகள் அதிகமாக இடம் பெற்றிருப்பதனைக் காணமுடிகின்றது.

### 2.6. சித்தர்கள் சாதிப்பிரிவினைகளைச் சாடக் காரணம்

உலகில் சாதியின் பெயரால் மக்களில் பலரை இழிசாதியினர், தீண்டத்தகாதார் என இழிக்கப்படுவதையும், சிலர் உயர்த்தப்படுவதையும் கண்ட சித்தர்கள் பொங்கியெழுந்தனர்.

*'எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்*

*மெய்ப்பொருள் காண்ப தறிவு' (குறள் எண்:423)*

என்ற குறளுக்கு எடுத்துக்காட்டாகச் சித்தர்கள் வாழ்ந்தனர். சமுதாயத்தில் வழங்கி வந்த கட்டுக்கதைகளையும் பொய்மைகளையும் தம் அறிவின் மூலம் தீர ஆராய்ந்து, பல்வேறு உண்மைகளை மக்களுக்கு எடுத்துக் கூறினர்.

மனிதர்கள் அனைவரும் ஒன்றேயென்ற கொள்கையுடையவர்கள் சித்தர்கள். தொழில், நிறம், வாழிடம் இவற்றைக்கொண்டு மக்களை இழிவுபடுத்துவதைத் தவறென்று அவர்கள் சுட்டிக்காட்டினர்.

எல்லோரையும் பொதுவாய்க் காணும் சமநோக்குடைய இவர்கள், சமுதாய வேறுபாடுகளைக் களைந்து மானுடம் தழைக்க முயன்றனர். மக்களிடையே நிலவும் சாதிமத பிரிவினைகளுக்குத் துணையாக விளங்கிய வேதசாத்திரங்களையும், சமயச்சடங்குகளையும் வெறுத்தனர். மானுட ஒற்றுமையைச் சீர்குலைக்கின்ற சாதியமைப்புகளை வன்மையாகச் சாடினர். அக்கருத்துக்களைத் தத்தம் பாடல்களில் வடித்தனர்.

### 2.6.1. சித்தர்களும் சாதி, சமயச் சாத்திரச் சாடலும்

#### பாம்பாட்டிச் சித்தர்

பாம்பாட்டிச் சித்தர், சமுதாயத்தில் புரையோடிக் கிடந்த சாதிப் பிரிவினைகளைக் கடுமையாகச் சாடியுள்ளார். இதனை இவரது பாடல்களில்

காணமுடிகிறது. இவர் சாதிப்பிரிவினையால் சமுதாயத்திற்கு ஏற்படும் தீங்கினையெண்ணி உள்ளக் கொதிப்பும் வேதனையும் அடைகிறார். சாதிப்பாகுபாட்டினை ஒழிப்பதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதனையும் இவர் பின்வரும் பாடலில் பதித்துள்ளார்.

*''சாதிப் பிரிவினிலே தீயை மூட்டுவோம்*

*சந்தை வெளியினிலே கோலை நாட்டுவோம்*

*வீதிப் பிரிவினிலே விளையா டிடுவோம்*

*வேண்டாத மனையினில் உறவு செய்வோம்.''*[25]

இப்பாடலில் சாதிப் பிரிவினைகளைத் தீயிலிட்டுப் பொசுக்குவோம். ஊர்மன்றத்தின் நடுவே கோலினைநாட்டி (கம்பத்தை நட்டு) அதிலே சமத்துவம் என்னும் கொடியை ஏற்றுவோம். பின்னர் அந்தணர் வீதி, ஆசாரி வீதி, குயவர் வீதி என்ற பல்வேறு சாதிபேதமின்றி ஒரு தாய்மக்களாக விளையாடி மகிழ்வோம். மேலும் நமக்கு வேண்டாதவர்களாக விளங்கிடும் பகைவர்கள் வீடுகளில் பெண் கொடுத்துப் பெண்ணெடுத்து உறவினர்களாக ஆகிச் சமுதாயத்தில் நல்லுறவை, ஒற்றுமையை ஏற்படுத்துவோம் என்று பாம்பாட்டியார் சாதியைச் சாடியதோடு அச்சாதியை ஒழிப்பதற்கான தீர்வையும் கூறியிருப்பது நோக்கத்தக்கதும், சிந்திக்க வேண்டியதுமாகவும் இருப்பதனை அறிய முடிகின்றது.

*''மருத்துவர்கள் நோயாளியைப் பரிசோதித்துப் பின் நோய்க்கான காரணத்தையும் அதன் விளைவுகளையும் கூறிப் பின், அது தீர்க்கும் மருந்தையும் கூறுவதைப் போலச் சமூக நோய்களாகப் பரவி விட்ட சிந்தனைகளைக் கூறி அதற்கு மாற்று மருந்தையும் விளக்குகிறார்கள் சித்தர்கள். புரையோடிப்போன பாகத்தை வெட்டி எடுப்பதால் உடலில் பிற பாகங்கள் நலம்பெறும் என மறுத்துவர்கள் அறுவைச் சிகிச்சையைச் செய்வதைப் போன்ற புரையோடிப்போன மூடப்பழக்கங்களுக்கும் சமூகத்திற்கும் கேட்டை விளைவிக்கும் சாதிப்பிரிவினைகளுக்கும் எதிரே சித்தர்கள் நடத்திய போராட்டம் வெளிப்படையாகத் தெரிகின்றது''*[26]

என்று இரா. கலாவதி குறிப்பிடுவது சிந்திக்கத்தக்கது. பாம்பாட்டிச் சித்தர்,

*''சமயபேதம் பலவான சாதி பேதங்கள்*
*சகத்தோர்க்கே யல்லாது சற்சாதுக் களுக்கோ?''*[27]

எனச் சாதிபேதம் போற்றுவோரைச் சாடி அவர்களிடம் கேள்வி கேட்கின்றார். மக்களுக்குத்தான் சாதிசமய பேதங்களை வகுத்து வைத்துள்ளார்களேயொழிய முற்றுமறிந்த சாதுக்களான ஞானிகளுக்குச் சாதிபேதம் எதுவுமே கிடையாது எனக்குறிப்பிடுகிறார். ஒரு சமத்துவ சமுதாயத்தை உருவாக்கி, அனைவரிடத்தும் அன்புசெலுத்தி ஒற்றுமைக்குப் பாடுபட்ட உயர்ந்த சிந்தனையாளராகப் பாம்பாட்டிச் சித்தர் விளங்குகிறார்.

மேலும், பாம்பாட்டிச் சித்தர் பொய்யான சடங்குகளையும் போலியான மத போதனைவாதிகளையும் சாடியிருக்கிறார். பொய் மதங்களும், போலியான குருக்களும் நாட்டினில் இருப்பதனை அவர்

*''பொய்மதங்கள் போதனைசெய் பொய்க்கு ருக்களைப்*
*புத்திசொல்லி நன்னெறியில் போக விடுக்கும்*
*மெய்ம்மதந்தான் இன்னதென்று மேவ விளம்பும்*
*மெய்க்குருவின் பதம்போற்றி ஆடு பாம்பே''*[28]

எனவும்,

*''நாட்டுக்கொரு கோயில்கட்டி நாளும் பூசித்தே*
*நாதன்பாதம் காணார்கள் என்றுஆடு பாம்பே''*[29]

எனவும் குறிப்பிடுகிறார்.

பாம்பாட்டிச் சித்தர், போலி மதகுருக்கள் நாட்டுக்கு ஒரு கோயில்கட்டியெழுப்பிப் பூசித்து வந்தாலும் உண்மையான நாதனை அடையமுடியாதென்றும், எத்தனை கோயில்கட்டி அழைத்தாலும் யாரும் அறியவொண்ணா இறைவனைக் காணவே முடியாது என்றும் கூறுவது பேருண்மையாகும். அவர் கோயில்கட்டி இறைவனுக்குச் செய்கின்ற சடங்குகளை வெறுக்கின்றார். இறைவனை அறிய ஆடம்பரமும் ஆரவாரமும் தேவையே இல்லை என்பதனைப் பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

பாம்பாட்டிச் சித்தர் கோயில் எழுப்பி, அதிலே சிலையை நிறுவிப் பூசை செய்து வலமாகச் சுற்றி வருவதிலெல்லாம் எந்தப் புண்ணியமும் வாராதென்கிறார்.

*''பூசைசெய்த தாலேசுத்த போதம் வருமோ?*
*பூமிவலஞ் செய்ததனாற் புண்ணியம் உண்டோ?*
*ஆசையற்ற காலத்திலே ஆதி வத்துவை*
*அடையலாம் என்றுதுணிந் தாடு பாம்பே.''*[30]

இப்பாடலடிகளின் வாயிலாக அவர் பூசைச் சடங்குகளையும், திருவுருவச்சிலைகளைச் சுற்றி வருகின்ற செயல்களையும் வன்மையாகச் சாடுகின்றார். இதுபோன்ற செயல்களால் இறைவனை அடைய இயலாது. 'ஆசையே துன்பத்திற்குக் காரணம்' என்று புத்தர் மொழிந்ததைப் போன்று பாம்பாட்டிச் சித்தரும் இறையை அடையவொரு வழியைக் கூறுகின்றார். எவ்வித ஆசைகளும் இன்றி, ஆசைகளை அறவே மறந்து, ஆரவாரத்தைத் துறந்து, மனத்தாலேயெண்ணி அவனை அடையலாம் என்று பாம்பாட்டியார் சமயச் சடங்குகளைச் சாடி மக்களைச் சிந்திக்க வைப்பதைக் காண முடிகின்றது. மேலும் அவர்,

*''காடுமலை நதிபதி காசி முதலாய்க்*
*கால்கடுக்க ஓடிப்பயன் காணல் ஆகுமோ?''*[31]

எனவும் வினவுகின்றார். இறைவனைத் தேடிக் காடுமலை நதிகளில்

எல்லாம் அலைந்து திரிந்தும், காசிக்குச் சென்று கங்கையில் நீராடியும், இறைவனைத் தேடி எங்கு ஓடியும் ஒரு பயனும் கிட்டப்போவதில்லை. இறையைத் தேடிக் கால்கடுக்க ஊர் ஊராக ஓடுவதைப் பாம்பாட்டிச் சித்தர் விரும்பவில்லை என்பதனை அவரது பாடல்கள் புலப்படுத்துகின்றன.

நால்வகை வேதங்களையும், அறுவகைச் சாத்திரங்களையும், மாயாசால தந்திரக் கலைகளையும், ஆகமங்களையும், புராணங்களையும் கற்பதும் அல்லது கேட்பதும் வீணானவேலை. அவற்றைப் போதிக்கும் நூல்களும் வீணான நூல்களேயாகும் என்ற கருத்தினை உடையவராகப் பாம்பாட்டிச்சித்தர் திகழ்ந்தார் என்பதனைப் பின்வரும் பாடல்மூலம் அறிய முடிகின்றது.

*''சதுர்வேதம் அறுவகைச் சாத்தி ரம்பல*
*தந்திரம் புராணங்களைச் சாற்றும் ஆகமம்*
*விதம்வித மானவான வேறு நூல்களும்*
*வீணான நூல்களே யென்றாடு பாம்பே''*[32]

எனப் பாம்பாட்டிச்சித்தர் வேத, புராண, சாத்திர, தந்திரங்களைச் சாடுபவராக விளங்கியமையை மேற்கண்ட பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன.

பாம்பாட்டிச்சித்தர் சாதிகளைச் சாடுபவராகவும், சமயங்களை வெறுப்பவராகவும், சடங்குகளை எதிர்ப்பவராகவும் திகழ்ந்துள்ளார். சாத்திர நூல்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவன் இறைவன் என்பது அவரது முடிவாகும்.

### 2.6.2. சிவவாக்கியார்

சிவவாக்கியார் சாதி சமயப் பாகுபாடற்ற ஒரு சமனிலைச் சமுதாயத்தைக் காணப் பெரிதும் விழைந்தவர். இவரது பாடல்களில் புரட்சிகரமான பகுத்தறிவுச் சிந்தனைகள் நிரம்பிக் காணப்படுகின்றன. மேலும் இவர் பகுத்தறிவுக்கு ஒவ்வாத சாதி சமயச் சடங்குகளையும் போலி வேடதாரிகளையும் வன்மையாகக் கண்டித்தவர். மனிதர்களில் பார்ப்பார், பறையர் என இனம் பிரித்துப் பார்ப்பவர்க்குத் தக்க எடுத்துக் காட்டுகளைக் கூறிப் புரிய வைக்க முனைகின்றார்.

*''பறைச்சியாவ தேதடா பனத்தியாவ தேதடா*
*இறைச்சிதோ லெலும்பிலும் இலக்கமிட் டிருக்குதோ*
*பறைச்சிபோகம் வேறதோ பனத்திபோகம் வேறதோ*
*பறைச்சியும் பனத்தியும் பகுத்துபாரும் உம்முளே''*[33]

எனும் பாடலில் தாழ்ந்தசாதிப் பெண்ணென்றும், பார்ப்பனப் பெண் என்றும், பிரித்துப் பேசும் மானிடரை எள்ளி நகையாடுகின்றார். பறைச்சி உடம்பிலும், பார்ப்பனத்தி உடம்பிலும் உள்ள தசை, தோல், நரம்பு

மற்றும் எலும்புகளில் எண்ணிக்கை வேறுபாடு ஏதுமில்லை. இருவரில் எவரைக் கூடினாலும் என்ன வேறுபாடு இருந்திடப் போகிறது என்பதனை எண்ணிப்பாருங்கள் என்று சாதியைப் போற்றுபவரைப் பார்த்து அவர் வினவுகின்றார். இவை யாவும் சாதியை மறுக்கும் சிந்தனை அவரிடம் இருந்தமையை உணர்த்துகின்றன.

சிவவாக்கியார் பின்வரும் பாடலின் வாயிலாகச் சாதிமத பேதத்தை வன்மையாகச் சாடுகின்றார்.

*மேதியோடு ஆவுமே விரும்பியே புணர்ந்திடில்*
*சாதிபேத மாய்உருத் தரிக்குமாறு போலவே*
*வேதமோது வானுடன் புலைச்சிசென்று கூடிடில்*
*பேதமாய்ப் பிறக்கிலாத வாறதென்ன பேசுமே.''*[34]

எருமையோடு காளைமாடு கூடினால் பேதமான கரு உருவாகும். ஆனால் வேதப் பண்டிதனோடு தாழ்ந்தகுலப் புலைச்சி கூடினால் கருபேதமாக உருவாவதில்லை. மானுடக் குழந்தையே உருவாகிப் பிறக்கின்றது. எனவே மனித இனத்தில் சாதியைப் பிரித்துப் பேசுவது அறிவுக்குப் பொருந்தாத செயல் என்றுகூறும் சிவவாக்கியார் சாதியை மறுப்பவராகவும், மனிதர் யாவரும் ஒன்றே என்ற சிந்தனை உடையவராகவும் விளங்கினார் என்பதனை அறிந்துகொள்ள முடிகின்றது.

சிவவாக்கியார் மற்றுமொரு பாடலில் நல்லதோர் உவமையைக் கூறிச் சாதி மறுப்புக் கொள்கையைப் புரியவைக்கின்றார். அதாவது ஐம்பூதங்களின் கூட்டுச் சேர்க்கையினால் மனித உடல் உருவெடுத்துள்ளது. அடிப்படைப் பண்புகளால் எவர் உடல்களும் வேறுபடுவதில்லை. அணிந்துகொள்ளும் உறுப்பிற்கேற்ப அணிகலன்களின் வடிவமைப்புகளும், கவர்ச்சியும், செய்முறைகளும் வேறுபடுகின்றன. எல்லாவித அணிகலன்களுமே பொன் என்ற ஒன்றினால் மட்டுமே செய்யப்படுகின்றன. மேலும் ஆறு, ஏரி, குளம், கிணறு, கால்வாய், கடல் என அனைத்திலும் இருக்கும் தண்ணீர் எல்லாமே நீர் என்ற ஒரே பூதமாகும். காதில் அணிந்து கொள்கிற வாளி, காரை, கம்பி, பாடகம் முதலான பொருள்கள் அனைத்தும் பொன் என்ற ஒரே உலோகத்தால் உருவானதாகும். அவ்வாறிருக்கும்போது சாதிபேதம் ஏன் என்று சிவவாக்கியார் வினவுகின்றார். சாதிபேதம் கூடாது என்பதனைச் சிவவாக்கியார்,

*''சாதியாவ தேதடா சலம்திரண்ட நீரெல்லாம்*
*பூதவாசல் ஒன்றலோ பூதமைந்தும் ஒன்றலோ?*
*காதில்வாளி காரைகம்பி பாடகம்பொன் ஒன்றலோ*
*சாதிபேதம் ஓதுகின்ற தன்மையென்ன தன்மையோ?''*[35]

என்னும் பாடல்வழி அறிவுறுத்துகின்றார்.

அனைவரது உடம்பினுள்ளும் பரம்பொருள் பரிமளிக்கின்றபோது

அதனைத் தேடாமல் விட்டுவிட்டுச் சாதி பேதங்களைப் பாராட்டக்கூடாது. அவை தேவையில்லை என்று சிவவாக்கியர் வலியுறுத்துகிறார். இதனை,

*''சாதிபேதம் என்பதொன்று சற்றுமில்லை இல்லையே''*[36]

என்னும் பாடலடி வெளிப்படுத்துகிறது.

சிவவாக்கியார் நாட்டில் தீண்டாமை பரவலாக இருந்து வருவதனைக் கண்டு உள்ளம் கொதிக்கிறார். அத்தீண்டாமைக் கொடுமைகளை,

*''தீட்டம்தீட்ட மென்றுநீர் தினமும்மூழ்கும் மூடரே*
*தீட்டமாகி யன்றலோ திரண்டுகாய மானது*
*பூட்டமாக உம்முளே புகழுகின்ற பேயரே*
*தீட்டம்வந்து கொண்டலோ திரண்டதிந்த உலகமே''*[37]

எனச் சிவவாக்கியார் படம்பிடித்துக் காட்டுகிறார். புலையன் கைபட்ட தீட்டோ, மாதவிலக்குப் பெண் கைபட்ட தீட்டோ, தீட்டு என்று சொல்லி நீரில் மூழ்கிவிட்டு வருகின்ற மக்களே, தீட்டினால் அல்லவா இந்த உடம்பு வந்தது. பெண்களுக்கு மாதவிடாய் எனும் தீட்டுவந்தல்லவா உலக மக்கள் தொகை பெருகியது. எனவே மனிதர்களுக்குள் சாதிமத பேதம் கற்பித்து, பிரிவினைகளை வகுத்து, தீண்டாமையென்றும், குலச்சடங்குகள் என்றும் பேசி மக்களைப் பேதப்படுத்திப் பார்க்காதீர் என அறிவுறுத்துகிறார்.

சமயம் என்பது மக்கள் தம்முள் உள்ள வேறுபாடுகளை மறந்து ஒன்றுபட்டு ஒருவருக்கொருவர் அன்பு பூண்டு வாழச் செய்யவேண்டிய ஒரு சமூக அமைப்பு. அத்தகைய சமயங்களைச் சுயநலவாதிகள் இயக்கங்களாக நடத்தி மக்களிடையே பேதத்தை உருவாக்கி வருகின்றனர். சமயத்தின் உண்மையான இயல்பை உணர்ந்திருந்த சித்தர்களுக்குச் சமயக் கடவுளும், சடங்குகளும் பொருளற்றவையாகத் தோன்றின. எனவே அவற்றைச் சாடி மக்களுக்கு நல்லறிவைப் புகட்டும் முயற்சியை மேற்கொண்டனர். அவ்வாறான சமயச் சடங்குகளைச் சாடுவதில் முன்னோடியாகச் சிவவாக்கியாரைக் காணமுடிகிறது.

இந்து மதத்தில் சாத்திர நூல்களை ஓதுவதனையும் படிப்பதனையும் சிலர் மரபாகக் கொண்டுள்ளனர். அச்சாத்திரங்களை ஓதுகின்ற பட்டர் ஒருவரைப் பார்த்துச் சிவவாக்கியார் மரணகாலத்தில் உடல்வியர்த்து மூச்சுத்திணரும்போது அச்சாத்திரங்கள் வந்து நோயையோ மரணத்தையோ தடுத்து நிறுத்துவதில்லை. வேதங்களைப் படிக்கின்ற சடங்கால் ஒரு பயனும் ஏற்படப் போவதில்லை என்னும் உண்மையினைச் சிவவாக்கியார்,

***''சாத்திரங்கள் ஓதுகின்ற சட்டநாத பட்டரே***
***வேர்த்திரைப்பு வந்தபோது வேதம்வந்து உதவுமோ?''***[38]

என்னும் பாடலடிகளின் வாயிலாகப் புலப்படுத்துகிறார். மேலும் சிவவாக்கியார்,

*"நாலுவேதம் ஓதுறீர் ஞானபாடம் அறிகிலீர்*
*பாலுள்நெய் கலந்தவாறு பாவிகாள் அறிகிலீர்*
*ஆலம்உண்ட கண்டனார் அகத்துளே இருக்கவே*
*காலன்என்று சொல்லுவீர் கனாவிலும் அஃதில்லையே"*[39]

என்னும் பாடலின் வழியே வேதம் ஓதுபவர்களைப் பார்த்து வினவுவது ஏற்புடையதாகும். நான்கு வேதங்களையும் ஓதுகின்றீர். வேதங்களுக்குள்ளேயும் ஞானம் இருக்கின்றது சிவன் உங்களது உள்ளத்திலேயே இருக்கிறார். அதனை அறியாமல், எமன் என்றெல்லாம் இருப்பதாகக் கூறுவது முற்றிலும் பொய்யாகும் என்று சிவவாக்கியார் எடுத்துரைக்கிறார்.

கோயில்களைப் புதுப்பிக்கும்போதும், புதிதாகக் கோயில்களை எழுப்பிக் குடமுழுக்கு விழா எடுக்கும்போதும் வேள்வித்தீயை வளர்க்கக் குண்டம் அமைத்து அதில் நவதானியங்கள், மூலிகைக் குச்சிகள், மிளகாய், நெய், பட்டாடை போன்றவைகளை இட்டுத் தீயை மூட்டுவதால் அது இட்ட குண்டம் எனப் பெயர் பெறுகிறது. வேத மந்திரங்களை ஓதி அதில் நெய்யைவிட்டுத் தீயை வளர்த்தும், சுட்ட மட்குடத்தில் குறுக்கும் நெடுக்குமாக நூலைச் சுற்றி அதில் நீரை வார்த்தும் செய்யும் சடங்குகளால் எந்தப் பயனும் விளையப் போவதில்லை எனச் சிவவாக்கியார் சடங்குகளைச் சாடுகிறார். இதனை,

*“இட்ட குண்டம் ஏதடா இருக்குவேதம் ஏதடா*

*சுட்டமட் கலத்திலே சுற்றுநூல்கள் ஏதடா”*[40]

என்னும் பாடலடிகளின் மூலம் அறியமுடிகிறது.

புறச்சடங்குகளால் இறைவனை அடையமுடியாது என்பதனைச் சிவவாக்கியார் பின்வரும் பாடல்மூலம் அறுதியிட்டுக் கூறுகிறார்.

*“ஊரிலுள்ள மனிதர்கள் ஒருமனதாய்க் கூடியே*

*தேரிலே வடத்தைவிட்டு செம்பைவைத்து இழுக்கிறீர்*

*ஆரினாலும் அறியொனாத ஆதிசித்த நாதரை*

*போரிலான மனிதர்பண்ணும் புரளிபாரும் பாருமே”*[41]

மக்கள் மதம்சார்ந்த கோயில் விழாக்களில் ஒன்றுகூடித் தேரிலே வடத்தைக் கட்டித் தேரின்மீது கலசத்தை வைத்து இழுக்கின்றார்கள். போர்க்களத்திலே பல்வேறு படைகளோடு வில்லேந்திய வீரரும் வாளேந்திய வீரர்களும், எழுப்புகின்ற ஓசையைப் போன்று தேரின்வடத்தைப் பிடித்து ஓசையெழுப்பி இழுத்துச் செல்கின்றனர். இதுபோன்ற சடங்குகள் மூலமெல்லாம் இறைவனைக் காணமுடியாது என்று சிவவாக்கியார் குறிப்பிடுகிறார்.

மக்கள் எங்கள் தெய்வம், உங்கள் தெய்வம் என்று கூறித் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்வதனைக் கண்ட சிவவாக்கியார் மனம் வெதும்பி,

*"எங்கள்தெய்வம் உங்கள்தெய்வம் என்றிரண்டு பேதமோ*

*உங்கள்பேதம் அன்றியே உண்மையிரண்டு இல்லையே"*[42]

எனப் பாடுகின்றார். உலகுக்கெல்லாம் பரம்பொருள் ஒன்றுதானேயொழிய இரண்டு மூன்று தெய்வங்கள் உலகில் உண்டென்று கூறுவதெல்லாம் சுத்தப்பொய் என்று சிவவாக்கியார் எண்ணுவதாகக் கருதமுடிகிறது. இவ்வுண்மையினை,

*'ஒரு தனிப்பட்ட கடவுளிடத்தில் உணர்ச்சி மிகுதியால் ஏற்படும் பக்தியைச் சித்தர்கள் ஏற்பதில்லை. பக்தி இயக்கம் கூறும் கடவுள் இரண்டு தவறான கருத்துக்கள் தோன்றுவதற்குக் காரணமாக அமைகின்றன. ஒன்று தனிப்பட்ட தெய்வமென்பது, மற்றொன்று கடவுளைப் படைப்பவன் என்று கருதுவது அப்படியானால் கடவுளைப் படைப்பவனுக்கும் அவனால் படைக்கப்பட்ட பொருளுக்கும் ஒரு பிரிவு ஏற்படுகிறது என்பதே சிவவாக்கியரின் கருத்தாகும்"*[43]

என்று த.ந. கணபதி கூறுகிறார்.

உலகிலுள்ள ஒவ்வொரு சமயத்திற்கும் சாத்திர நூல்கள் இருப்பதனைக் காணமுடிகின்றது. அதைப்போலவே ஒவ்வொரு சமயத்தைச் சார்ந்தோருக்கும் வழிமுறைகளும் கட்டுப்பாடுகளும்

வகுக்கப்பட்டுள்ளன. அப்படிப்பட்ட வேத மந்திரங்களும் ஆகமங்களும் உலகிலுள்ள ஆண்பெண் அவர்தம் சுற்றத்தார் என அனைத்து மக்களையும் மயக்கநிலைக்கு ஆளாக்கும் தூக்கமாத்திரைகள் என்று சிவவாக்கியார் கருதுகின்றார். ஏனெனில் கண்டிராத சடங்குகளைக் காணும்போதும், அறியாத புரியாத வேதமந்திரங்களைக் கேட்கும்போதும் தூங்கவோ வேடிக்கை பார்க்கவோதான் முடியும். இவ்வுண்மையினை,

*''ஆதரித்த மந்திரம் அமைந்தஆக மங்களும்*
*மாதர்மக்கள் சுற்றமும் மயக்கவந்த நித்திரை''*[44]

என்னும் சிவவாக்கியார் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன.

தமது உள்ளத்தில் குடிகொண்டுள்ள இறைவனை அறியாதவர்கள் நான்கு வேதங்களையும் பயபக்தியுடன் ஓதினாலும் அவர்களால் சிவனை அறியமுடியாது. அவர்களது இம்முயற்சி பயனற்றது என்பது சிவவாக்கியாரின் கருத்தாக இருப்பதனைப் புரிந்துகொள்ள முடிகின்றது.

*''சாமநாலு வேதமும் சகலசாத் திரங்களும்*
*சேமமாக ஓதினும் சிவனைநீர் அறிகிலீர்''*[45]

என்னும் பாடலடிகள் கொண்டு உணரமுடிகின்றது.

வேதங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவனாக விளங்குகின்ற இறைவனை நான்கு வேதங்களிலுமுள்ள ஓரெழுத்தையும் விடாமல்

ஓதினாலும், திருநீற்றை அள்ளி நெற்றியில் பூசிக்கொண்டாலும், பலவற்றையெல்லாம் கூறிப் புலம்பினாலும் காணவியலாது என்கிறார் சிவவாக்கியார். இதனை,

***"வேதம்ஓதும் வேலையோ வீணதாகும் பாரிலே"***[46]

என்றும்,

***"இருக்குநாலு வேதமும் எழுத்தையற ஓதினும்***
***பெருக்குநீறு பூசினும் பிதற்றினும் பிரானிரான்"***[47]

என்றும் கூறுவதன் மூலமாகவும் அறியமுடிகின்றது.

சிவவாக்கியார் சாத்திரச் சடங்குகளை,

***"சாத்திரங்கள் பார்த்துப்பார்த்து தான்குருடு ஆவதால்***
***நேத்திரங்கெட வெய்யோனை நேர்துதிசெய் மூடர்காள்!***
***பாத்திரம் அறிந்துமோன பக்திசெய்ய வல்லீரேல்***
***சூத்திரப்படி யாவரும் சுத்தராவர் அங்ஙனே"***[48]

என வன்மையாகச் சாடுகின்றார்.

சாத்திர நூல்களைத் திரும்பத் திரும்பப் பலநூறுமுறை படித்தாலும் அவற்றைப் பார்த்துப்பார்த்துக் கண்கள் ஒளியிழந்து குருடு ஆகுமேயொழிய அந்நூல்களைப் பயில்வதால் ஒரு பயனும் கிட்டாது என்கிறார் அவர். மேலும் கதிரவனைப் பார்த்து வணங்குவதும்

கன்னங்களில் கையால் அடித்துக்கொள்வதும், கற்பூரம் காட்டுவதும் அறிவில்லாத மூடர்களின் செயல்களாகும் என அவர் சாடுகிறார்.

*''பாலுள்நெய் கலந்தவாறு பாவிகாள் அறிகிலீர்''*[49]

எனவும் சிவவாக்கியார் சுட்டுகின்றார். பாலுக்குள்ளே நெய்யானது கலந்திருப்பதுபோல உனக்குள்ளே இருக்கின்ற இறைவனை மனத்தை அலையவிடாமல், எங்கும் ஓடாமல் இருந்த இடத்திலிருந்து கொண்டே தியானித்தால் காணலாம் என்பது சிவவாக்கியாரின் முடிவாகும்.

**2.6.3. அகத்தியர்**

அகத்தியர் என்ற பெயரில் பலர் இருந்துள்ளனர். எனினும் சித்தர்களுள் ஒருவராகிய அகத்தியர் சாத்திர நூல்களைத் தயக்கமேதுமின்றிச் சாடுபவராகவே விளங்கியுள்ளார். இதனை,

*''சாத்திரத்தைச் சுட்டெரித்தால் அவனே சித்தன்''*[50]

என்னும் அவரது பாடலடி காட்டுகின்றது. அகத்தியர் உலகில் எத்தனை சமயங்கள் இருப்பினும் தெய்வமென்பது ஒன்றே என வலியுறுத்துகிறார். இதனை 'ஒருவனென்றே தெய்வத்தை வணங்கவேண்டும்' என்னும் அவரது பாடலடி சுட்டுகின்றது.

**2.6.4. திருமூலர்**

மூவாயிரம் பாடல்களில் மருத்துவம், தியானம், தத்துவம், யோகக்

கலை முதலியன பற்றிக் கூறிய திருமூலருக்கு வேதங்களில் உடன்பாடு இல்லை. அவர் அவற்றைத் தேடிக் கண்டு பயில்வதும் வீணான வேலையே என்கிறார். மேலும் வேதம் பயில்வதனால் இறைவனைக் காணவே முடியாது என்று திருமூலர் கூறுவதனை அவரது பாடல்வரியே காட்டுகிறது.

*''வீண்பயிலும் வேதமெல்லாம் தேடிக் காணா''*[51]

என வேதங்களில் எல்லாம் இறைவனைக் காணமுடியாது என்று கூறுவதோடு ஒரு சமத்துவ சமுதாயச் சிந்தையும் அவரிடம் இருந்ததனைப் பார்க்க முடிகிறது. உலகிலுள்ள மானுடர் அனைவரும் ஒரே குலம் என்றும், உலகம் முழுவதற்கும் ஒரே கடவுள்தான் என்றும் திருமூலர் குறிப்பிடுகிறார்.

*'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'*

என்ற திருமூலரின் பாடலடி உலக மக்களின் ஒற்றுமைச் சிந்தனையின் மீது அவர் கொண்டிருந்த ஈடுபாட்டை வெளிப்படுத்துகிறது.

**2.6.5. பத்திரகிரியார்**

பட்டினத்தாரின் சீடரான பத்திரகிரியாரும் சாத்திர புராண நூல்களையும், நான்கு வேதங்களையும் பொய்யான நூல்கள் எனவும், அவற்றின் மூலமாக மெய்ப்பொருளைக் காணவியலாது எனவும் குறிப்பிடுகிறார். எனவே சாத்திர நூல்களையெல்லாம் சுட்டுப்பொசுக்கி

ஒதுக்கித் தள்ளிவிட்டு எங்கும் நிறைந்திருக்கின்ற அந்த உண்மைப் பொருளைக் கண்டு துயரின்றி வாழ வேண்டும் என்றும், அவ்வாறு வாழும் நாள் எந்நாளோ என்றும் கூறி ஏங்குகிறார். இதனை,

*''சாத்திரத்தைச் சுட்டு சதுர்மறையைப் பொய்யாக்கிச்*
*சூத்திரத்தைக் கண்டு துயர்அறுப்ப தெக்காலம்''*[52]

என்னும் அவரது பாடலடிகள் புலப்படுத்துகின்றன. வேதசாத்திரங்களைச் சாடுவதனைப் பத்திரகிரியாரிடமும் பார்க்க முடிகின்றது. மேலும் அவர் சாதிவகை ஏதுமில்லாமல் வாழும் வாழ்க்கை இவ்வுலகத்தில் என்று வாய்க்குமோ என்றும் ஏங்குகிறார். அவரது ஏக்கத்தை,

*''ஆதிகபிலர் சொன்ன ஆகமத்தின் சொற்படியே*
*சாதிவகை இல்லாமல் சஞ்சரிப்ப தெக்கலாம்''*[53]

என்னும் அவரது பாடலடிகள் கொண்டு தெளிய முடிகின்றது. பத்திரகிரியாரும் சாதிவகையில்லாத ஒரு சமுதாயத்தைக் காணவிரும்புவதனை இக்கண்ணி தெளிவாக்குகிறது.

**2.6.6. கொங்கணச்சித்தர்**

ஆயிரக்கணக்கான சாதிகளை உருவாக்கி, மனித இனத்தில் பேதம்பிரித்துப்பேசும் மக்களைப் பார்த்துக் கொங்கணச் சித்தர் கூறும் கருத்துகள் போற்றுதற்குரியனவாகும். உலகம் முழுவதும் தெய்வம் என்பது ஒன்றேயாகும். பாலில் இருந்துதானே தயிர், மோர், நெய் மற்றும்

பால்படுபொருட்கள் என எல்லாமும் கிடைக்கின்றன. அதுபோலத்தான் உலகினில் பல கடவுளர் பெயர்களைக் கற்பித்தாலும், ஒவ்வொரு கடவுளுக்கும் பின்னும் ஒரு மதமும் அதனையொட்டிய சாதியமைப்புகளும் இருந்தாலும், எல்லா மதத்தவர்க்கும் மேலானதாக விளங்குவது ஒரேயொரு பரம்பொருள்தான். இவ்வுண்மையினை உணராமல் சாதிபேதங்களைக் கற்பித்துச் சமூக ஒற்றுமைக்குக் குந்தகம் விளைவிக்க வேண்டாம் என்று கொங்கணர் மக்களைக்கேட்டுக் கொள்வதனை,

*''சாதி பேதங்கள் சொல்லுகிறீர் தெய்வம்*
*தானென் றொருவுடல் பேத முண்டோ?*
*ஓதிய பாலதில் ஒன்றாகி யதிலே*
*உற்பத்தி நெய்தயிர் மோராச்சி''*[54]

என்னும் அவரது பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**2.6.7. குதம்பைச் சித்தர்**

குதம்பைச் சித்தர், சமுதாயத்தில் மேலோர் கீழோர் என்னும் பேதங்கள் மக்களிடையே திணிக்கப்பட்டபோது அதனைக் கண்டு வெகுண்டு எழுகிறார். மாந்தரிடையே சாதிப்பிரிவினைகளைப் புகுத்துவதை ஏற்றுக்கொள்ள முடியாது எனக் கூறும் அவர் சாதிப் பிரிவினைகளைப் போக்கும் முயற்சியில் ஈடுபடுவதனையும் அறிய முடிகின்றது.

குதம்பைச் சித்தர் ஆதியிலே சாதிகளெல்லாம் கிடையாது எனவும், இருக்கின்ற சாதிகள் அனைத்தும் கற்பனையால் உருவாக்கப்பட்டவை எனவும் இயம்புகிறார். அவர் பலவாறான சாதிகள் மக்களிடையே இருப்பதனை ஏற்றுக்கொள்ள மறுக்கிறார். இதனை,

*"ஆண்சாதி பெண்சாதி யாகும் இருசாதி*
*வீண்சாதி மற்றவெல்லாம் - குதம்பாய்*
*வீண்சாதி மற்றவெல்லாம்"*[55]

என்னும் அவரது பாடலடிகள் காட்டுகின்றன. உலகில் ஆண்சாதி, பெண்சாதி என இருசாதிகள் மட்டுமே உண்டு என்றும், ஏனைய சாதிகள் யாவும் வீண் வம்பு வழக்குகளை வளர்த்துச் சமுதாய ஒற்றுமையைக் கெடுக்கும் என்றும் அவர் கூறுகிறார். மக்கள் சாதியால் பிளவுண்டு சண்டை இட்டு மாண்டு மடிவதைக் குதம்பைச் சித்தர் விரும்பவில்லை. மேற்கண்ட அவரது பாடல்கள் அவரது மனிதநேயப் பண்பினை வெளிப்படுத்துவதனைக் காணமுடிகிறது. குதம்பைச் சித்தர்,

*"பார்ப்பார்கள் மேலென்றும் பறையர்கள் கீழென்றும்*
*தீர்ப்பாகச் சொல்வதென்ன - குதம்பாய்*
*தீர்ப்பாகச் சொல்வதென்ன"*[56]

என்னும் பாடலில் பார்ப்பனர்களை மேலோர் என்றும், பறையர்களைக் கீழோர் என்றும் எந்த அளவுகோலை வைத்துப் பாகுபாடு செய்தீர்கள்

என வினவுகின்றார். கள்ள மனம் கொண்டோர் செய்த இப்பாகுபாடு அறவழிப்பட்டதன்று என்பது குதம்பைச் சித்தரின் முடிவாகும். மேலும் அவர்,

*“பார்ப்பாரைக் கர்த்தர் பறையரைப் போலவே*
*தீர்ப்பாய்ப் படைத்தாரடி - குதம்பாய்*
*தீர்ப்பாய்ப் படைத்தாரடி”*[57]

என்று பாடுகின்றார். பார்ப்பாரை இறைவன் எப்படிப் படைத்தானோ, அப்படியேதான் பறையரையும் படைத்தான். இவ்வுண்மையினை உணராமல் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்று கூறுவது இறைவனின் படைப்பைக் கேலி செய்வது போன்றதாகும் என்பது குதம்பைச் சித்தரின் முடிவாகும். கல் மனம் படைத்தவர்கள் சாதிப்பாகுபாடுகளைக் கற்பனையாகப் புனைந்துவிட்டனர் என்று குதம்பைச் சித்தர் குறிப்பிடுகிறார். இதனை,

*‘பற்பல சாதியாய்ப் பாரில் பகுத்தது*
*கற்பனை யாகுமடி - குதம்பாய்*
*கற்பனை யாகுமடி’*[58]

என்ற அவரது பாடலடிகள் சுட்டுகின்றன. மேலும் அவர் நாட்டிலுள்ள சாதிகள் அனைத்தும் கட்டுக்கதையாகக் கட்டிவிடப்பட்டவை என்றும் அறிவுறுத்துகின்றார்.

*‘சுட்டிடும் சாதிப்பேர் கட்டுச்சொல் அல்லாமல்*
*தொட்டிடும் வஸ்தல்லவோ - குதம்பாய்*
*தொட்டிடும் வஸ்தல்லவோ.’*[59]

சாதிகள் கற்பனையாகக் கூறப்பட்டவை; கட்டுக்கதையாகக் கட்டி விடப்பட்டவை. பிறரைத் தொட்டுவிட்டாலே தீட்டு என்று சொல்வதையும் ஏற்றுக்கொள்ள முடியாது என்று கூறும் குதம்பைச் சித்தர் சாதியத்தை வன்மையாகக் கண்டிக்கின்றார். மேலும், படைப்புக் கடவுளாகிய நான்முகனின் படைப்பில் சாதிப்பாகுபாடுகள் இல்லை என்பதனைக் குதம்பைச் சித்தர்,

*“ஆதிப் பிரம்மம் ஆக்கும்அக் காலையில்*
*சாதிகள் இல்லையடி - குதம்பாய்*
*சாதிகள் இல்லையடி”*[60]

என்னும் பாடலடிகளின் வழியே விளக்குகின்றார்.

*“சாதி வேறென்றே தரம்பிரிப் போருக்குச்*
*சோதி வேறாகுமடி குதம்பாய்*
*சோதி வேறாகுமடி”*[61]

என்ற குதம்பைச் சித்தரின் பாடலடிகள், மக்களை வேறுவேறு இனமாகப் பிரித்துப் பேசுவோருக்குச் சோதி வேறாக இருக்கும் என்றுரைக்கின்றார்.

உலகில் நன்னெறியைப் பின்பற்றி அறவழியில் வாழ்க்கை நடத்துபவரே ‘நீதிமான்’ ஆவார். அவரே உண்மையான ‘சாதிமான்’ என்றும் புகழப்பெறுவார் என்பது குதம்பைச்சித்தரின் முடிவாகும். இவ்வுண்மையினை அவர்,

*‘நீதி மானென்றே நெறியாய் இருப்பானே*
*சாதிமான் ஆவானடி குதம்பாய்*
*சாதிமான் ஆவானடி’*[62]

என்ற பாடலடிகளின் வாயிலாக எடுத்துரைக்கின்றார்.

குதம்பைச்சித்தர் சாதியைப் பற்றியும் சமயங்களைப் பற்றியும் இறுதியாக ஒரு முடிவுக்கு வருகிறார். என்னைப் பொறுத்த வரையில் சாதியென்பதும், சமயமென்பதும் இல்லவே இல்லை. எனவே நீங்களும் ஆராய்ந்து உணர்ந்திடுங்கள் என்று சாதி சமயம் போற்றுகின்ற மானிடர்க்கு ஓர் அன்பு வேண்டுகோள் விடுக்கின்றார். சாதி தேவையா, அவற்றைத் தோற்றுவித்தார்கள் யார், ஏன் தோற்றுவித்தார்கள், எதற்காகத் தோற்றுவித்தார்கள் என உணர்ந்து பாருங்கள். உண்மை புலப்படும் என்று அன்புக்கட்டளையிடுகின்றார். குதம்பைச் சித்தர் இவ்வுண்மையினை,

*“சாதி ஒன்றில்லை சமயம் ஒன்றில்லை*

*ஓதி உணர்ந்தறிவாய் - குதம்பாய்*

*ஓதி உணர்ந்தறிவாய்”*[63]

என்ற அவரது பாடலடிகளில் புலப்படுத்துகின்றார்.

மக்கள் தமது நெஞ்சத்தில் குடிகொண்டுள்ள இறைவனை எண்ணி உணர்வதனை விட்டுவிட்டு மதத்தின் பெயரால் நடைபெறும் புறச் சடங்குகளைச் சித்தர்கள் முற்றிலும் வெறுத்தனர். சமயச் சடங்குகளைப் பார்த்த குதம்பைச் சித்தரும் கொதித்து எழுகிறார். அக்கொதிப்பினைத் தம் பாடல்களின் வழியே அவர் வடித்தளிக்கின்றார்.

மதத்தொடர்பான சடங்குகளைச் செய்யும்போது கோழி, ஆடு, மாடு போன்ற விலங்குகளைப் பலியிட்டு வேள்வித்தீயினில் அவற்றை வேகச்செய்து உண்பவர்க்குப் பாவத்திலிருந்து மீள வழியே இல்லை என்று குதம்பைச்சித்தர் கூறுகிறார். இது பிற உயிர்களைக் கொல்லக் கூடாதெனும் அவரது கொள்கையையும் மன்னுயிர்கள் மீது அவர்கொண்டிருந்த கருணையையும் புலம்படுத்துகின்றது.

*“வேள்வியில் ஆட்டினை வேவச்செய்து உண்போர்க்கு*

*மீள்வழி இல்லையடி - குதம்பாய்*

*மீள்வழி இல்லையடி”*[64]

என்றும்,

*“சத்தியமான தவத்தில் இருப்போர்க்கு*
*உத்தியம் ஏதுக்கடி - குதம்பாய்*
*உத்தியம் ஏதுக்கடி.”[65]*

உண்மையான தவத்தில் இருப்போர்க்குத் தீமூட்டி வளர்த்திடும் பல்வேறு வகையான யாகங்கள் (உத்தியம்) எல்லாம் எந்த ஒரு நன்மையையும் தரப்போவதில்லை. எனவே யாகம் வளர்ப்பது வீணான வேலையாகும் என்று குதம்பைச்சித்தர் கருதுகின்றார்.

குதம்பைச்சித்தர் பின் வரும் பாடலின் வழியே பூசைகளையும் பூசைசெய்வோரையும் மடையர்கள் என்று சாடுகின்றார்.

*“பாழாகப் பூசைகள் பண்ணும் மடையர்க்கே*
*ஏழாம் நரகமடி - குதம்பாய்*
*ஏழாம் நரகமடி.”[66]*

அவர் பல்வேறு பூசைகளைச் செய்பவர்கள் நரகத்திற்குச் செல்வார்கள் என்று கோபப்படுகிறார். இறைவனை அடையும் நோக்குடன் புறத்தே செய்யும் பூசைகள் தேவையற்றவை என்பது குதம்பைச் சித்தரின் சிந்தனையாகும்.

அண்டவெளியில் ஆயிரக்கணக்கான விண்மீன்களும், ஒன்பது வகையான கோள்களும் இருக்கின்றன. அக்கோள்கள் அனைத்தும்

கதிரவனை ஈர்ப்பு விசையால் சுற்றி வருகின்றன. அந்தக் கதிரவனைக்கூடத் தெய்வமென்று மதங்கள் கற்பிக்கும் செயல்களெல்லாம் வேடிக்கையானதாகும் என்பதனை,

*''சூரியன் தெய்வமாய்ச் சுட்டும் சமயந்தான்*
*காரியம் அல்லவடி - குதம்பாய்*
*காரியம் அல்லவடி''*

என்னும் பாடலடிகளின் வழியே குதம்பைச் சித்தர் குறிப்பிடுகிறார்.

குதம்பைச்சித்தர் உருவ வழிபாட்டினைச் சாடுகிறார்.

*''நீண்ட குரங்கை நெடிய பருந்தினை*
*வேண்டப் பயன்வருமோ குதம்பாய்*
*வேண்டப் பயன்வருமோ'' (பாடல்-153)*

கீழ்த்திருப்பதியிலிருந்து மேல்திருப்பதிக்குச் செல்லும் வழியில் பருந்துக்கு (கருடன்) நாற்பது அடிஉயரச் சிலை வைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். குரங்காகிய அனுமானுக்கு நாடு முழுதும் பல்வேறு ஊர்களில் உயரமான உருவச்சிலைகளை நிறுவியும், சிறிய உருவச் சிலைகளை வடித்தும் மக்கள் வணங்கி வழிபட்டு வருவதனைக் காணமுடிகின்றது. மனிதர்களால் செய்து வைக்கப்பட்ட அவற்றினை வணங்கி வேண்டுவதனால் எந்தவொரு பயனும்கிட்டப்போவதில்லை என்பது குதம்பைச்சித்தரின் முடிவாகும்.

குதம்பைச்சித்தர் பின்வரும் பாடலடிகளின் வாயிலாகப் பொய்யான மதத்தினரைச் சாடுவதனைக் காணமுடிகின்றது.

*''மெய்த்தேவன் ஒன்றென்று வேண்டாத பன்மதம்*
*பொய்த்தேவைப் போற்றுமடி - குதம்பாய்*
*பொய்த்தேவைப் போற்றுமடி'' (பாடல்-154)*

உண்மைப் பரம்பொருள் ஒன்றேயென்று உணராத மதத்தினர்தான் பொய்யான தெய்வங்களைப் போற்றி வணங்குவார்கள் என்று பொய்மதத்தினரைச் சாடுபவராகவும் குதம்பைச் சித்தரைப் பார்க்க முடிகின்றது.

சமயங்களுடன் நெருங்கிய தொடர்புடைய வேதங்கள், புராணக் கதைகள், சாத்திர நூல்கள் ஆகிய அனைத்தையுமே குதம்பைச் சித்தர் வெறுக்கின்றார். அவையெல்லாம் வெறும் போதனைகளேயாகும் என்பதனை,

*''வேதம் புராணம் விளங்கிய சாத்திரம்*
*போதனை யாகுமடி குதம்பாய்*
*போதனை யாகுமடி'' (பாடல்.202)*

என்ற பாடலடிகளின் மூலம் இயம்புகின்றார். வேதங்கள் யாவுமே வீணானவையாகும். அவற்றில் கூறப்பட்டுள்ள கருத்துகளை ஆய்வு செய்து பொருளற்ற அவற்றைப் புறக்கணித்து விடவேண்டும் என்பதனை,

*“வேதியர் கட்டிய வீணான வேதத்தைச்*

*சோதித்துத் தள்ளடியோ குதம்பாய்*

*சோதித்துத் தள்ளடியோ”*[67]

என்னும் பாடலடிகளின் வாயிலாக அறிவுறுத்துகின்றார்.

*“பற்பல மார்க்கம் பகர்ந்திடும் வேதங்கள்*

*கற்பனை யாகுமடி குதம்பாய்*

*கற்பனை யாகுமடி.” (பாடல்.152)*

வேதங்கள் கற்பனையால் புனையப்பட்டனவாகும் எனக்கூறி வேத சாத்திரங்களைச் சாடுபவராகக் குதம்பைச் சித்தர் விளங்குகின்றார்.

**2.6.8. இடைக்காட்டுச் சித்தர்**

புறவழிபாடுகளையும் அவற்றுக்குத் துணையாக இருக்கின்ற சாத்திரச் சடங்குகளையும் சித்தர்கள் பலரும் வெறுத்து உரைக்கின்றனர். இடைக்காட்டுச் சித்தரும் நல்லதோர் உவமை மூலமாகச் சமயச் சடங்கு வழிபாடுகளைச் சாடுகிறார். ஒளிவீசும் விளக்கினைக் கையில் வைத்துக்கொண்டு கடலில்போய் வீழ்ந்து மாள்வது அறியாமை. அதுபோலவே இறைமை என்னும் மெய்விளக்கு நம் உள்ளத்தினிலே இருக்கும்போது புறச்சடங்குகளிலும் சமய வழிபாடுகளிலும் மூழ்கிக்கிடப்பதும் அறியாமையே எனக் கூறுகிறார்.

*''கைவிளக்குக் கொண்டு கடலில் வீழ்வார்போல்*

*மெய்விளக்குஉன் உள்ளிருக்க வீழ்குவதேன் புல்லறிவே''*[68]

என்று கேட்டு, மக்களைச் சிந்திக்கத் தூண்டுகிறார் இடைக்காட்டுச் சித்தர்.

**2.6.9. கடுவெளிச் சித்தர்**

மதங்களில் சில உருவ வழிபாட்டினையும், சில உருவமிலா வழிபாட்டினையும் வலியுறுத்துகின்றன. மக்கள் உள்ளத்திலுள்ள இறைவனை உணராமல் ஊர்தோறும் சென்று ஆறுகளிலும், குளங்களிலும் நீராடி அருகிலுள்ள கோயில்களிலுள்ள சிலைகளைச் சுற்றி வணங்கி ஏதேதோ முணுமுணுக்கின்றனர். சிலர் தம் வாழ்நாளில் மனமறிந்து பாவத்தொழில் புரிந்துவிட்டுக் காசிக்குச் சென்று கங்கை நதியில் மூழ்கியெழுந்து ஊர் திரும்புகின்றனர். அவ்வாறு கங்கையாற்றில் மூழ்கினால் பழியும் நீங்காது நற்கதியும் வந்து சேராது என்ற உண்மையினைக் கடுவெளிச் சித்தர்,

*''காசிக்கு ஓடில் வினைபோமோ - அந்தக்*

*கங்கையா டில்கதி தானுமுண் டாமோ''*[69]

என்னும் பாடலடிகளின் வாயிலாக வலியுறுத்துகின்றார். இதன் வாயிலாகக் கடுவெளிச் சித்தர் வாழ்வில் நல்லனவற்றைச் செய்ய வேண்டும் எனவும், அல்லனவற்றை அகற்றி வாழவேண்டும் எனவும் மக்களுக்கு அறிவுறுத்துகின்றார்.

**2.6.10 வான்மீகச்சித்தர்**

*"நில்லென்ற பெரியோர்கள் பாஷை யாலே*

*நீடுலகந் தன்னுள்ளே நாலு வேதம்*

*வல்லமையாய்ச் சாத்திரங்கள் இருமூன் றாக*

*வயிறுபிழை புராணங்கள் பதினெட் டாகக்*

*கல்லுகளைக் கரைப்பதுபோல் வேதாந் தங்கள்*

*கட்டினார் அவரவர் பாஷை யாலே*

*தொல்லுலகில் நாற்சாதி அனேகஞ் சாதி*

*தொடுத்தார்கள் அவரவர்கள் பிழைக்கத்தானே"[70]*

என்ற வான்மீகச் சித்தரது பாடல், அக்காலப் பெரியோர்கள் நான்கு வகையான வேதங்களையும், அறுவகைச் சாத்திரங்களையும், பதினெட்டுவகைப் புராணங்களையும் தங்களது வயிற்றுப்பிழைப் பிற்காகவே உருவாக்கினார்கள் என்ற உண்மையினை உணர்த்துகின்றது. சாதியப் பாகுபாடுகளை ஏற்படுத்தியவர்களைக் கல் நெஞ்சம் கொண்டோர் என வான்மீகச் சித்தர் குறிப்பிடுவது ஏற்புடையதேயாகும்.

**2.6.11. அகப் பேய்ச்சித்தர்**

பேயாக அலையும் தன்மையுள்ள மனத்தை அகப்பேயாக உருவகப்படுத்திப் பாடியுள்ள அகப்பேய்ச் சித்தரும்,

*"வேதம் ஓதாதே - அகப்பேய்*

*மெய்கண்டோம் என்னாதே*

*பாதம் நம்பாதே - அகப்பேய்*

*பாவித்துப் பாராதே''*[71]

எனும் இப்பாடலில் ''ரிக் யசூர் சாம அதர்வண என்ற நான்கு வேதங்களையும் நீ படிக்காதே எனத் தன் மனத்திடம் கூறுகிறார். ஏனெனில் அவை ஞானகாண்டம், கர்ம காண்டம் என்ற இருவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஞானகாண்டம் பிரம்மத்தைப் பற்றிப் பேசுகின்றது. எனவே அது உபநிடதம் எனப்படும். கர்மகாண்டம் - வருணாசிரமம் மற்றும் தெய்வ பூசைகளை வருணாசிரம வகைப்படுத்திப் பிரிப்பதனால் சமுதாயத்தில் ஒற்றுமையின்மையும், மானிடரில் கீழ்மேல் என்ற பேதத்தையும் உண்டு பண்ணுவதனால் வேதங்களைப் படிக்காதே. அவை சமுதாயத்திற்குத் தேவையில்லை என்கிறார் அகப்பேய்ச் சித்தர்.''[72]

### 2.6.12. ஞானவெட்டியான்

''ஞானவெட்டியான் என்பதற்கு அறிவு நெறியைக் காட்டுகின்றவன் என்று பொருள். (ஞானம்-அறிவு; வெட்டி-வழி) சித்தர்களின் கொள்கைகளை விளக்கும் நூல்களிலே இதுவும் ஒன்று. பிணத்தைச் சுடுகின்ற தொழிலையுடைய வெட்டியான் ஒருவன்-உயர் வகுப்பினரை நோக்கி அறிவுரை கூறுவதால் இந்நூலுக்கு ஞானவெட்டியான் என்று பெயர் வந்ததாகச் சாமிசிதம்பரனார் கூறுவார்.''[73]

மனிதருள் இனம் பிரிப்பதும் சாதி வேற்றுமை பாராட்டுவதும் அறிவீனம்; இயற்கைக்கு மாறானது என்ற உண்மையினை ஞானவெட்டியான்,

*''சக்தியுடைப் பூசைசெய்யும் சுந்தரரே என்மனையில்*
*சக்தியைநீர் சேர்ந்ததனால் மைந்தன் தரியாதோ''*[74]

என்னும் பாடலடிகளின் வாயிலாக உணர்த்துகின்றார். சக்தி பூசைசெய்யும் உயர்குலத்தில் பிறந்தவன் என்று கூறிக்கொள்ளும் நீ என்வீட்டில் உள்ள பெண்ணுடன் சேர்ந்தால் அவளுக்குக் கருதரிக்காதோ என்று ஞான வெட்டியான் வினாத்தொடுப்பது சாலப்பொருத்தமுடையதேயாகும். ஞான வெட்டியான் மற்றொரு பாடலில்,

*''இஞ்சியிட மஞ்சளுண்டோ? ஏலம்இடச் சுக்காமோ?*
*நஞ்சுகந்த எட்டியிலும் நல்லஎலு மிச்சையுண்டோ?*
*துஞ்சுபுகழ் பூசைசெய்யும் சுந்தரரே எம்குலத்தில்*
*வஞ்சியைநீர் சேர்ந்ததனால் மைந்தன் தரியாதோ''*[75]

என்று வினவுகின்றார்.

இஞ்சியைப் பயிரிட்டால் மஞ்சள் விளைவதில்லை. ஏலத்தைப் பயிர்செய்தால் சுக்கு விளைவதில்லை. நச்சுத்தன்மை பொருந்திய எட்டிமரத்திலே நல்ல எலுமிச்சை தோன்றுவதில்லை. இஞ்சி பயிரிட்டால்

இஞ்சியும், ஏலம் பயிரிட்டால் ஏலமும், எட்டிமரத்திலே எட்டிக்காயும் தான் விளையும். அதனைப்போல உயர்குலத்தவன் என்று கருதும் நீ எம்குலத்துப் பெண்ணுடன் சேர்ந்தால் மைந்தன் பிறப்பதும் உறுதி. ஆதலால் எமக்கும் உமக்கும் வேற்றுமையே இல்லை, என்னும் உண்மையினை மேற்கண்ட பாடல் புலப்படுத்துகின்றது.

ஞானவெட்டியான்,

*"அம்புவியின் மான்அதனை அரிய வராகம்புணர*
*கும்பில்உரு வாகியதும் குட்டி அளிக்குமோதான்*
*நம்பிறவி அந்தணரே! நேயமுள சூத்திரரே*
*வம்புரைத்தீர் என்குலத்தை மருவஉரு வாகாதோ"*[76]

என உயர்ந்த சாதியினர் என்று கூறிக்கொள்வோரை நோக்கி வினாத் தொடுக்கின்றார்.

இவ்வுலகில் மான் எனும் விலங்குடன் பன்றி சேர்ந்தால் மான்வயிற்றிலே கரு உண்டாகிக்குட்டி பிறப்பதில்லை. நம் பிறப்பு உயர்ந்தது என்று நினைக்கும் அந்தணர்களாகிய நீங்கள் எமது குலத்தை இழிவானது என்று வேறுபடுத்திக் கூறுகின்றீர்கள். எம்குலப்பெண்களை நீங்கள் மணந்தால் அப்பெண்களின் வயிற்றில் கருத்தரிக்காது போகாது என்ற உண்மையினை உணர்த்துகின்றார்.

மேற்போந்த ஞானவெட்டியான் பாடல்கள் மக்களுக்குள் பேதமில்லை, சாதி மத வேற்றுமை கூறுவது தவறு என்பதனை உணர்த்துகின்றன. மனிதர்கள் எந்த நிறத்தில் இருந்தாலும் அவர்கள் அனைவரும் ஒரே இனத்தைச் சார்ந்தவர்கள் என்ற உண்மையைச் சித்தர் பாடல்கள் அறிவுறுத்துகின்றன.

**2.7. சாதியைச் சாடிய சான்றோர்கள்**

பண்டைக்காலம் முதல் இன்றுவரை சான்றோர் பெருமக்கள் பலர் சாதிப்பிரிவினைகளையும், சாதிப் பிரிவினைகளால் ஏற்படும் தீமைகளையும் எடுத்துரைத்து வருவதனைக் காணமுடிகின்றன.

**அவ்வையார்,**

*'சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்*
*நீதி வழுவா நெறிமுறையில் - மேதினியில்*
*இட்டார் பெரியோர் இடாதோர் இழிகுலத்தோர்*
*பட்டாங்கில் உள்ள படி'*[77]

என்று குறிப்பிடுகின்றார். உலகில் இரண்டு சாதிகள் மட்டுமே உண்டு. ஒன்று ஆண்சாதி, மற்றொன்று பெண்சாதி. இவ்விருவரில் கொடுப்பார் பெரியோர், கொடுக்க மனமிலாதார் சிறியோர் எனும் இழிகுலத்தோர் என்று கூறிச் சாதியைப் பற்றிய தமது கருத்தினைப் பதிவு செய்துள்ளார்.

கபிலர் என்ற பெயர்கொண்ட ஒருவர், நால்வகைச் சாதியைத் தோற்றுவித்தவர்கள் பார்ப்பனர்களே என்று குறிப்பிடுகின்றார். இதனை,

*'பார்ப்பன மாக்கள் பகர்வது கேண்மீன்*
*நால்வகைச் சாதிஇந் நாட்டினில் நாட்டினீர்'*[78]

என்ற பாடலடிகள் மூலம் இயம்புகின்றார்.

**வள்ளலார்,**

*''சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்*
*கோத்திரமும் குலமும் கொண்டு என்செய்வீர்''*

என்னும் பாடலடிகளின் வழியே சாதியப்பாகுபாடு பற்றிப் பேசுவோரைச் சழக்கர்கள் என்று சாடுகின்றார்.

வள்ளலார் சாதிமத வேறுபாடுகளைப் பலவுரைகளால் மறுத்துச் சமரச ஞானத்தை அறிவுறுத்தினார். கோயில்களெல்லாம் சாதிக் கோயில்களாக மாறியது கண்டு எல்லோரும் வழிபடும் வண்ணம் சமரசக் கோயிலை (வடலூர் சபை) அமைத்துச் சென்றார்.

*''எச்சபை பொதுவென இயம்பினர் அறிஞர்கள்*
*அச்சபை இடங்கொளும் அருட்பெருஞ்சோதி''*

என்று இராமலிங்க சுவாமிகள் அருளிச் செய்துள்ளார்.

சமரசம் என்பது நாடு, மொழி, சமயநெறி, சாதி முதலியவற்றில் கட்டுப்படாமல் கடந்து நிற்பது. சாதி முதலியவற்றைக் கொண்டு சமரச உணர்வை இழப்பது அறியாமை என்கிறார். இதனை,

*'சாதியும் மதமும் சமயமும் தவிர்ந்தேன்*
*சாத்திரக் குப்பையும் தணந்தேன்*
*ஆதியும் நடுவும் அந்தமும் எல்லாம்*
*அருட்பெருஞ் சோதியென் றறிந்தேன்'*

என்று அருட்பெருஞ்சோதிக்கு முன் சாதி மதம் சமயம் சாத்திரம் என இவையெதற்கும் அங்கு இடமில்லை. இங்கு இறைவன் என்பது ஒன்றே. அவனே அனைவருக்கும் சமரசமானவன் என்கிறார். மேலும்,

*'குலத்திலே சமயக் குழியிலே நரகக்*
*குழியிலே குமைந்துவீண் பொழுது*
*நிலத்திலே போக்கி மயங்கியே மாந்து*
*நிற்கின்றார் நிற்கநான் உவந்து*
*வலத்திலே நினது வசத்திலே நின்றேன்'*[80]

என வள்ளலார் இவ்வுலகில் சாதி சமயமாகிய நரகக்குழியிலே வீழ்ந்து கிடப்பவரை வன்மையாகச் சாடுவதனைக் காணமுடிகின்றது. அவர் சாதி மதம் முதலிய வேற்றுமைகளால் விளைந்துள்ள தீமைகளைக் கண்டு அவைகளைக் களைந்து, சமரசத்தை நிறுவ முயன்று சுத்தசமரச சன்மார்க்கத்தை நிறுவினார்.

எனவே மக்கள் சாதி மதங்களை மறந்து அமைதியுடனும் ஒற்றுமையுடனும் வாழ வழிசெய்ய வேண்டும் என்ற எண்ணம் வள்ளலாரின் மனத்தில் ஆழப்பதிந்திருந்தமையை மேற்கண்ட அவரது பாடல்கள் புலப்படுத்துகின்றன.

**பேராசிரியர் சுந்தரம்பிள்ளை,**

*''வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்*
*உள்ளுவரோ மனுவாதி ஒரு குலத்துக்கு ஒருநீதி''*

என அறிவுறுத்துகின்றார். திருக்குறளைத் தெளிவாகப் பயின்று மனத்தில் இறுத்தி, பின்பற்றி நடப்பவர்கள் மேல்கீழ் என்ற பாகுபாடுகளையெல்லாம் பார்க்கமாட்டார்கள் என்பது சுந்தரம்பிள்ளையின் முடிவு.

**பாரதியார்**

தேசியக்கவி என்றழைக்கப்பட்ட சுப்பிரமணிய பாரதியாரும் சாதியை ஒழிப்பதில் பெரும் பங்காற்றியவர். தன் வாழ்நாளில் தாழ்த்தப்பட்ட பிள்ளைகளுக்கும் பூணூல் மாட்டி அழகு பார்த்தவர். சாதியெனும் முள்மரத்தை அடியோடு அழிக்க வேண்டுமானால் குழந்தைகளின் மனத்தில்தான் முதலில் பதியச் செய்யவேண்டும். சாதியின் தீமைகளை அவர்களுக்கு எடுத்துச் சொல்லும்போது அது பசுமரத்து ஆணிபோல நெஞ்சில் பதியும். பிற்காலத்தில் சாதியென்பது அறவே ஒழியும் என்று கருதியவர் அதன் விளைவாகவே பாப்பாப் பாட்டு என்பதனைப் பாடினார்.

*"சாதிகள் இல்லையடி பாப்பா - குலத்*
*தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்*
*நீதி உயர்ந்தமதி கல்வி - அன்பு*
*நிறைய உடையவர்கள் மேலோர்"*[81]

எனப் பாரதியார் அறிவுறுத்துகின்றார்.

மனித குலத்தில் மேலோர் கீழோர் என்று சொல்வதெல்லாம் பாவம். அவர்களும் மனிதர்களேயாவர். எனவே சாதிகள் என்பது இல்லையென்று கூறுகிறார்.

**பாரதிதாசன்**

புதுவைக்குயில், புரட்சிக் கவிஞர் என்றெல்லாம் பாராட்டப்படும் பாரதிதாசனும் சாதி சமயப் பிரிவுகளை அறவே வெறுத்தவர். மனு என்பார் வகுத்த வருணாசிரமத்தில், பிரம்மன் உடம்பிலிருந்து நான்கு வகையான மக்கள் பிறந்தனர் என்று கூறியதைக் கேட்டுப் பகுத்தறிவாளரான கவிஞர் கொதித்து எழுகிறார்.

*"முகத்தில் பிறப்பதும் உண்டோ முட்டாளே*
*தோளில் பிறப்பதும் உண்டோ தொழும்பனே*
*இடையில் பிறப்பார் உண்டோ எருமையே*
*காலில் பிறப்பார் உண்டோ கழுதையே"*[82]

என்று கொதித்து எழுகிறார் பாவேந்தர். காரணம் பிரம்மன் முகத்திலிருந்து பிராமணரும், தோளில் இருந்து சத்திரியரும், இடுப்பிலிருந்து வைசியரும், காலில் இருந்து சூத்திரரும் பிறந்தார்கள் என மனு கூறியிருந்ததையும் அதனை வழிவழியாகக் கூறிவந்தோரையும் பார்த்துப் பாவேந்தர் மனம் பதை பதைக்கிறார். ஒருவனின் முகத்தில் இருந்தும், தோளில் இருந்தும், இடையிலிருந்தும், காலில் இருந்தும் மாந்தர் பிறந்தார்கள் என்று கூறுவது அறிவற்றவர்களின் கூற்றாகும் என்று பாரதிதாசன் குறிப்பிடுகின்றார். மேலும் அவர் 'நால்வகைப் பிறவி பொய்'[83] என்றும் அறுதியிட்டுக் கூறுகிறார். நால்வருணம் என்று ஏற்படுத்தப்பட்ட வரிசைக் கிரமமே பிரம்மனின் தலைப்பகுதியில் இருந்து கால் பகுதிக்கு மேலிருந்து கீழாக இறங்கு வரிசையில் அமைந்துள்ள சூழ்ச்சியையும் புரிந்து கொண்டவர் பாரதிதாசன். பிராமணன், சத்திரியன், வைசியன், சூத்திரன் என்று மனிதனை உயர்த்தியும் தாழ்த்தியும் பார்க்கின்ற பாகுபாடு பொய்யானதாகும் என்று அவர் கூறுவது பொருத்தமுடையதேயாகும்.

*''பார்ப்பான் உயர்வென்றும்*
*பாட்டாளி தாழ்வென்றும்*
*ஏற்பாடு செய்தநூல் இழிநூல்''*[84]

என்கின்றார் பாரதிதாசன். பார்ப்பனரை உயர்ந்தோராகவும், பாடுபட்டு வியர்வை சிந்தி உழைக்கின்ற பாட்டாளிகளைத் தாழ்ந்த குலத்தைச்

சார்ந்தவர்களாகவும் குறிப்பிடுகின்ற நூல்கள் அனைத்துமே இழிவான நூல்கள் எனப் பாவேந்தர் கூறுவது ஏற்புடையதேயாகும்.

மேலும் சாதியென்பது தமிழர் கொள்கையல்ல; அது பகைவர் கொள்கை; அந்நாளில் இல்லாத சாதியும் மதமும் பின்னாளில் பிறரால் இறக்குமதி செய்யப் பெற்றதாகவும் கவிஞர் பாரதிதாசன் கூறுகிறார்.

*''தாழ்ந்தவர் என்றொரு சாதியுரைப்பவன் தீயன் - அவன்*
*தன்னுடலைப் பிறர்சொத்தில் வளர்த்திடும் பேயன்''*[85]

எனச் சாதிகுலம் பற்றிப் பேசுபவனைத் தீயன் என்றும், பேயன் என்றும், பிறர் சொத்தில் தன் உடம்பினை வளர்ப்பவன் என்றும் பாரதிதாசன் சாடுகிறார். சாதி பற்றிப் பேசும் மனமாசுற்றோரைக் கண்டு மனம் வெதும்பிய பாவேந்தர்,

*''இருட்டறையில் உள்ளதடா உலகம் - சாதி*
*இருக்கின்ற தென்பானும் இருக்கின்றானே''*

என்றுரைத்து வேதனை கொள்கின்றார்.

பறவை இனத்தைச் சார்ந்த புறாக்கள்கூட எவ்விதப் பேதமுமின்றி ஒற்றுமையாக வாழும்போது ஆறறிவு படைத்த மனித இனத்தில் மேல்சாதி கீழ்ச்சாதி என்ற பாகுபாடு நிலவுவதைக் கண்டு மனம் வருந்திய பாரதிதாசன்,

*"இட்டதோர் தாமரைப் பூ*

*இதழ்விரித் திருத்தல் போல்*

*வட்டமாய்ப் புறாக்கள் கூடி*

*விருந்துண்ணும் அவற்றின் வாழ்வில்*

*வெட்டில்லை குத்துமில்லை*

*வேறு வேறாக எண்ணும்*

*கட்டில்லை கீழ்மேல் என்னும்*

*கண்மூடி வழக்க மில்லை"*[86]

எனப் பாடுகின்றார். மேலும்,

*"சாதியெனும் தாழ்ந்தபடி - அது*

*நமக்கெல்லாம் தள்ளுபடி*

*சேதிஅப்படி தெரிந்துபடி - இன்றேல்*

*தீமை வருமே மறுபடி"*[87]

எனும் இப்பாடலில் சாதியெனும் தாழ்ந்த நிலையை அறவே நீக்கவேண்டும், அப்பொழுதுதான் அனைவரும் தமிழர் என்ற ஒரே இனத்தவராக ஒன்றுபட்டு நிற்க முடியும். சாதியை ஒழிக்கத் தவறினால் மீண்டும் தீமை வரும் என்றும் எச்சரிக்கை விடுக்கின்றார். மேற்கண்டவாறு சாதியத்தைச் சாடிய பாரதிதாசன்,

*“ஒன்றுதான் இம்மானிடச் சாதி - இதில்*

*உயர்பிறப்பு இழிபிறப்பு என்பதும் உண்டோ”*[88]

என அறிவுறுத்துகின்றார்.

உலக மக்கள் அனைவரும் ஒரு சாதியினரே என்று சித்தர்கள் கருதுகின்றனர். இம்முடிபே புரட்சிக்கவிஞர் பாரதிதாசனின் முடிபாகவும் உள்ளது. அனைவரும் ஒன்றே என்ற சிந்தனையை மேற்கண்ட பாடல்கள் பலவும் தெள்ளத் தெளிவாக அறிவுறுத்துகின்றன.

**கவிமணி**

புத்த பெருமானின் வாழ்க்கை வரலாற்றைக் கவிமணி தேசிக வினாயகம் பிள்ளை ‘ஆசிய ஜோதி’ எனும் தலைப்பில் அழகுறப் பாடியுள்ளது அனைவரும் அறிந்த ஒன்றாகும். புத்தர், சுத்தோதனன் என்னும் அரசருக்கு மகனாகப் பிறந்து அரண்மனை வாழ்க்கையனைத்தையும் துறந்து போதி மரத்தடியில் அமர்ந்து தவமிருந்து ஞானம்பெற்றார். உலக மக்களின் துன்பத்தைப் போக்கவும் அறியாமை இருளை அகற்றவும் எண்ணி நடைப்பயணம் மேற்கொண்டார். நடைப் பயணத்தின்போது நடந்த களைப்பாலும் பசிமயக்கத்தாலும் மயங்கி வீழ்ந்தார். அவ்விடத்தில் ஆடுமேய்த்துக் கொண்டிருந்த இடைக்குலச் சிறுவன் ஒருவன் அவர்மீது வெயில் படாமலிருக்க மரக்கிளை ஒன்றை வெட்டி அவரருகில் நட்டான். பின்னர் ஓர் ஆட்டின் பாலைக் கறந்து

கொண்டு வந்து புத்தர் அருகே நின்றான். பார்ப்பதற்குச் செல்வந்தன் வீட்டுப் பிள்ளைபோல் இருக்கும் இவர் இப்பாலினை வாங்கிக் குடிப்பாரோ அல்லது மறுப்பாரோ என எண்ணியவாறு தயக்கத்தில் இருந்த இடைக்குலச் சிறுவனைப் பார்த்துப் புத்தர் உரைப்பதாகக் கவிமணியவர்கள் படைத்த கவிதைகள் காலத்தால் அழியாதவை.

புத்தர் வாழ்ந்த காலத்திலேயே தீண்டாமை தலைவிரித்தாடிய நிலையில் 'ஆயர்குலச் சிறுவனிடம் நாம் இருவருமே மனித சாதியைச் சார்ந்தவர்கள்தான்' என்று கூறிச் சிறுவன் கையிலிருந்த பாலை வாங்கி அருந்தி அன்றே சாதியை ஒழிக்க முயன்ற முதல்வராகப் புத்தர் விளங்கினார் எனக் கவிமணி தாம் இயற்றிய ஆசிய சோதியில் பதிவு செய்கிறார்.

தீண்டாமை குறித்த விழிப்புணர்வாகப் பின்வரும் புத்தர் பெருமான் பாடல்கள் அமைந்துள்ளமையைக் காணமுடிகின்றது.

*''ஓடும் உதிரத்தில் - வடிந்து*
*ஒழுகும் கண்ணீரில்*
*தேடிப் பார்த்தாலும் - சாதி*
*தெரிவதுண்டோ அப்பா!*

*எவர் உடம்பினிலும் - சிவப்பே*

*இரத்த நிறமப்பா!*

*எவர் விழிநீர்க்கும் - உவர்ப்பே*

*இயற்கைக் குணமப்பா!*

*பிறப்பினால் எவர்க்கும் - உலகில்*

*பெருமை வாராதப்பா*

*சிறப்பு வேண்டுமெனில் - நல்ல*

*செய்கை வேண்டுமப்பா!*

*நன்மை செய்பவரே - உலகம்*

*நாடும் மேற்குலத்தார்*

*தின்மை செய்பவரே - அண்டித்*

*தீண்ட ஒண்ணாதார்!!*

*நெற்றியில் நீறும் - மார்பில்*

*நீண்ட பூணூலும்*

*பெற்று இவ் உலகுதனில் - எவரும்*

*பிறந்த துண்டோ? அப்பா!''*[89]

நல்லனவற்றைச் செய்பவர்களே மேலோர் என்றும் அல்லனவற்றைச் செய்பவர்கள் கீழோர் என்றும் கவிமணியவர்கள் புலப்படுத்துவது சிந்தனைக்குரியதாகும்.

### 2.8. அண்ணல் காந்தியடிகள்

அண்ணல் காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவில் வசித்தபோது தொடர்வண்டியில் பயணிப்பது வழக்கம். அவ்வாறு செல்லும்போது ஒருநாள் வெள்ளைக்காரர்களால் தொடர்வண்டியிலிருந்து உதைத்துக் கீழே தள்ளப்பட்டார். அன்றுமுதலே நிறபேதத்தை, மேல் கீழ் வருண பேதத்தை ஒழிக்கப் பாடுபடவேண்டும் என்று தன் மனதில் உறுதியெடுத்துக் கொண்டார். அதன் பின்பே இந்தியாவிற்குத் திரும்பி இந்தியர்களின் தலைவராகப் பொறுப்பேற்று நாட்டின் விடுதலைக்காக வெள்ளைக்காரர்களை எதிர்த்துப் போராடினார்.

நாட்டில் தீண்டப்படாத மக்களாக இருந்த தாழ்த்தப்பட்ட மக்களைச் சமமாக நடத்த வேண்டும் என்று விரும்பினார். மக்கள் அவர்களையும் உயர்வாக நினைக்க வேண்டும் மதிக்க வேண்டுமென்று கருதியே தாழ்த்தப்பட்ட மக்களை அரிசனங்கள் (ஆண்டவனின் குழந்தைகள்) என்று அழைத்து மகிழ்ந்தார்.

### 2.8.1. அண்ணல் அம்பேத்கார்

அம்பேத்கார் பள்ளிப்பருவத்திலேயே பல இன்னல்களுக்கு ஆளானவர். உயர்சாதி மாணவர் மரப்பலகையில் அமர்ந்து கல்விகற்க, தாழ்ந்த சாதி மாணவரான இவர் வகுப்பறையின் ஒரு மூலையில் கோணிப்பை மீது அமர்ந்து கல்விகற்றார்.

தான்பிறந்த தாழ்த்தப்பட்ட இனத்திற்கு இழைக்கப்பட்ட கொடுமைகளைக் கண்டும், பலமுறை இன்னல்களுக்கு ஆளாகியும் விடாமுயற்சியுடன் பொருளாதாரத்தில் பிஎச்.டி. பட்டம் பெற்றார். அதன்பின்பு பாரிஸ்டர் எனும் சட்டப்படிப்பையும் படித்துத் தேர்ந்தார்.

தாழ்த்தப்பட்ட மக்கள் நலனுக்காக ஒரு கழகத்தைத் தொடங்கினார். மும்பை நகரில் மாணவர் விடுதி, படிப்பகம், விளையாட்டுக் கழகம் முதலியனவற்றை நிறுவினார். இந்நிலையில் மும்பை மாநில ஆளுநர், இவரைச் சட்டமன்ற மேலவை உறுப்பினராக நியமித்தார். பள்ளிகள், மருத்துவமனைகள், அலுவலகங்கள் நீர்நிலைகள் முதலான அனைத்தும் மக்கள் அனைவருக்கும் பொது, அங்குச் சாதி வேறுபாடுகளுக்கு இடமில்லை என்னும் ஆணையை மும்பை அரசு 1923 ஆம் ஆண்டு பிறப்பிக்க வழிவகுத்தார். 1924 இல் பரோடா மன்னருடன் இணைந்து தீண்டாமையை எதிர்த்துப் போராடியும், கோயிலுக்குள் செல்லும் போராட்டமும் நடத்தி வெற்றிகண்டார்.”[90]

நாடு விடுதலை பெற்றபின் 1947 ஆம் ஆண்டு பிரதமர் பண்டித நேரு அவர்களின் அமைச்சரவையில் சுதந்திர இந்தியாவின் முதல் சட்ட அமைச்சராக அண்ணல் அம்பேத்கார் பொறுப்பேற்றார். இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தை வரைவதற்கான குழுவின் தலைவராகவும் பொறுப்பேற்று நிறைவேற்றினார்; ஆங்கிலம், குஜராத்தி, மராத்தி,

சமஸ்கிருதம், ஜெர்மனி, பிரெஞ்சு முதலிய பலமொழிகளையும் கற்றறிந்தவராகத் திகழ்ந்தார். தாய் நாட்டு நலனுக்காகவும், மக்களிடையே சாதிவேற்றுமைகள் ஒழிந்து சமூகநீதி ஏற்படவும் அரும்பாடுபட்டார்.

**2.82. தந்தை பெரியார்**

பெரியார் ஈ.வே.ராவின் வாழ்க்கை ஒரு பகுத்தறிவுப் பயணம். கீழ்ச்சாதியினர் கோயிலுக்குள் நுழையத் தடை, குளத்தில் நீரெடுக்கத் தடை, பிராமண வீதிகளில் நடக்கத் தடை, தீண்டாமைக் கொடுமை எனச் சாதிப்பிரிவினையால் வந்த பல்வேறு கொடுமைகளுக்குச் சாவுமணி அடித்தவர் பெரியார் என்பது நாடறிந்த உண்மையாகும்.

''ஒரே நாட்டு மக்கள், பிறவியில் பல சாதிகளாகப் பிரிக்கப்பட்டிருப்பது இந்தியாவில்தான் இருக்கின்றதே தவிர வேறெங்கும் இல்லை. பொதுவாகச் சாதி என்பது, இந்துக்கள் என்பவர்களுக்குள், ஆரியக் கொள்கைகளுக்கு அடிமைப்படுபவர்களுக்கு மாத்திரம்தான் 'கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டது' என்கிற கொள்கையின்மீது நாலுசாதிகளாக அதுவும் பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. இவை முறையே ஒன்றுக்கொன்று தாழ்ந்ததாகவும் - கடைசிச் சாதி மிக்க இழிவானதாகவும் கருதப்படுவதாகக் குறிக்கப்பட்டிருக்கின்ற விவரம் யாவரும் அறிந்ததேயாகும்.இப்படி இருந்தாலும் அநேக சாதிகள் இருப்பதற்கு என்ன காரணம்? அதாவது

ஆதியில் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட நான்கு வருணத்தாரும் தங்களில் சாதிமுறை தவறிக் கலப்பு, விபச்சாரம் செய்து கொண்டதால் ஏற்பட்ட பிரிவுகளென்றும் கூறுவதற்கான ஆதாரங்கள் இருக்கின்றன''[91] என்று தந்தை பெரியார் சாதி ஏன் ஒழியவேண்டும் என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

''மனிதனுக்குக் கடவுள் உணர்ச்சி தோன்றிய காலந்தொட்டே இந்நாட்டில் மேல்சாதி - கீழ்சாதி உணர்ச்சியும் தோன்றிவிட்டது. கடவுள் பேராலேயே மேல்-கீழ் சாதி உணர்வுகள் காட்டப்பட்டிருக்கின்றன. இந்துமதத்திலே வைணவத்திலாவது, சைவத்திலாவது சாதிப்பிரிவு, உயர்வு தாழ்வு காணப்படாத கடவுள்களோ, அவதாரங்களோ திருவிளையாடல்களோ, கடவுளைக் காட்டிய பெரியோர்களோ, சாதியற்ற தத்துவ புராண இதிகாசங்களோ ஏதாவது ஒன்றைக் காட்ட முடியுமா? 64 நாயன்மார்களும் 64 சாதிக்காரர்களாய்ப் பிறந்திருக்கிறார்கள். 12 ஆழ்வார்கள் 12 சாதிக்காரர்களாகப் பிறந்திருக்கிறார்கள்''[92] என்று தந்தைபெரியார் பல்வேறு கேள்விகளைத் தொடுக்கின்றார். கடவுள் சார்ந்த புராண நூல்கள் அனைத்திலும் பல்வேறு சாதிகளை உட்புகுத்திப் படைக்கப்பட்டிருப்பதனைப் பக்தி இலக்கியங்கள் நிரூபிக்கின்றன என்பது முற்றிலும் உண்மையாகும்.

''சிலர் தொழில் பாகுபாட்டைக் கொண்டு சாதி வகுக்கப் பட்டதேயொழிய, பிறவியைக் கொண்டு பிரிக்கப்படவில்லை. ஆதலால்

தொழில்பிரிவு இருக்கத்தான் வேண்டும் என்று கீதையில் பகவான் சொல்கிறார் என்று உங்களை ஏய்க்கக்கூடும். தொழிலுக்காக வந்தாலும் ஏன் பாகுபாடு இருக்கவேண்டும்? ஒரு மனிதன் காலையில் தச்சனாகவும், நண்பகலில் வியாபாரியாகவும், இரவில் உபாத்தியாராகவும், ஏன் இருக்கக்கூடாது? அவனே மறுநாள் காலையில் உழுகின்றவனாகவும் பகலில் ஆடைநெய்பவனாகவும், மாலையில் விற்கின்றவனாகவும், இரவில் காவல்காரனாகவும் ஏன் இருக்கக்கூடாது''[93] எனப் பெரியார் வினவுகிறார்.

மேலும் ''நந்தனுக்கு மோட்சம் கொடுத்ததாகவும், பாணனை ஆழ்வாராக்கியதாகவும் கூறும் புராணங்கள் அவர்களுக்கு மோட்சம் கொடுத்தது உண்மையானால், அந்த நந்தனுடைய பேரனை ஏன் உள்ளே விடக்கூடாது என்கிறார்கள் என்று காட்டமாகக் கேள்வி கேட்பதனைப் பெரியாரிடம் காணமுடிகின்றது. சாதி வித்தியாசத்தையே அழித்தாக வேண்டும்''[94] என்பதுதான் பெரியாரின் சிந்தனையாக இருக்கிறது.

''சாதியால் மக்கள் கொடுமையும், துன்பமும் அடைகின்றார்கள் சமுதாயத்தில் நலம் ஏற்படவேண்டுமென்றால் சாதி ஒழிக்கப்பட வேண்டும். டாக்டர் ராதாகிருஷ்ணன் கூடப் பேசியிருக்கிறார்.

ராஜாக்களை ஒழித்துவிட்டோம். ஜமீன்தார்களை ஒழித்துவிட்டோம். இருப்பினும் சாதி ஒழிந்தால்தான் பயன்உண்டு. ஆதலால் சாதியை

ஒழிக்க இரும்பு உள்ளம்படைத்த தைரியமான தலைவர் வேண்டும். சாதிஒழிந்தால் இராமனுக்கும், கிருஷ்ணனுக்கும் வேலையில்லை. புராணங்களும் இதிகாசங்களும் ஒழிய வேண்டும். அப்போதுதான் சாதியில்லாத சமுதாயம் உருவாகமுடியும்''[95]

''சாதிகளெல்லாம் உயர்ந்தவன், தாழ்ந்தவன், பணக்காரன், ஏழை முதலிய கொடுமைத் தன்மைகளைத்தான் உண்டாக்கப் பயன்படுகின்றனவே ஒழிய மக்கள் சமத்துவத்திற்கும், சுதந்திரத்திற்கும் சிறிதும் பயன்படவில்லை''[96] என்பது பெரியாரின் சீரிய சிந்தனையாக இருந்ததனை எண்ணிப் பார்க்க முடிகின்றது.

பெரியார் மதத்தை ஓர் அடிமைக் கருவி என்று கூறுவதனை அவரது எழுத்துக்களில் காணமுடிகின்றது. ''நான்காவது, அய்ந்தாவது சாதியாக்கிப் பார்ப்பனரல்லா மக்களை மடமையில் அழுத்தி வைக்கவே வேதம், புராணம், மதம் முதலியன வழிசெய்கின்றன. இதைக் கொஞ்சம் எடுத்துச் சொல்ல, திருத்த முயற்சித்தாலும் 'நாஸ்திகன்', 'மதத் துவேஷி', 'வகுப்பு துவேஷி' என்று சொல்லித் தலையில் கல்லைத் தூக்கி வைத்துவிட்டால் என்ன அர்த்தம்''[97] என்று அவர் சினமுறுகின்றார்.

சித்தர்களின் கொள்கைகளைப் பெரியாரிடத்தில் நிரம்பவே காணமுடிகின்றது. சமூகநீதி ஏற்படவேண்டும் என்பதற்காக 1925இல்

சுயமரியாதை இயக்கத்தைத் தந்தை பெரியார் துவங்கினார். அது உலகின் தலைசிறந்த மனிதநேய இயக்கமாகும். பகுத்தறிவு, தன்மானம், தன்னம்பிக்கை முதலியவற்றை மனிதகுலம் பெற்று மகிழ்வுடனும் மானத்துடனும் வாழவேண்டும் என்ற பரந்த நோக்கத்தைக் கொண்டே சுயமரியாதை இயக்கம் துவங்கப்பட்டது.

1929இல் சுயமரியாதை இயக்க மாநாட்டில் பெரியார் பெயர்களுக்குப் பின்னால் சாதிப் பட்டத்தைப் போடுவதை விடவேண்டும் என்ற தீர்மானத்தை நிறைவேற்றினார். சாதி ஒழிப்பிற்காகத் தமது 95-வயது வரையிலும் ஓயாமல் பாடுபட்டார் தந்தை பெரியார் என்பதனை நாடேயறியும்.

### 2.8.3. அண்ணாவும் கலைஞரும்

இருவரும் தந்தை பெரியாரின் மாணவர்களாகவே விளங்கியவர்கள். பெரியாரின் கொள்கைகளைப் பின்பற்றி அறிஞர் அண்ணாவும் சாதியை ஒழிக்க நாடகத்தையும், திரைப்படத்தையும் கருவியாகப் பயன்படுத்தினார். பின்னர் தமது எழுத்துக்களாலும் மேடைப் பேச்சுக்களாலும் தமிழகத்தில் அனைவரையும் கவர்ந்து ஆட்சிமாற்றத்தை ஏற்படுத்திய சமூகச் சிந்தனையாளராகத் திகழ்ந்தார்.

அறிஞர் அண்ணாவின் மறைவுக்குப் பின்னர் கலைஞர் தமது ஆட்சிக் காலங்களில் சாதியை ஒழிப்பதற்குப் பல்வேறு சமூகப்

புரட்சிகளைச் செய்தார். பெரியாரின் கொள்கைகளை மனதில் கொண்டு அவற்றைச் செயல்படுத்திய பெருமை கலைஞரைச் சாரும்.

சாதியொழிப்பில் கலைஞரின் பங்கு மிகப்பெரியதாகும். இவ்வுண்மையினைப் பின்வரும் அவரது கூற்றுகளால் அறியலாம். இன்றைக்குச் ''சமத்துவபுரங்களை'' உருவாக்கியிருக்கிறோம் என்றால், அது ஏதோ ஏழையெளியவர்களுக்கு வீட்டுவசதி செய்து தருகிறோம் என்றல்ல, அந்தச் சமத்துவபுரங்களிலேதான் கலப்புத் திருமணமே இன்றைக்கு உருவாகின்றது. ஒரு சமத்துவபுரத்திலே 100 வீடுகள் கட்டுகிறோம் என்றால் அதிலே 40 வீடுகள் அடித்தளத்து மக்களுக்கு, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு என்று தரப்பட்டு, 50 வீடுகளிலே பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு என்று ஒதுக்கப்பட்டது போக உயர்சாதிக் காரர்களுக்கென்று 10 வீடுகள் அதிலே ஒதுக்கப்படுகின்றன.

100 வீடுகளில் உயர்சாதிக்காரர்கள், மிகவும் பிற்படுத்தப்பட்டோர், தாழ்த்தப்பட்டோர், ஆதிதிராவிடர் என்று ஒதுக்கப்பட்டு, அந்த வீடுகளிலே அவர்கள் குடியிருக்கின்ற காரணத்தால், அங்கே உருவாகின்ற காதல் கலப்புத்திருமணங்களாக மாறி, அந்தத் திருமணங்களின் மூலமாக இந்த நாட்டிற்குக் கிடைக்கின்ற புதல்வர்கள் அல்லது புதல்விகள் அவர்களெல்லாம் எதிர்காலத்திலே இந்தத் தமிழகத்தைச் சமத்துவப் பாதையிலே நடத்திச் செல்லக்கூடிய வகையிலே வளரக்கூடும் -

வளரமுடியும் - வளர வேண்டும் என்ற எண்ணத்தோடுதான் சமத்துவபுரங்கள் பெரியாருடைய பெயரால், தமிழகத்திலே தி.மு.க. ஆட்சியிலே அமைக்கப்பட்டு வருகின்றன.

அந்தச் சமத்துவ புரங்களை இன்றைக்கு நூறு, இருநூறு, முந்நூறு என்று தமிழ்நாடு முழுவதும் நாம் உருவாக்கியிருக்கிறோம் என்றால் சமத்துவத்தை வெறும் வாயளவில் சொற்றொடர் என்ற அளவிலே பயன்படுத்தாமல், நடைமுறையிலே நாம் பயன்படுத்தியாக வேண்டும். திருமணவிழாவிலே இம்மண்டபத்தில் நாம் அனைவரும் தமிழர்களாகக் கூடுகிறோம். தமிழர்களாகக் கூடுகிற நாம் இந்த விழா முடிந்து மண்டபத்திலே இருந்து வெளியேறுகிற நேரத்தில் ஒரு பத்துப்பேர் இருபதுபேர் செட்டியார்களாக, முதலியார்களாக, அய்யர்களாக இப்படித்தான் குழுக்குழுவாக, சாதிவாரியாகத்தான் இங்கேயிருந்து வெளியே போகிறோம். இந்த அளவிற்குத்தான் தமிழ்நாட்டிலே இன்றைக்கும் சாதி மாறுபாடுகள் - சாதிவேறுபாடுகள் இருக்கின்றன.

இவைகளெல்லாம் ஒன்றாக வேண்டும். ஒரே சமுதாயமாக, தமிழ்ச்சமுதாயமாக, திராவிட இனமாக நாம் மாறவேண்டும் என்பதற்காகத்தான் பெரியார் குரல்கொடுத்தார். அண்ணா வழியமைத்தார். அந்த வழியிலே பயணம் செய்கின்ற நாம், அதை மேலும் மேலும் வெற்றிகரமாக, அந்தப் பதாகையைத் தூக்கிப் பிடிக்க வேண்டுமென்று உங்களையெல்லாம் நான் கேட்டுக்கொள்கின்றேன்.

சாதிமறுப்பு என்ற வகையில் கொஞ்சம் முரட்டுத்தனமாகச் சொல்லைப் போட்டுத்தான் சுயமரியாதை இயக்கம், சாதிமறுப்புத் திருமணம், தாலி மறுப்புத் திருமணம் என்றெல்லாம் சீர்திருத்தத் திருமணங்களைச் சுயமரியாதைக் காலத்திலே, தொடக்க காலத்திலே நாம் நடத்தினோம். இன்றைக்கு அதனுடைய விளைவாக ஏராளமான திருமணங்கள் தமிழ்நாட்டிலே இன்றைக்குக் கலப்புத் திருமணங்களாக, சுயமரியாதைத் திருமணங்களாக நடைபெற்றுக்கொண்டிருப்பதைப் பார்க்கிறோம்''[98] என்று சென்னையில் நடந்த ஒரு திருமணவிழாவில் கலைஞர் உரையாற்றியுள்ளார். 'நாம் அனைவரும் சாதிகளற்ற ஒரே தமிழ்ச் சமுதாயமாக மாறவேண்டும்' என்பதற்காகவே தமிழக முதல்வர் மாண்புமிகு மு. கருணாநிதி பாடுபட்டுக் கொண்டிருக்கின்றார்.

திருக்கோயில்களில் அந்தணர்கள் மட்டுமே அர்ச்சகர்களாக இருந்த நிலையை மாற்றி இன்று அனைத்துச் சாதியினரும் அர்ச்சகர் ஆகலாம் எனத் தமிழகச் சட்டசபையில் சட்டமியற்றிச் செயல்படுத்திக் காட்டியவர் கலைஞர்.

*''எல்லோரும் ஒருமித்த உணர்வுடன் சாதிமதத்தைக் கடந்து ஒற்றுமையோடு வாழவேண்டும் என்று பெரியார் கண்ட கனவு அவரது எண்ணம் ஆகியவற்றை நனவாக்கும் வகையில் கருணாநிதி நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார். அவற்றில்*

*‘சமத்துவபுரம்’ திட்டமும் ஒன்று. அத்திட்டத்தை 1997 ஆம் ஆண்டில் தொடங்கி வைத்தார். அப்பொழுது தமிழகம் முழுவதும் 147 சமத்துவபுரங்கள் உருவாக்கப்பட்டன. பிறகு மீண்டும் 2006 ஆம் ஆண்டில் தமிழக முதலமைச்சரான பின்பு, தந்தை பெரியார் 95 ஆண்டுகாலம் வாழ்ந்ததைக் குறிக்கும் வகையில் 95 சமத்துவபுரங்கள் மேலும் அமைக்கப்படும் என்று அறிவித்தார். அதனைத் தொடர்ந்து மேலும் 84 சமத்துவபுரங்கள் அமைக்கப்பட உள்ளன என்று கலைஞர் அறிவித்துள்ளதாக வேலூர் மாவட்டம், ஜோலார்பேட்டை, சந்திரபுரம் ஊராட்சியில் பெரியார் நினைவு சமத்துவபுரத்தைத் துணை முதலமைச்சர் மு.க. ஸ்டாலின் திறந்து வைத்தபோது குறிப்பிட்டார்.’’*[99]

எனவே இன்று வரையிலும் பலர் சாதியை ஒழித்துச் சமத்துவத்தை நிலைநாட்டப் பாடுபட்டுக்கொண்டிருப்பதனை அறியமுடிகிறது.

**முடிவுரை**

பண்டைத் தமிழ் இலக்கண இலக்கியங்களில் நால்வருணப் பாகுபாடுகளைக் காண முடிகின்றது. மனிதரில் அந்நால் வருணப் பாகுபாடும் தொழில்முறைப் பகுப்பாகவே வழங்கப் பட்டிருத்தலைச் சங்கம் மற்றும் சங்கம் மருவிய கால இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. நால்வகைச் சாதிகளாக இருந்த நிலை மாறிப்

படிப்படியாகச் சேக்கிழார் காலத்தில் நூற்றுக்கணக்கான சாதிகளுக்கு மேலாக உருமாறியுள்ளன. அவர் சிவனடியார்களில் மட்டுமே பல இன மக்களைப் பதிவு செய்கிறார் என்றால், அடியார்கள் அல்லாத பொதுமக்களில் இன்னும் எத்தனை பிரிவு இருந்தனவோ என்று எண்ண இடமளிக்கிறது. அச்சாதிகள் இன்று மேலும் கிளைத்து ஆயிரக்கணக்கான சாதிகளாக உருமாறிக்கொண்டு வருவதனைப் பார்க்க முடிகிறது.

இதுபோன்ற பல பிரிவினைகளால் மக்கள் துன்பத்துக்காளவர் என்றும், மக்களிடையே ஒற்றுமையும் அமைதியின்மையும் அடியோடு போய்விடும் என்றும் எண்ணிய சித்தர்கள் சாதி சமய சாத்திர சடங்குகளை வன்மையாகக் கண்டித்தனர். சாதியமைப்பு முறையை எதிர்த்தனர். சாதிசமயமற்ற ஒரு சமத்துவ சமுதாயத்தை உருவாக்கச் சித்தர்கள் முயன்றனர். சித்தர்கள் வழியில் சான்றோர்களும் மக்களிடையே சமத்துவத்தை உருவாக்க முயன்று வருகின்றனர். சமத்துவபுரங்கள் பலவற்றை நிறுவி வருகின்றனர்.

இயல் இரண்டு

## அடிக்குறிப்பு விளக்கம்

1. சா. தங்கப்பிரகாசம், பாரதிதாசன் பாடல்களில் பெரியார் சிந்தனை, ப.198.
2. சாமி. சிதம்பரனார், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், ப.88.
3. தொல்.பொருள். மரபியல். 44.
4. மேற்படி.64.
5. அ. முத்துசாமி, சங்க இலக்கியத்தில் ஆயர், ப.6.
6. குறள்.972.
7. தந்தை பெரியார், மனுநீதி ஒரு குலத்துக்கு ஒருநீதி,ப.8.
8. மேற்படி.ப.16.
9. பி.ஆர். அம்பேத்கார், இந்துமதத் தத்துவமும் மனுதர்மமும், ப.19.
10. மேற்படி.ப.18.
11. அ.முத்துசாமி, மு.கு.நூ.ப.37.
12. க. கைலாசபதி, சமூகவியலும் இலக்கியமும், ப.117.
13. பி.ஆர்.அம்பேத்கார், மு.கு.நூ. ப.29.
14. கு. மோகனராசு, காப்பியர் ஓர் அறவாணர், ப.130.
15. தொல்.நூற்பா. 1577.
16. மேற்படி.1090.
17. தொல்.பொருள்.புறத்திணையியல்.வாகை.
18. குறள்.560.

19. அ. முத்துசாமி, மு.கு.நூ.ப.35.

20. புறம்.183.

21. சாமிசிதம்பரனார். சிலப்பதிகாரத் தமிழகம், ப.158.

22. குறள்.972.

23. நாலடியார்.195.

24. ஆறுமுகநாவலர், பெரியபுராணம் வசனம், பக்.36-37.

25. சித்தர்பாடல்கள், பாம்பாட்டிச்சித்தர்,134.

26. இரா. கலாவதி, சித்தர் பாடல்களில் நடப்பியல், ப.120.

27. பாம்பாட்டிச் சித்தர் பாடல்,99.

28. மேற்படி.11.

29. மேற்படி.95.

30. மேற்படி.100.

31. மேற்படி.88.

32. மேற்படி.98.

33. சித்தர் பாடல்கள், சிவ வாக்கியார் பாடல், 40.

34. மேற்படி.462.

35. மேற்படி.48.

36. மேற்படி. 216.

37. மேற்படி.466.

38. மேற்படி.14.

39. சித்தர் பாடல்கள், சிவ வாக்கியார் பாடல், 15.

40. மேற்படி.313.

41. மேற்படி.243.

42. மேற்படி.223.

43. த.ந.கணபதி. தமிழ்ச்சித்தர் மரபு,ப.115.

44. சிவவாக்கியார் பாடல்,209.

45. ஸ்ரீஞானஜோதி சம்பங்கி, சிவவாக்கியர் பாடல், ப.247.

46. சித்தர் பாடல்கள், சிவவாக்கியார் பாடல்,501.

47. சிவவாக்கியார் பாடல்,38.

48. மேற்படி.522.

49. மேற்படி.15.

50. சித்தர் பாடல்கள், அகத்தியர் தனிஞானம்,8.

51. மானோஸ், சித்தர் பாடல்கள், திருமூலர்,15.

52. பத்திரகிரியார், கண்ணி,78.

53. மேற்படி,63.

54. கொங்கணரின் வாலைக்கும்மி,95.

55. குதம்பைச் சித்தர் பாடல்,137.

56. மேற்படி.138.

57. மேற்படி.139.

58. மேற்படி.140.

59. மேற்படி.141.

60. மேற்படி.142.

61. குதம்பைச் சித்தர் பாடல்,143.
62. மேற்படி.144.
63. மேற்படி.145.
64. மேற்படி.201.
65. வரதகோவிந்தராசன், சித்தர் பாடல்கள், ப.146.
66. மேற்படி.146.
67. குதம்பைச் சித்தர் பாடல்கள், 202, 199, 152.
68. சித்தர் பாடல்கள், இடைக்காட்டுச் சித்தர், பாடல்,55.
69. மேற்படி. கடுவெளிச்சித்தர்,15.
70. வரத கோவிந்தராசன், மே.கு.நூ.ப.231.
71. அகப்பேய்ச் சித்தர் பாடல்,90.
72. ஜி. வில்சன், அகப்பேய்ச் சித்தர் பாடல், விளக்கவுரை, ப.35.
73. சாமி. சிதம்பரனார், சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம், ப.142.
74. மேற்படி.142.
75. மேற்படி.142.
76. மேற்படி.143.
77. அவ்வையார், நல்வழி 2.
78. இரா. மதிவாணன், சாதிகளின் பொய்த்தோற்றம், ப.117.
79. மேற்படி.ப.9.
80. தமிழ்நாடு அரசு பாடநூல் (+2 தமிழ்), ப.133.

81. பாரதியார் கவிதைகள் பாப்பாப் பாட்டு,15.

82. ச. தங்கபிரகாசம், மு.கு.நூ.ப.199.

83. பாரதிதாசன், ஆத்திச்சூடி,ப.33.

84. பாரதிதாசன், தேனருவி, ப.103.

85. பாரதிதாசன், பன்மணித்திரள், ப.130.

86. பாரதிதாசன், அழகின் சிரிப்பு, ப.43.

87. தந்தை பெரியார், சாதிஏன் ஒழியவேண்டும், ப.09.

88. மேற்படி. ப.15.

89. கவிமணி, ஆசியசோதி பாடல்கள்,ப.65.

90. தமிழ்நாடு அரசு பாடநூல் (8-ஆம் வகுப்புத் தமிழ்) ப.32.

91. தந்தை பெரியார் மு.கு.நூ.ப.9.

92. மேற்படி. ப.15.

93. மேற்படி. ப.16.

94. மேற்படி. ப.6.

95. தந்தை பெரியார், புத்தநெறி, ப.13.

96. தந்தை பெரியார், சாதிஏன் ஒழியவேண்டும், ப.17.

97. தந்தை பெரியார், எழுத்துச் சீர்திருத்தம், ப.75.

98. 10.11.2009 தினத்தந்தி, நாளிதழ், ப.6.

99. 19.01.2010 தினத்தந்தி, நாளிதழ், ப.4.

# சித்தர் பாடல்களும் மூடநம்பிக்கைச் சாடலும்

## 3.0. முன்னுரை

நம்பிக்கை, மூடநம்பிக்கை ஆகியவற்றுக்கான சொல் விளக்கம், மூடநம்பிக்கையின் இலக்கணம், மூடநம்பிக்கை தோன்றியமைக்கான காரணம், மூடநம்பிக்கையைத் தோற்றுவித்தவர்கள், மூடநம்பிக்கைக்கு மக்கள் அடிமையாகக் காரணம் முதலியன ஈண்டு விளக்கப்படுகின்றன. மூடநம்பிக்கையொழிப்பின் பயன்கள், மூடநம்பிக்கையைச் சித்தர்கள் சாடக் காரணம், மூடநம்பிக்கையைச் சாடிய சித்தர்கள், உருவ வழிபாடு எதிர்ப்பு, பூசை மற்றும் சடங்குகளைச் சாடல் முதலியன ஆய்ந்துரைக்கப் படுகின்றன. சித்தர்தம் அறிவியல் பார்வை சுட்டப்படுகின்றது. பாம்பாட்டிச் சித்தரின் பகுத்தறிவுச் சிந்தனை எடுத்துரைக்கப்படுகின்றது.

## 3.1. நம்பிக்கை

இறைவனிடம் வேண்டுதல் வைத்துவிட்டுப் பலர் பல செயல்களில் இறங்குகிறார்கள். அவர்களில் சிலருக்கு வெற்றி கிட்டுகிறது. பலருக்குத் தோல்வியே மிஞ்சுகிறது. வெற்றிபெற்றோர்க்கு இறைமீது நம்பிக்கை வலுக்கிறது. தோல்வியுற்றோர்க்கு இறைநம்பிக்கை சற்றுக் குறைகிறது. பலமுறை தோல்வி கண்டோர்க்கு இறைநம்பிக்கை என்பது அறவே போய்விடுகின்றது. இருப்பினும் தம்மீதும், தம் செயல்கள் மீதும், இது தம்மால் முடியுமென்னும் தம்மீது தாம் வைத்திருக்கும் உள்ள உறுதிப்பாட்டுக்கும் தன்னம்பிக்கை என்று பெயர்.

தொடக்கத்தில் யாரோ ஒருவராலோ பலராலோ கூறப்பட்டு, பரம்பரையாக நம்பப்பட்டு ஏன், எப்படி, எதற்கென்று ஆராயாமல் அதனை உண்மையென நம்புவது பலரது நம்பிக்கையாக இருக்கின்றது. ஆலயங்கள், உருவச்சிலைகள், குறியீடுகள், சடங்குகள் ஆகியன சமய நம்பிக்கையின் வடிவங்களாக இருந்து வருகின்றன.

### 3.2. மூடநம்பிக்கை - சொல் விளக்கம்

'மூடநம்பிக்கை என்னும் பெயர்ச்சொல்லில் மூடம் என்னும் பெயர்ச்சொல்லும் நம்பிக்கை என்னும் பெயர்ச்சொல்லும் இணையும்போது மூடம் என்னும் பெயர்ச்சொல் மூட என்னும் பெயரெச்சமாக மாறி, மூடநம்பிக்கை என்றாகி அறிவில்லாத நம்பிக்கை, அறிவில்லாத விருப்பம், அறிவில்லாத ஏற்றுக்கொள்ளல் என்னும் பொருள்பட நிற்கிறது. ஒன்றினுடைய உண்மை, இன்மை; நன்மை, தீமை; சரி, தவறு; தேவை, தேவையின்மை; பயன், பயனின்மை; இயலும் தன்மை, இயலாத் தன்மை; அறிந்தமை, அறியாமை; தெளிந்தமை, தெளியாமை; பொருத்தம், பொருத்தமின்மை; வளர்ச்சி, தேக்கம்; ஆக்கம், அழிவு; உயர்வு, தாழ்வு; இன்பம், துன்பம் என்னும் முறையில் நுணுகிப் பொருளை ஆராய்ந்து அறியும் அறிவைச் செலுத்தாது அறிவில்லாமல், சிந்தனையின்றி, கண்மூடித்தனமாக ஒன்றைக் கண்ட அளவிலேயே, கேட்ட அளவிலேயே, படித்த அளவிலேயே, அப்படியே மனத்தாலோ, சொல்லாலோ, செயலாலோ ஏற்றுக் கொள்ளலும் ஏற்றுக்கொண்டதைக் கண்மூடித்தனமாகக்

காலங்காலமாக மாற்றமின்றிப் பின்பற்றுதலும் அங்ஙனம் பின்பற்றாதாரை வெறுக்கவும், பகைக்கவும், தண்டிக்கவும் செய்தலும் மூடநம்பிக்கையாகும்.'[1]

பகுத்தறிவுக்கும் நல்ல நம்பிக்கைக்கும் எதிரானது மூடநம்பிக்கையாகும். சிந்திக்கும் தன்மையின் முனை, முற்றாக மழுங்கிய நிலையே மூடநம்பிக்கையாகும். நல்ல நம்பிக்கை என்பது போதுமான ஆதாரத்தைக் கொண்டதாக இருக்கவேண்டும். இல்லையேல் அது வெறும் மூடநம்பிக்கைதான்.

பார்த்தல், பரிசோதித்தல் என்பதற்கு ஆட்பட்டு ஏற்றுக்கொள்ளக் கூடியவை சரியான நம்பிக்கையாகும். ஆனால் முன்னோர்கள் - பல்லோர்கள் காலங்காலமாகச் சொல்லிவருவது என்பதற்காக நம்புவது மூடநம்பிக்கையாகும் என நெ.து.சுந்தரவடிவேலு 'சிங்காரவேலரும் பகுத்தறிவும்' எனும் நூலில் குறிப்பிட்டிருப்பதனைக் காணமுடிகின்றது.

> ***''பகுத்தறிவு ஆதாரமும், அறிவியல் ஆதாரமும், பிற அனுபவ ஆதாரமும் இல்லாத, கடவுள் கூறியது, பிரம்மா சொன்னது. எனவே நானும் சொல்கிறேன் நீங்களும் நம்பவேண்டும்''[2]***

என்றுரைப்பது மூடநம்பிக்கையாகும்.

***''பகுத்தறிவு என்பது ஆதாரத்தைக்கொண்டு தெளிவடைவது; மூடநம்பிக்கை என்பது ஆராயாமல் ஏற்றுக்கொள்வது''***[3]

என்று பெரியார் மூடநம்பிக்கைக்கு விளக்கமளிக்கின்றார்.

**3.3. மூடநம்பிக்கை தோன்றிய விதம்**

தமிழகத்தில் தொல்காப்பியர் காலத்திலேயே ஆரியர்களின் தாக்கம் இருந்தமையை அறியமுடிகின்றது. அவர்களது நால்வகை வருணாசிரம முறையில் உயர்ந்தோர்களுக்கே கல்வி பயிலும் உரிமையிருந்தது என்பதனை ''ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன'' எனும் நூற்பாமூலம் தெளிவாக அறியமுடிகின்றது. எனவே அதிகப்படியான மக்களாக நாட்டில் வாழ்ந்த கீழ்வருணத்தார்க்குக் கல்வி பயிலும் உரிமை மறுக்கப்பட்டது. ஏவல் வேலைகளையும், அடிமை வேலைகளையும் செய்வதற்காக மட்டுமே கீழ்வருணத்தாரைப் பயன்படுத்தியதிலிருந்தே மேல்வருணத்தாரின் சூழ்ச்சி அம்பலமாகின்றது. 'பிராமணர்கள் மட்டுமே கல்வி கற்க உரியவர்கள் என்ற நிலையிருந்ததால் தங்கள் பொய்ப் புராணங்களையும் சாத்திரங்களையும் பரப்பினர். அவை பழங்காலத்தில் ரிஷிகளால் எழுதப்பட்டவை எனக் கூறப்பட்டன.'[4]

கல்வியறிவற்ற மக்கள் சிந்திக்கும் ஆற்றல் இல்லாத காரணத்தால் பிராமணர் கூறுவதையெல்லாம் கேட்டும், அவர்கள் சொற்படி நடந்தும் வந்தமையான் மக்களிடையே மூடப்பழக்கமானது வெகுவாகப் பரவிக் கொண்டே வந்தது.

*"கல்வியறிவில்லா மக்கள் எதையும் எளிதில் நம்பும் நிலைக்கு ஆளாகியிருந்தனர். அந்த மூடநம்பிக்கைகளை நிலை நிறுத்தியதில், நிலைநிறுத்துவதில் கடவுள் பணிக்காக உள்ள பாதிரிகள், முல்லாக்கள், சங்கராச்சாரிகள், ஜீயர்கள், பண்டார சன்னதிகள், குருக்கள், பூசாரிகள் முதலியவர்களே முதன்மைக் காரணமானவர்கள்.*

*கடவுளுக்கு உருவமில்லை, குணமில்லை; சர்வ சக்தி உள்ளவர் என்றெல்லாம் கூறிவிட்டு அதற்கு மாறான குணங்களைக் கடவுள்மேல் ஏற்றி, அதற்குக் கோயில்கட்டி உருவங்கள் உண்டாக்கி, பூசை, உற்சவம், பண்டிகை, முதலியவைகளைக் கொண்டாடச் செய்வதின்மூலம் மூடநம்பிக்கைகளால் கடவுளைப் பரப்புவது என்றால் அம்முயற்சியில் ஈடுபட்டவர்கள் அயோக்கியர்கள் அல்லவா? இவர்கள் தங்கள் சுயநலம், பெருமை, வாழ்க்கை, பிழைப்பு ஆகியவற்றிற்காக இக்காரியங்களைச் செய்யும் அயோக்கியர்களாக இருந்து வருகிறார்கள் என்பதல்லாமல் வேறு என்ன?"*[5]

என்றுகூறும் பெரியாரின் சிந்தனை ஈண்டு நோக்கத்தக்கது.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனும் மூடநம்பிக்கையைப் புகுத்தியவர்களைப் பற்றி,

*''உருவிலா ஒன்றுக்கு உருவமைத்தது*
*பெரியதோர் மடமை*
*மடமையை நாட்டில் மலிவுசெய்தால்*
*உடமையை லேசாய் உறிஞ்சலாம் என்பது*
*பூசாரி எண்ணம்''*[6]

என்று கூறுவார். மேலுமவர்,

*''மூடச் செய்கை*
*தமை வளர்த்தல் தம்நலத்தை வளர்த்தல்*
*உழைக்காத வஞ்சகர்''*[7]

என்பார். உழைத்து வாழவேண்டுமென்ற எண்ணமில்லாதவர்கள் தம் நலத்தை வளர்த்துக் கொள்வதற்காக மூடச் செயல்களைக் கட்டவிழ்த்துவிட்டனர் என்று பாரதிதாசன் கூற்றிலும் வெளிப்படுவதனைக் காணமுடிகின்றது.

> *''கடவுள், மதம், சாத்திரங்களைப் புகுத்தி நம்பும்படி செய்து பழைய மூடநம்பிக்கைகளில் ஆட்படுத்திப் பகுத்தறிவு பெறும்படியான சாதனத்தை நீண்டகாலமாகத் தடைப்படுத்தி விட்டார்கள் பார்ப்பனர்கள். எந்த விசயத்தை வேண்டுமானாலும் எடுத்துக்கொண்டு அதற்குத் தெய்வீகப் பூச்சோ, மதப்பூச்சோ சிறிது கொடுத்துவிட்டால் சுலபத்தில் யாரையும் நம்பும்படி செய்துவிடலாம்.''*[8]

*“மூடநம்பிக்கைகள் காலங்காலமாகத் தொடர்ந்து வருவதற்கு மற்றொரு காரணத்தையும் பெரியார் கூறுகிறார். இளமைக்காலத்திலோ, முதுமைக் காலத்திலோ எந்தக் காலத்துப் பழக்கமானாலும் சரி, அது இந்தக் காலத்துக்குப் பொருந்துகிறதா? வாழ்க்கைக்குத் தேவையானதுதானா? அறிவுக்கு ஏற்றதா? என்றுதான் நாம் பார்த்துப் பின்பற்ற வேண்டுமே தவிர, அந்தக்காலத்துப்பழக்கம் என்பதற்காகவும், கண்ணை மூடிக்கொண்டு எதையும் அர்த்தமற்றும் பொருத்தமல்லாமலும் பின்பற்றக் கூடாது”*[9]

என்னும் பெரியாரின் சிந்தனைகளைப் பட்டியலிடுகிறார் முனைவர் சா. தங்கப்பிரகாசம்.

### 3.4 மூடநம்பிக்கையை ஏற்படுத்தியவர்கள்

‘அதிகாரங்களைக் கைக்கொள்ளும் ஆட்சியாளர்களும், செல்வத்தை ஆளும் வணிகர்களும் செயல்படும் முறைக்கேற்பவே அவர்களைச் சார்ந்திருக்கும் சமுதாய வாழ்வு அமையும். இந்த இருவகையினரின் ஆதரவைப் பெறும் சமூகப் பிரிவினர் பொருளாதார வசதிகளும் சமூகமதிப்பும் பெறுவர். கி.பி.ஆறு, ஏழு, எட்டாம் நூற்றாண்டுகளில் தென்னிந்தியப் பகுதிகளை ஆண்ட சாளுக்கியர்களும், பல்லவர்களும், ராஸ்டிரகூடர்களும் பெருமளவில் ஆரியர்களைக் கொணர்ந்து குடியமர்த்தியதோடு, எங்கும் எதிலும் ஆரியக்

கொள்கைகளையும், பண்பாட்டையும் புகுத்துவதில் வேகமும் ஊக்கமும் காட்டினர். இன ஒற்றுமை, நிர்வாகத்திறன், சமுதாயக்கட்டமைப்பு, பயிர்த்தொழில்நுட்பம் ஆகியன ஆட்சியாளர்களையும், வணிகர்களையும் தம்முடைய ஆதிக்கத்தில் கொணரத் துணைபுரிந்தன என்பார்' க.நாராயணன்.

'ஆள்வோர், வணிகர் ஆகிய இருபிரிவினரின் ஆதரவுபெற்ற பிராமணர்கள் சமுதாயத்தின் பெரும்பான்மை மக்களைத் தாழ்த்தித் தம்மை உயர்த்திக் கொண்டனர். பிராமணர்கள் தமக்கென ஒரு நிலப்பகுதியைக் கைக்கொண்டு தனி இனமாகத் தொழில்செய்து வாழவில்லை என்றும், தொடக்கமுதலே பிற இனத்தவர்மேல் ஒட்டுண்ணியாக அமர்ந்து வாழ்ந்தனர் என்றும் மானுடவியல் அறிஞர் ஒருவர் குறிப்பிடுவதனைக் கூறுகிறார் க. நாராயணன்.'[10]

நாடு, இனம், மொழி, பண்பாடு ஆகிய வேறுபாடுகளைக் கடந்து மனித சமுதாயத்தை ஒன்றாய்க் கருதி அன்பு செய்யும் அருளாளர்களாகிய சித்தர்கள் (சிவவாக்கியார் போன்றோர்) வேதியர்களை வெறுத்துரைப்பதற்கு வேதியர்களின் தன்னலப் போக்கே முதன்மைக் காரணமாக இருந்ததனைச் சித்தர் பாடல்கள்மூலம் அறியமுடிகின்றது.

*“புதிய குடியிருப்புகளை ஏற்படுத்திக்கொண்ட பிராமணர்கள் காலப்போக்கில் சாத்திரங்களைக்காட்டியும், சடங்குகளைச் செய்தும் பிறமக்களின் உழைப்பில் தம் வருவாயைப் பெருக்கி வாழ முற்பட்டனர். தம்வாழ்வை வளப்படுத்தவும், நிலைநிறுத்தவும் ஏற்றவகையில் புராணக் கதைகளையும், புதுப்புதுச் சடங்குமுறைகளையும், தாமே புனைந்து கொண்டு அவையெல்லாம் கடவுளால் அருளப்பட்டவை, முனிவர்கள் மொழிந்தவை, ஞானியர் எழுதியவை என்று பொய்யுரைத்தனர். கல்வியறிவு இல்லாப் பெரும்பான்மை மக்கள் அப்பொய்யுரைகளை நம்பி, வேதியர்பின் சென்றனர். எனவே சித்தர்கள் வேதியர்களை வெறுத்தனர் என்பதைக் காட்டிலும் தன்னலத்தால் அவர்கள் புனைந்த பொய்யுரைகளை எதிர்த்தனர் என்பதே பொருந்துமாறு உள்ளது”*[11]

என்பார் க. நாராயணன்.

மூடநம்பிக்கைகளின் முழுவடிவான சாத்திரச்சடங்குகள் மக்களிடையே அறியாமையை மேன்மேலும் வளர்த்தன. இத்தகைய சமூகக் கொடுமைகள் மலர்ந்திருந்த காலச் சமூகச் சூழல்களில் சிவவாக்கியார் வாழ்ந்தார். வேதியர்கள் செய்கின்ற மூடப்பழக்கங்களைச் சுட்டிக்காட்டி அதனால் விளையும் பயன் யாது எனப் பல பகுத்தறிவுக் கேள்விக்கணைகள் எழுவதனை அவரது பாடல்களில் காணமுடிகின்றது.

### 3.5 மூடநம்பிக்கை ஏற்படக் காரணம்

மூடநம்பிக்கைக்குக் காரணம் மனிதனின் பேராசையேயாகும். பேராசை என்றால் அளவுக்கதிகமாக விரும்புவது. வேலை செய்யாமல் கூலி பெறுவது. பேராசை இல்லாவிட்டால் எந்த மனிதனும் தனது புத்திக்கும் அனுபவத்திற்கும் ஒவ்வாததை ஒரு காலமும் நம்பமாட்டான், பின்பற்ற மாட்டான் என்கிறார் பெரியார். அவரது இக்கருத்து முற்றிலும் உண்மையாகும்.

சிவவாக்கியரும் கல்வியறிவு இல்லாத மக்களிடம் மண்டிக்கிடந்த மூடப்பழக்கங்களைச் சாடுகின்றார்.

*'பேய்கள்பேய் களென்றுநீர் பிதற்றுகின்ற பேயரே*
*பேயும்பூசை கொள்ளுமோ? பிடாரிபூசை கொள்ளுமோ?'*

(சிவவாக்-253)

என வினவுகிறார். சிற்றூர்களில் மக்கள் பேய்கள், பிசாசுகள், பிடாரிகள் என்று கூறிக்கொண்டு அவற்றுக்குப் பூசைகளெல்லாம் செய்கின்றார்கள். பேய்களும் பிசாசுகளும் பிடாரிகளும் பூசைசெய்யுமாறு கேட்பதில்லை. மக்கள் தமது அறியாமையாலேயே அவ்வாறு செய்கின்றனர் எனக்கூறிச் சிவவாக்கியார் மூடப்பழக்கத்தை எதிர்த்த முன்னோடியாகத் திகழ்கின்றார்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக எத்தனை மானுடர் மூடமதியுடன் மாண்டனரோ, உலகில் மூடப்பழக்கத்திற்கென்ன பஞ்சமா, கருங்கல், செங்கல்லுக்குப் பொட்டுவைத்துச் சாமிகும்பிடல், பார்ப்பானைச் சாமி என்றழைத்தல் இன்றும் சிற்றூர்களில் இப்படித்தான் அழைத்துக்கொண்டு இருக்கின்றார்கள். தேவர்கள், அசுரர்கள்; சொர்க்கம், நரகம்; சோதிடம் சகுனம்; இராகுகாலம், எமகண்டம்; குளிகை, நல்லநேரம், கெட்டநேரம்; பட்சி சாஸ்திரம், நட்சத்திரப் பலன்கள், கிரகப்பலன்கள், ஏழரைச்சனி, அட்டமச்சனி, பாதச்சனி முதலிய யாவுமே மூடநம்பிக்கையின்பாற் பட்டனவேயாகும்.

திருநள்ளாரில் போய் நீராடினால் சனி விலகும் என்கின்றனர். இதற்குக் காரணம் என்னவென்று கேட்டால், நளனே இங்கு வந்து குளத்தில் நீராடிச் சனிபகவானை வணங்கிய பிறகே அவனைப் பிடித்த சனி நீங்கியதாகக் குறிப்பிடுகின்றனர். புராண நூல்களும் மக்களை அறியாமை இருளில் தள்ளி சிந்திக்கவிடாமல் செய்தன. இப்படிப்பட்ட நூல்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. கும்பத்தில் பிறந்தான்; மானுக்குப் பிறந்தாள்; மீனுக்குப் பிறந்தான்; கதிரவனுக்குப் பிறந்தான்; காற்றுக்குப் பிறந்தான் என அறிவுக்குச் சற்றும் பொருந்தாத மூடநம்பிக்கையை உணர்த்தக்கூடிய ஏராளமான பொய் மூட்டைகளைத் தந்தை பெரியார் பட்டியலிட்டுக் காட்டி மக்களது அறியாமை இருளை நீக்க வந்த பகுத்தறிவுப் பகலவனாக அவர் விளங்கினார் எனலாம்.

இந்த எண் வருமாறு பெயரை மாற்றிவைத்துக் கொண்டால் குபேரனாகி விடலாம், வீட்டின் இந்த நுழைவு வாயிலை மாற்றியமைத்தால், அந்த ஜன்னலை ஈசானை மூளையில் மாற்றிவைத்தால், பீரோவை அந்த மூளையில் வைத்தால் வீட்டில் செல்வம் கொழிக்கும். வியாபார மந்தம்நீங்கிக் கோடிக்கணக்கில் பணம் கொட்டும் என்பர். உனக்குக் கிரகம் சரியில்லை, நாள் சரியில்லை, கோள் சரியில்லை, இந்தச் சடங்கினைச் செய், நவக்கிரகக் கோயில்களைச் சுற்றிவந்து இறைவனை வணங்கினால் உனக்கு இதுநடக்கும் அதுநடக்கும் எனச்சிலர் கூறி மூடநம்பிக்கைகளை வளர்க்கப் பாடுபட்டு வருகின்றனர். மக்களுள் பலர் தங்கள் மூளையை ஏமாற்றுப்பேர்வழிகளிடம் அடகுவைத்துவிட்டு ஓடுவதும், மூழ்குவதும், முணகுவதும் வீணான வேலையாகும் என்று பகுத்தறிவுச் சிந்தனையாளர்கள் கூறுவர்.

கல்லாதோர் தமது அறியாமையினாலும், மேலும்பலர் தமது சோம்பேறித் தனத்தாலும் உழைக்காமலே விரைவில் உயர்ந்துவிட வேண்டும் என்ற எண்ணத்தினாலும் மூடநம்பிக்கைக்கு ஆளாகின்றனர். மேலும் பல குடும்பத்தினர் வாழ்க்கையில் சரியாகத் திட்டமிடாததால் செய்யும் தொழிலில் ஏற்படும் இழப்பு, வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுப்பதில் அவசரம், பேராசை, குடும்பத்தில் சிலர் மரணம், குழந்தையின்மை, விபத்துகள் என்பன போன்ற பல்வேறு காரணங்களால் மூடநம்பிக்கைக்கு ஆளாகின்றனர்.

அத்தகைய துன்பங்கள் நம்மைவிட்டு நீங்காதா, நம்வீட்டில் ஒரு நல்லநிகழ்ச்சி நடைபெறாதா, தொழிலில் இலாபத்தைக் காணவே முடியாதா, மகளுக்குக் திருமணம் கைகூடாதா, என் மருமகளுக்கு ஒரு குழந்தைப் பாக்கியம் கிடைக்காதா என ஏங்குபவர்கள்தான் மூடநம்பிக்கையில் மூழ்கிவிடுகின்றனர். இந்தப் பொய்ப்புளுகு மூட்டைகளை அவிழ்த்துவிடும் சோதிடர்கள், மதபோதகர்கள் உள்ளிட்டோர் தம் வயிறு நிறையவும் தம் குடும்பம் செழிக்க வேண்டும் என்பதற்காகவும் மூடநம்பிக்கைகளை வளர்த்து வருகின்றனர்.

இன்று பல்வேறு நாளிதழ்களில், பல்வேறு தொலைக்காட்சி முதலிய ஊடகங்களில் மூடநம்பிக்கைக் காட்சிகளையும் அரங்கேற்றிக் கொண்டு இருக்கின்றார்கள். இராசிக்கல் மோதிரம் அணிந்தால் பலன்கிட்டும். பெயரை மாற்றி அமைத்துக் கொண்டால் வாழ்வில் வளம் பெருகும். அட்சயத் திருதியையில் குண்டுமணியளவு தங்கம் வாங்கினாலும் அந்த ஆண்டில் குன்றளவு தங்கம் சேரும் என்றெல்லாம் அறிவிப்பு வருவதைக் கண்ட மக்கள் மூடநம்பிக்கைக்கு ஆளாகி, அடிமையாகி வருவதனைக் காணமுடிகின்றது.

### 3.6. மூடநம்பிக்கை ஒழிப்பின் பயன்கள்

'மூடப் பழம் புரட்டை முட்டியெறிந்தபெரியார்' என்பார் சுத்தானந்த பாரதி. மூடநம்பிக்கைகளுக்கு எதிராகத் தமிழகத்தில் பலர் குரல்கொடுத்து

வந்த போதிலும் மூட நம்பிக்கைகள், மூடப்பழக்க வழக்கங்கள் முற்றிலும் ஒழியவில்லை. 'கடவுள் நம்பிக்கை, இருக்கும்வரை மூடநம்பிக்கைகளை முழுவதுமாக ஒழிக்க முடியாது' என்னும் சமுதாய விஞ்ஞானி பெரியாரின் கூற்று சிந்தனைக்குரியது. மூடநம்பிக்கைகளை உடைத்தெறிவதிலேயே அறிவு வளர்ச்சி அடைகிறது. மூடநம்பிக்கை ஒழியும்போதுதான் சமதர்மம் தழைக்கும் என்னும் பெரியாரின் சிந்தனைகள் ஈண்டு எண்ணத் தக்கதாகும்.

## 3.7. மூடநம்பிக்கையைச் சாடும் சித்தர்கள்

சித்தர்கள் பலநூறு ஆண்டுகளுக்கு முன்பே மூட நம்பிக்கைகளை வெகுவாகச் சாடியிருக்கின்றனர் என்பதற்கு அவர்களது பாடல்களே தக்க சான்றுகளாகும்.

மக்கள் தம்மை மறந்து உணர்வுப்பெருக்கால் உள்ளம் உருகி ஈடுபட்ட வழிபாட்டில் பிராமணர்களால் தம் அடிப்படைப் பண்புகளை இழந்து ஆரவாரமிக்க வெற்றுச் சடங்குகளில் மூழ்க முற்பட்டனர். வழிபாடுகளை முறைப்படிச் செய்யத் தங்களுக்கு மட்டுமே உரிமையுண்டு என்றும், முறைதவறிச் செய்யும் வழிபாடு தீங்கு பயக்கும் என்றும் வேதியர்கள் கட்டுரைத்து மக்களை அச்சுறுத்தி ஆலயங்களிலும் சமூக அமைப்பிலும் ஆதிக்கம் பெறலாயினர்.

*''சில பிராமணர்கள் பொய்யுரைத்தும் மக்களை மயக்கியும் சமுதாயச் செல்வாக்குப் பெற்றமையை விவேகானந்தர் மனம் வருந்திக் குறிப்பிடுகிறார். மேல் சாதியர் என்று கூறிக்கொள்ளும் பிராமணர்கள் அரசர்களது உதவிபெறும் சந்தர்ப்பங்கள் ஏற்படும் போதெல்லாம் தாழ்ந்த வகுப்பினர் உதவிபெறுவதை நசுக்கவே முயன்றனர் என்பார். பிராமணர்கள் எதை எழுதிய போதிலும் அதை அறியும் உரிமையைப் பிறர்க்கு மறுத்தனர் என்றும் சுவாமி விவேகானந்தர் வருந்திக் கூறியுள்ளதாகச் சித்தர் சிவவாக்கியர் எனும் நூலில் க. நாராயணன் குறிப்பிடுகிறார்.''*[12]

'சிறுபான்மையராகக் குடியேறிய பிராமணர்கள் தம் பாதுகாப்பை முன்னிட்டுப் பெரும்பான்மையரைப் பிரித்தாளும் முயற்சியில் ஈடுபட்டனர். இம்முயற்சிக்குச் சமய உணர்வை ஒரு கருவியாகக் கொண்டனர். சமயக் கடவுளரிடையே உயர்வு, தாழ்வு கற்பித்து, அக்கடவுளரை வழிபடும் மக்களிடையே பகைமையை வளர்த்தனர். வெவ்வேறு பிரிவினர்களுக்கும் வெவ்வேறு சமயச்சடங்குகளையும், சாத்திரங்களையும் கற்பித்தனர். அவர்களின் தன்னலச் செயல்கள் காலப்போக்கில் சமயப் பூசல்களுக்கும், போர்களுக்கும், வன்முறைச் செயல்களுக்கும் இடம் தந்து சமுதாயச் சீரழிவிற்குக் காரணமாயிற்று. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற தமிழர்களின் பரந்த மனதில் அன்புணர்வு குறுகிச் சாதி சமயப் பாகுபாடுகள் புகலாயின.

மக்களின் ஒற்றுமை மனப்பான்மையைச் சிதைக்கக்கூடிய சமய எல்லைகளை உடைப்பதும், சமயச் சடங்குகட்கு ஆதாரமாக நிற்கும் சாத்திரங்களை எதிர்ப்பதும் சித்தர்களின் நோக்கங்களாயின. சரியை, கிரியை ஆகியவற்றின் தொகுப்பாக விளங்கிய பக்திநெறி, அறியாமையையும் மூடப்பழக்கங்களையும் வளர்ப்பனவாக மாறிவிட்டதைக் கண்ட சித்தர்கள் அதனை வெறுத்துரைத்தனர். வேதியர் சிலர் விளைத்திட்ட தீமைகளிலிருந்து சமுதாயம் விடுதலை பெறவேண்டும் என்று எண்ணிச் செயல்பட்டோரில் சிவவாக்கியார் முதன்மையானவராய்க் காணப்படுகின்றார்.

> ***''உருவ வழிபாட்டைப் பற்றுக்கோடாகக் கொண்டுதான் வேதியர் ஆதிக்கம் வேரூன்றியது என்பதால் சிவவாக்கியர் உருவ வழிபாடுகளைச் சாடுகிறார். உருவ வழிபாடு அறியாமையின் வெளிப்பாடு என்பதையும் அவர் எடுத்துக் காட்டுகிறார். உருவ வழிபாடு என்பது மனித மனத்தின் கற்பனையேயாகும். இந்தக் கற்பனை உருவங்களை வைத்தே பல புராணப் புனைகதைகளும் உருவாயின.''***[13]

உருவச் சிலைகளின் பொய்ம்மையையும் அவை தொடர்பான ஆரவாரச் சடங்குகளையும், வேதம் ஓதுதலையும், மந்திரங்கள் முணுமுணுத் தலையும், கங்கையில் மூழ்கினால் பாவம் தீரும் என்பன போன்ற பல்வேறு மூடநம்பிக்கைகளைச் சிவவாக்கியார் பாம்பாட்டிச் சித்தர்,

பட்டினத்தார், குதம்பைச்சித்தர், அகத்தியச் சித்தர், வான்மீகச் சித்தர், கடுவெளிச்சித்தர் போன்ற பல சித்தர்கள் சாடியிருப்பதனை அவர்களது பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

### 3.8. சித்தர்களும் மூடநம்பிக்கை ஒழிப்பும்

உலகில் சமயங்களின் எண்ணிக்கையைப் பலவாறாகப் பெருக்கித் தனித்தனிக் கடவுளரைக் கற்பித்துக் கொண்டும், சமயத்தின் பெயரால் மக்களிடையே வேறுபாட்டை உருவாக்கிப் பூசல்களை வளர்த்து ஒருவரையொருவர் இழித்தும் பழித்தும் பேசிக் கொண்டு மக்களினம் சிதருண்டு கிடப்பதைக் கண்டு சித்தர்கள் மிகவும் மனம் வருந்தினர். இறைவன் ஒருவனே என்றும், அப்பரம்பொருள் சமய எல்லைகளைக் கடந்து அனைவருக்கும் பொதுவாக இருக்கிறதென்றும் கூறிச் சமயப் பகைமைகளைப் போக்க முனைந்தனர்.

குறிப்பாக, சிவவாக்கியார் தாம் வாழ்ந்த காலத்தில் மக்களிடையே மண்டிக்கிடந்த சமய ஆரவார நிகழ்வுகளையெல்லாம் வெகுவாகச் சாடுகின்றார். வேதியர்கள் செய்திடும் அத்தனை மூடநம்பிக்கையான சடங்குகளையும் சாடுவதோடு, அதனால் ஏற்படும் பயன் யாது எனப் பல்வேறு பாடல்கள் வழி வினவுகிறார். மனத்தால் மட்டுமே உணரவேண்டிய இறைவனை, பொய்வேடமிட்டும், வெற்று ஆரவாரப்பூசைகள் செய்தும், காடு, மலை, ஆறு, குன்று என அலைந்தும் அப்பரம்பொருளைக் காணமுடியாது என்பது சித்தர்களின் உறுதியான

எண்ணமாக இருப்பதனை அவர்களது பாடல்களில் காணமுடிகின்றது. மூடநம்பிக்கையையிலிருந்து மக்களை விடுவிப்பதற்காகச் சிவவாக்கியார், பாம்பாட்டிச்சித்தர், பட்டினத்தார், குதம்பைச் சித்தர், அகத்தியர் போன்றோர் அரும்பாடுபட்டனர்.

### 3.9. சிவவாக்கியார்

இறைவனை வழிபடுகின்ற முறையில் சித்தர்கள், சமய நெறிகளிலிருந்து முற்றிலும் வேறுபடுகின்றனர். வேத ஆகம விதிகள், புராண இதிகாசங்கள் கூறும் செய்திகள் எனும் பெயரால் சமுதாயத்தில் மலிந்துவிட்ட மூடப்பழக்கங்களை அதிகமாகச் சாடியவர் சிவவாக்கியாரேயாவார். இவர் தன்னுள் உறைந்து ஒளிரும் இறைவனை அறியாமல், மூடர்களாக இறைவனைப் புற உலகில் தேடியலைந்தும், புறச்சடங்குகளில் ஈடுபட்டும் காலத்தை வீணே கழித்து வருகின்றனர் என்று இறையைத் தேடியலைவோரின் நிலையை வெளிப்படுத்துகிறார் இதனை,

*''ஓடிஓடி ஓடிஓடி உட்கலந்த சோதியை*
*நாடிநாடி நாடிநாடி நாட்களும் கழிந்துபோய்*
*வாடிவாடி வாடிவாடி மாண்டுபோன மாந்தர்காள்*
*கோடிகோடி கோடிகோடி எண்ணிறந்த கோடியே''*[14]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. கோடிக்கணக்கான மக்கள் இறைவனை வெளியுலகில் தேடித்தேடி அலைந்து, வாடி வதங்கி

மாண்டுபோயினர். அவர்கள் வேறொன்றையும் அறிந்திருக்க வாய்ப்பேயில்லை என்பதனை இப்பாடல் மூலம் அறியமுடிகின்றது. எனவே, மனத்தின் மூலமே அமர்ந்த இடத்திலேயே இறைவனைக் காணமுடியும், உணரமுடியும். அதனை விட்டுவிட்டு ஊர்ஊராகச் சென்று தேடுவது மூடமதியேயாகும். உங்கள் உடம்புக்குள்ளேயே இறைவனைக் காண முயற்சி செய்யுங்கள் என்கிறார் சிவாவக்கியார்.

**3.9.1. சித்தரும் உருவ வழிபாடு எதிர்ப்பும்**

உருவ வழிபாட்டையும் அவற்றுக்குச் செய்கின்ற சாத்திரச் சடங்குகளையும் கண்டித்த சித்தர்களில் சிவவாக்கியாரே முதன்மையானவராக விளங்குகின்றார். அவர் வெட்ட வெளியாய் விளங்கும் இறைவனுக்கு வெவ்வேறு பொருட்களில் உருவத்தை அமைத்து வழிபடுவது அறியாமையாகும் என்கிறார்.

*“கட்டையால் செய்தேவரும் கல்லினால் செய்தேவரும்*
*மட்டையால் செய்தேவரும் மஞ்சளால்செய் தேவரும்*
*சட்டையால் செய்தேவரும் சாணியால்செய் தேவரும்*
*வெட்டவெளியே தன்றிமற்று வேறுதெய்வ மில்லையே”*[15]

எனக் கட்டையால், கல்லினால், மட்டையால், மஞ்சளால், சாணத்தால், செய்கின்ற தெய்வ உருவச்சிலைகள் அனைத்தும் பொய்யான உருவங்களேயாகும். இறைவனுக்கு உருவமே இல்லை. அவன் வெட்ட

வெளியாக இருப்பவன், அப்படியிருக்க உருவத்தைச் செய்து வழிபடுவதெல்லாம் மூடச் செயல்கள் என்று இப்பாடல் உணர்த்துவதனைப் பார்க்க முடிகின்றது. அடுத்த பாடலில்,

*“ஓசையுள்ள கல்லைநீர் உடைத்திரண்டாய்ச் செய்துமே*
*வாசலில் பதித்தகல்லை மழுங்கவே மிதிக்கிறீர்*
*பூசனைக்கு வைத்தகல்லில் பூவும்நீரும் சாத்துறீர்*
*ஈசனுக்கு உகந்தகல் எந்தக்கல்லு சொல்லுமே”*[16]

எனச் சிவவாக்கியார் மக்களைப் பார்த்துக் கேள்வி கேட்கின்றார். ஒரு கல்லை இரண்டாகப் பிளந்து ஒரு கல்லைச் சிலையாகவும், மற்றொரு கல்லினை அக்கோயிலுக்குப் படியாகவும் அமைத்து இருக்கின்றான் சிற்பி. ஒரே கல்லிலிருந்து உருவாக்கப்பட்ட படியை விட்டுவிட்டுச் சிலைக்கு மட்டும் மானுடராகிய நீங்கள் பாலும், தேனும், பூவும், நீரும், பழக்கலவையும் கொண்டு பூசை பல செய்து சிறப்பெல்லாம் செய்கிறீர்கள். மற்றொரு கல்லோ மக்கள் காலடியில் பட்டுப்பட்டுத் மழமழவென மழுங்கத் தேய்ந்து கிடக்கிறது. இந்த இரண்டுகல்லில் இறைவனுக்கு உகந்த கல் எந்தக் கல் என்று மக்களைப் பார்த்துக் கேட்கின்றார். இறைவனைப் பொறுத்தவரையில் இரண்டுகல்லும் ஒன்றேயாம். ஏனெனில் இறைவனுக்கு எங்கும் எதிலும் எப்போதும் பிரிவினைப் பேதமே கிடையாது. அப்படி இருக்கையில் எந்தக் கல்லை அவர் சிறப்புப் பொருந்திய கல்லென்று கூறமுடியும் என்பதன் மூலம்

உருவ வழிபாட்டினை மறுப்பவராகச் சிவவாக்கியார் இருந்துள்ளார் என்பதனை மேற்கண்ட பாடல் தெள்ளத் தெளிவாக்குகின்றது.

*''செம்மைசேர் மரத்திலே சிலைதலைகள் செய்கிறீர்*
*கொம்மையற்ற கிளையில்பாதக் குறடுசெய்து அழிக்கிறீர்*
*நும்முளே விளங்குவோனை நாடிநோக்க வல்லீரேல்*
*இம்மலமும் மும்மலமும் எம்மலமும் அல்லவே''*[17]

மரங்களைக் கொண்டு செய்யப்பட்ட பல்வேறு வகையிலான அம்மன் தலைகள், கொம்மையற்ற வளைந்த கிளைகளைக் கொண்டு உருவாக்கப்பட்ட உடல்பகுதிகள், கால்பகுதிகளெல்லாம் சேர்ந்த சிலைகள் பல செய்து இறைவனை வணங்குகிறீர்கள். அம்மரக்கிளைகளில் எல்லாம் இறையைக் காணமுடியாது. அவ்விறைவன் உமக்குள்ளேதான் இருக்கின்றான். தக்கமுறையில் தியானம் மூலம் தேடுவீர்களேயானால் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலமும் எம்மலமும் நும்மைவிட்டு ஓடிவிடும் என்கிறார். சிவவாக்கியார்,

*''கல்லுவெள்ளி செம்பிரும்பு காய்ந்திடும் தராக்களில்*
*வல்லதேவ ரூபபேதம் அங்கமைத்துப் போற்றிடில்*
*தொல்லையற் றிடம்பெரும் சுகந்தருமோ சொல்லுவீர்*
*இல்லையில்லை இல்லையில்லை ஈசன்ஆணை இல்லையே'*[18]

இப்பாடலில் கற்சிலை, வெள்ளிச்சிலை, செப்புச்சிலை, இரும்புச்சிலை,

வெண்கலச்சிலை என அமைத்தும், காய்ந்துபோய்க் கிடக்கின்ற சங்குகளில் பல்வேறு உருவங்களை அமைத்தும் வழிபட்டுவிட்டால் உங்கள் தொல்லைகள் அனைத்தும் நீங்கிச் சுகபோக வாழ்வு வந்து சேர்ந்துவிடாது. விதவிதமான சிலைகளையெல்லாம் செய்து வணங்கும்படி யார் உங்களுக்கு ஆணையிட்டது. அது ஈசனது ஆணையில்லையே என்று உருவச்சிலை வழிபாடுகளைச் சாடுபவராகச் சிவவாக்கியார் காணப்படுகிறார்.

அவரது மற்றொரு பாடல்,

*"நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பம் சாத்தியே*
*சுற்றிவந்து முணமுணென்று சொல்லுமந்திரம் ஏதடா!*
*நட்டகல்லும் பேசுமோ நாதன்உள் இருக்கையில்*
*சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ?"*[19]

என வினவுகின்றது. கற்சிலைக்குப் பூச்சூடி அதனை வலமாகச் சுற்றிவந்து மந்திரங்களையோ தங்கள் கோரிக்கைகளையோ முணுமுணுப்பதால் எவ்விதப் பயனுமில்லை. அகப்பையானது குழம்பினில் மூழ்கியிருந்தாலும் குழம்பின் சுவையை அறியவே அறியாது. அதுபோலத்தான் மக்கள் நட்டுவைத்த கல்லை ஆயிரமுறை சுற்றினாலும் அவர்கள் சுற்றுவது அதற்குத் தெரியாது. அவர்கள் வாயிலிருந்து வருகின்ற எந்தவித முணுமுணுப்பும் அக்கல்லுக்குக் கேட்காது என்கின்றார் சிவவாக்கியார்.

இப்பாடல் அவர் உருவ வழிபாட்டினை அறவே வெறுத்ததையே காட்டுகின்றது.

'மூடப்பழக்கம் எனும் முடைநாற்றம் வீசும் காடாகிய சமுதாயத்தில் வேரூன்றியிருந்த உருவ வழிபாட்டைச் சித்தர்கள் கடுமையாகக் கண்டிக்கின்றனர். கல்லைத் தெய்வமாக வணங்கும் முறையையும் பொருள் தெரியாத மந்திரங்களை முணுமுணுப்பதையும் சடங்குகளையும் ஏளனம் செய்கின்றனர் சித்தர்கள்'[20] என்று இரா. கலாவதி கூறுவது இதனைத் தெளிவாக்கும்.

*''செங்கலும் கருங்கலும் சிவந்தசாதி லிங்கமும்*
*செம்பிலும் தராவிலும் சிவனிருப்பன் என்கிறீர்''*[21]

என்கிறார் சிவவாக்கியார். செங்கல் கருங்கற்களால் செய்யப்பட்ட சிலைகளிலும், இலிங்கங்களிலும், செப்புச் சிலைகளிலும், தரா என்று கூறப்படும் சங்கிலும் சிவன் இருக்கின்றான் என்று கூறிக்கொண்டிருக்கின்ற மனிதர்கள் அவன் தமக்குள்ளேயே இருப்பதனை உணராமல் இருக்கின்றனர். உருவத்தை வைத்து வழிபாடு செய்வதனால் ஒரு பயனும் ஏற்படப் போவதில்லை என்று கூறுவதனைக் காணமுடிகின்றது.

*''மாறுபட்ட மணிதுலக்கி வண்டின்எச்சில் கொண்டுபோய்*
*ஊறுபட்ட கல்லின்மீதே ஊற்றுகின்ற மூடரே''*[22]

எனும் பாடல் வெண்கலம், செம்பு, பித்தளை போன்ற உலோகங்களால் செய்த பூசைமணியை ஒலித்தும், கல்லால் செய்யப்பட்ட சிலையின்மீது வண்டுகளின் எச்சில்பட்ட தேனையூற்றியும் மக்கள் வழிபாடு செய்கின்றனர். அவர்கள் அந்தக்கல்லே சிற்பிகளின் கைகளால் உளிகளில் அடிபட்டுத் துன்பப்பட்டுக் கிடக்கிறது என்பதனை உணராமல் அதன்மேல் நீரூற்றிப் பூக்களைத் தூவுவதாலெல்லாம் இறைவனை அடையமுடியாது என்பதனை உணராமல் உள்ளனர் என்று சிவவாக்கியார் உணர்த்துகின்றார்.

கோயில்களில் ஆறுகாலப் பூசை, இராகுகாலப் பூசை என எத்தனை காலப் பூசைகள் செய்தாலும் அதனால் ஒன்றும் நடந்துவிடப் போவதில்லை என்கிறார் சிவவாக்கியார். வாயிலே குடித்தநீர் எச்சிலாகும்போது வாயிலே குதப்பி வெளிவருகின்ற வேதமந்திரங்களும் எச்சில்தானே என்பது சிவவாக்கியாரின் கேள்வி. அவரது இக்கேள்வி

***"வாயிலே குடித்தநீரை எச்சிலென்று சொல்கிறீர்***
***வாயிலே குதப்புவேதம் எனப்படக் கடவதோ"***[23]

என்னும் பாடலாக வெளிவருகின்றது. ஒருவர் குடித்துவைத்த மீதமுள்ள நீரைக் குடிக்கக் கொடுத்தால் எச்சில் என்றுரைக்கின்றீர். வாய்பட்டதனால் எச்சிலென்றால் வாயிலிருந்து வரும் வேதமும் எச்சில்தானே என்று வாதிடும் பாங்கினைப் பாங்குறக் காணமுடிகின்றது. மேலும்

இறைவனுக்குக் கேட்குமென்றெண்ணி அறிவுக்குப் புறம்பான ஆகமங்களை ஓதுபவர்கள் நல்லநெறியிலே மனத்தைச் செலுத்தும் தன்மையை அறியவில்லையே என மேற்கண்ட பாடலில் சாடுவதனையும் காணமுடிகின்றது.

*"உரியிலே தயிர்இருக்க ஊர்புகுந்து வெண்ணெய்தேடும்*
*அறிவில்லாத மாந்தரோடு அணுகுமாறு எங்ஙனே"*[24]

எனும் பாடலடிகளில் சிவவாக்கியார் தக்க ஓர் உவமையைக் கையாள்கின்றார். வெண்ணெய் தேவைப்படுவோர் தமது வீட்டு உரியிலே இருக்கும் தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுப்பதை விட்டுவிட்டு ஊர்முழுவதும் வெண்ணெயைத் தேடி அலைவதுபோல் இறையைத் தேடுவோரின் தன்மையும் உள்ளது என அவர் கூறுகின்றார். அதாவது தமது உள்ளத்தினுள்ளே இருக்கும் இறைவனைத் தேடாமல் ஊர்தோறும் சென்று தேடுவது அறிவற்ற செயலாகுமென்றும் அத்தகையரோடு எவ்வாறு சேர்ந்துவாழமுடியுமென்றும் சிவவாக்கியார் வினவுவது ஏற்புடையதேயாகும். சிவவாக்கியார்,

*"கோயிலாவ தேதடா குளங்களாவ தேதடா*
*கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே*
*கோயிலும் மனத்துளே குளங்களும் மனத்துளே*
*ஆவதும் அழிவதும் இல்லையில்லை இல்லையே"*[25]

என்ற பாடலில் கோயிலென்றும் குளங்களென்றும் தேடிச் சென்று கும்பிடுவோரைக் கீழ்மக்கள் எனச் சாடுகின்றார். ஏனெனில் அந்தக் கோயில் குளங்களெல்லாம் ஒருநாள் அழியக் கூடியனவாகும். ஆனால் ஆன்மாவிற்கு அழிவே இல்லை. எனவே கோயில் குளங்களுக்கு ஓடுவதை விட்டுவிட்டு அமர்ந்த இடத்திலேயே மனத்தில் இறைவனைக் காண முற்படுவதே சிறந்ததாகும் என்பது சிவவாக்கியாரின் முடிவாகும்.

**3.9.2. சடங்கினைச் சாடல்**

சிவவாக்கியார், மதம் தொடர்பான வழிபாடு தொடர்பான பல்வேறு சடங்குகளை வன்மையாகச் சாடுபவராகவே விளங்குகின்றார். இதனை,

***''சாவதானத் தத்துவச் சடங்குசெய்யும் ஊமைகாள்***
***தேவர்கல்லும் ஆவரோ சிரிப்பதன்றி என்செய்வேன்***
***யாவராலும் அறியொணாத அகக்கணார் விழிப்பிலே***
***காவலாக உட்கலந்த கலப்புகண்டு சொல்லுமே''[26]***

என்னும் பாடலில் சிவவாக்கியார் கல்லுக்குக் கடவுள் என்று பேரிட்டுச் சடங்குகளும் வழிபாடுகளும் செய்கின்றவரை ஊமைகள் எனச் சாடுகிறார். தியானித்தால் தெய்வம் நமக்குள்ளே இருக்கும் உண்மையை உணர்ந்து கொள்ளலாம் என்கிறார்.

***''காலைமாலை நீரிலே மூழ்குமந்த மூடர்காள்***
***காலைமாலை நீரிலே கிடந்ததேரை என்பெறும்'[27]***

காலையிலும் மாலையிலும் நீராடிவிட்டு வழிபாடு செய்தால் இறைவனைக் காணமுடியும் என்று நம்புபவர்களை நோக்கிச் சிவவாக்கியார் பின்வருமாறு வினவுவது ஏற்புடையதாகும். அதாவது காலமெல்லாம் தண்ணீரிலேயே மூழ்கிக்கிடக்கின்ற தவளைகள் என்ன பயனைப் பெறுகின்றன எனவும் அவை எப்பொழுதும் நீருக்குள்ளேயே இருப்பதால் விரைவாகவும் எளிதாகவும் இறைவனைக் கண்டுவிட முடியுமே எனவும் வினவுவது சாலப் பொருத்தமுடையதேயாகும். ஞானக்கண் கொண்டு இறைவனைக் காண முடியாத மூடர்கள் தம் ஊனக்கண்களால் நீர்நிலைகளில் மூழ்கித் தேடுகின்றனர் என்றுரைப்பது பகுத்தறிவுச் சிந்தனைகொண்ட சிவவாக்கியார் வேதியர்தம் செயல்களைப் பார்த்துக் கொதித்துப் போய் இத்தகைய கேள்விகளைக் கேட்பது பொருத்தமுடையதேயாகும்.

***“நீரையள்ளி நீரில்விட்டு நீர்நினைந்த காரியம்***
***ஆரைஉன்னி நீரெல்லாம் அவத்திலே இறைக்கிறீர்?***
***வேரைஉன்னி வித்தைஉன்னி வித்திலே முளைத்தெழும்***
***சீரைஉன்ன வல்லீரேல் சிவபதங்கள் சேரலாம்.”***[28]

‘வைதிகர்கள் நீர்நிலைக்குச் சென்று குளித்துவிட்டு நீரில்நின்றபடி மூன்றுமுறை கைகளிலே தண்ணீரையள்ளித் தண்ணீரிலே விடுவார்கள். இதனைத் திரிகரண சுத்தியென்பர். அதாவது மனம் வாக்கு செயல் என்ற மூன்றையும் தூய்மைசெய், எக்காலத்தும் தூய்மையோடு இருக்க அருள்செய் என்று பொருள் கூறுவார் ஸ்ரீஞானஜோதிசம்பங்கி.

பரம்பொருளானது தாவரங்கள், வேர்கள், விதைகள், விதையினுள் ஒளிந்துள்ள இன்னொரு மரம் இவற்றிலிருந்து உணர்ந்து கொள்ளுங்கள். நீரை அள்ளி நீரில் விடுவதால் மட்டுமே மனம் வாக்கு செயல் தூய்மையடைந்து விடாது’[29] என்று மேற்காணும் பாடல் விளக்குகின்றது.

### 3.9.3 பொய்ம்மையான வேடதாரிகளைச் சாடல்

மனிதன் பிறந்தபோதே அவனுடன் கோவணமும், பூணூலும், குடுமியும் கூடவே பிறக்கவில்லை; உபநயனச் சடங்குளும், வேத பாடங்களும், மனத்தில் பிறந்தபோதே உதிக்கவில்லை. சடங்குகளைத் துறக்காத மூடர்களாகிய நீங்கள் உலகிலுள்ள மற்றவர்களைக் காட்டிலும் என்ன தூய்மையை அடைந்துவிட்டீர்கள் என அவர்களை நோக்கிக் கேட்கின்றார். இதனை,

***‘‘பிறந்தபோது கோவணம் இலங்குநூல் குடுமியும்***
***பிறந்துடன் பிறந்துவோ பிறங்குநூல் சடங்கெலாம்***
***மறந்தநாலு வேதமும் மனத்துளே உதித்ததோ***
***துறந்திடாத தூமைகாள் தூய்மையென்ன கண்டதே’’***[30]

என்னும் பாடல் புலப்படுத்துகின்றது.

மற்றொரு பாடலில் அத்தகையவர்களின் மூட, பொய்யான வேடத்தைச் சிவவாக்கியார்,

*"வெந்தநீறு மெய்க்கணிந்து வேடமும் தரிக்கிறீர்*
*சிந்தையுள் நினைந்துமே தினம்செபிக்கும் மந்திரம்*
*முந்திமந் திரத்திலோ மூலமந் திரத்திலோ*
*எந்தமந் திரத்திலே ஈசன்வந் தெய்துமே"*[31]

எனப் படம் பிடித்துக் காட்டுகின்றார். திருநீறைப் பூசி வேடம் போடுபவர்களே, மனதால் நினைத்துச் சொல்கின்ற மந்திரம் முந்தையதா அல்லது அதுவே மூலமானதா எந்த மந்திரத்தில் ஈசனை வணங்கினீர்கள். அந்த மந்திரத்தைக் கூறுங்கள் பார்ப்போம். அனைவரும் அறிந்து கொள்ளட்டும் என்று சாடுகிறார்.

ஆசாரமாக வேடமிட்டுத் தீபங்கள் ஏற்றிப் படையலிட்டுப் போடுகின்ற பூசையைச் சிவவாக்கியார் வன்மையாகச் சாடுகின்றார். இதனை,

*"வேடமிட்டு மணிதுலக்கி மிக்கதூப தீபராய்*
*ஆடறுத்துக் கூறுபோட்ட அவர்கள்போல் பண்ணுறீர்*
*தேடிவைத்த செம்பெலாம் திரள்படப் பரப்பியே*
*போடுகின்ற புஷ்பபூசை பூசையென்ன பூசையே"*[32]

என்னும் பாடல் விளங்குகின்றது. சிவவாக்கியார் மேற்கூறியவற்றையெல்லாம் படைத்தும், பூவால் பூசித்தும், என்ன சாதித்து விடப்போகிறீர்கள் என்று கேட்கின்றார். அவர் சடங்கு முறைகளையெல்லாம் சாடுபவராக இருந்தார் என்பதனை மேற்கண்ட பாடல் உணர்த்துகின்றது.

சிவவாக்கியார், மற்றொரு பாடலிலும் பொய் வேடதாரிகளையும், கபட வேடதாரிகளையும் சாடும் பாங்கினைக் காணமுடிகின்றது.

*''அள்ளிநீரை விட்டதேது அகங்கையில் குழைத்ததேது*
*மெள்ளவே முணமுணென்று விளம்புகின்ற மூடர்காள்!*
*கள்ளவேட மிட்டதேது கண்ணைமூடி நின்றதேது*
*மெள்ளவே குருக்களே விளம்பிடீர் விளம்பிடீர்''*[33]

என்பார். சிலர் ஆற்றிலே குளிக்கும்போது கையில் நீரையள்ளி விட்டதும் கையைக் குழைத்ததும், மெள்ள முணுமுணுத்துச் சொன்னதும், எல்லாம் என்ன மூடர்களே என்று விளிக்கிறார். உங்கள் உடம்பைச் செயல்பட வைத்தால் மனம் ஒருமுகப்படாது. மனதை அலைபாயவிட்டுச் செய்கின்ற பூசை கள்ளத்தனமானது. எனவே கள்ளவேடமிட்ட குருக்களாகிய நீங்கள் நீரில் குளிக்கும்போது என்னென்னமோ செய்கின்றீரே அவை என்னவென்று விளம்புங்கள் என்று வினவுகிறார்.

சிவவாக்கியர் வேதியர்களை,

*''சட்டையிட்டு மணிதுலக்கும் சாத்திரச் சழக்கரே*
*புத்தகத்தை மெத்தைவைத்து போதமோதும் பொய்யரே''*[34]

என்கிறார். மேலாடை அணிந்து மணியை அசைத்துச் சாத்திரம் ஓதுகின்ற கசடறே என்றும், வேதப்புத்தகத்தை வைத்துக்கொண்டு போதனை செய்கின்ற பொய்யர்களே என்றும் அவர் வேதியர்களைச் சாடுகின்றார்.

சிவவாக்கியார் பிறிதொரு பாடலில் வைணவ சமயத்தைப் போற்றுகின்ற பட்டர்களை நோக்கி,

*“இட்டகுண்டம் ஏதடா இருக்குவேதம் ஏதடா*
*சுட்டமட் கலத்திலே சுற்றிநூல்கள் ஏதடா*
*முட்டிநின்ற தூணிலே முளைத்தெழுந்த சோதியைப்*
*பற்றிநின்ற தேதடா பட்டநாத பட்டரே”*[35]

என வினவுகிறார். திருமால் இரணியனைக் கொல்வதற்காக நரசிம்ம அவதாரமெடுத்துத் தூணைப் பிளந்து உடைத்துக்கொண்டு வெளியே வந்தார் என்று கூறும் பட்டராகிய நீங்கள், இறைவனுக்கு உருவமில்லை என்பதை மறந்துவிட்டுத் திருமால் சிம்ம அவதாரம் எடுத்துவந்து இரணியனைக் கொன்றார் என்று கதைவிடுகிறீர்கள். சுட்ட மட்கலத்தைச் சுற்றிலும் நூலைச் சுற்றி வைத்துள்ளீர்களே அதெல்லாம் எதற்காக எனவும் கேட்கின்றார். ஒளிவடிவான இறைவனை ஓமகுண்டம் அமைத்துத் தீயை வளர்த்தும், வேதம் ஓதியும் மண்சட்டியிலே குறுக்கும்நெடுக்குமாக நூலைச்சுற்றியும் நீர் பற்றிவிடவோ அடைந்துவிடவோ முடியாது. நுமது நெஞ்சத்தில் குடிகொண்டுள்ள இறைவனை அறிந்துகொள்ள முயற்சி செய்யாது ஆரவாரத்துடன் கூடிய பூசைகளெல்லாம் எதற்காக என்று சிவவாக்கியார் வினவுவது ஏற்புடையதேயாகும். சிவவாக்கியார்,

*"எப்பிறப்பி லும்பிறந்து இறந்தொழிந்த ஏழைகாள்*
*இப்பிறப்பி லும்பிறந்து என்னநீறு பூசுறீர்*
*ஒப்புடன் மலம்அறுத்து ஆசைநீக்க வல்லீரேல்*
*தப்பில்லாத ஞானமாம் நயந்துகாண லாகுமே"*[36]

என இப்பாடலில் நீறு பூசுகின்ற மனிதர்களைப் பார்த்து வினவுகின்றார். எந்தப் பிறவி எடுத்தாலும் இறந்து ஒழிந்துதான் ஆகவேண்டும். எனவே மனிதப் பிறவி எடுத்த நீங்கள் எதற்காகத் திருநீறு பூசுகிறீர்கள், அதனால் என்ன பயன் வந்துவிடப்போகிறது. ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களை முதலில் ஒழியுங்கள். பற்றற்று இருங்கள். உற்ற வீடும் கிடைக்கும் எனச் சிவவாக்கியார் உணர்த்துகின்றார்.

கூட்டமாகக் கூடி வேதம் ஓதுபவர்களை நோக்கி 'வேதநூலில் எந்த எழுத்தில் தெய்வம் இருக்கிறது. அதனை எனக்குக் கூறவேண்டும்' என்று சிவவாக்கியார் கேட்கின்றார். இதனை

*"கூட்டமிட்டு நீங்களும் கூடிவேதம் ஓதுறீர்*
*ஏட்டகத்துள் ஈசனும் இருப்பதென்ன எழுத்துளே"*[37]

என்னும் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன.

*"அங்கலிங்கம் பூண்டுநீர் அகண்டபூசை செய்கிறீர்*
*அங்கலிங்கம் பூண்டுநீர் அமர்ந்ததோடு வேறிலை*
*எங்கும்ஓடி எங்கனும் ஈடழிந்து மாய்கிறீர்*
*செங்கல்செம்பு கல்லெலாம் சிறந்துநோக்கும் மூடரே"*[38]

எனும் இப்பாடலில் சிவவாக்கியார் வேதியர்களை நோக்கி, 'பூசைக்கென்று சில ஆடைகளை உடுத்திப்பூசை செய்கிறீர்கள்; அவ்வாறு ஆடை உடுத்தியதைத் தவிர வேறுபயன் நீங்கள் கண்டதில்லை; செங்கல், கருங்கல் செம்பையெல்லாம் கடவுளென்று மயங்குகிறீர்கள்; வேடத்தைப் புனைந்து கொண்டு கண்ட இடங்களுக்கெல்லாம் ஓடி அலைகின்றீர்கள்' இதற்கெல்லாம் என்ன காரணம். என்று அவர் வினவுகின்றார். அகத்தூய்மையின்றி வெளிவேடம் போடுகின்ற வேதியர்களின் மாயையிலிருந்து விடுபடவேண்டும் என்ற நல்ல எண்ணம் சிவவாக்கியாரிடமிருந்து வெளிப்டுவதனை அறிய முடிகிறது.

**3.9.4. சித்தரும் அறிவியல் பார்வையும்**

மேல்வருணத்தார்க்கும் கீழ்வருணத்தார்க்கும் இடையே சிவவாக்கியாரது காலகட்டத்தில் 'எச்சில்' எனும் சொல் துன்பத்தை ஏற்படுத்தியுள்ளது என்பதனை அறியமுடிகின்றது. கீழ்வருணத்தார் வீட்டின் நற்காரியங்களில் மேல்வருணத்தார் எச்சில், தீட்டு என்று கூறி உண்ணாமல் தவிர்த்துவிட்டுச் செல்வதெல்லாம் நடந்துள்ளன என்பது தெளிவாகத் தெரிகிறது. எனவே எச்சில் என்ற சொல்லைக் கேட்டவுடனேயே அவர் எரிச்சல்படுவதனை அவரது பாடல்களில் காணமுடிகின்றது.

*''வாயில்எச்சில் போகவே நீர்குடித்துத் துப்புவீர்*

*வாயிருக்க எச்சில்போன வாறென்ன தெவ்விடம்?*

*வாயில்எச்சில் அல்லவோ நீர்உரைத்த மந்திரம்*

*நாதனை அறிந்தபோது நாடும்எச்சில் ஏதுசொல்''*[39]

வாயிலுள்ள எச்சிலைக் கழுவுவதற்குத் தண்ணீரை வாயில் ஊற்றிக் கொப்புளித்துத் துப்புகிறீர்கள். வாய் அப்படியே அங்கேயேதான் இருக்கிறது. எனவே வாயிலிருக்கும் எச்சில் எங்கு எவ்விதம் போகும். வேதியர்களாகிய நீங்கள் உரைக்கின்ற மந்திரமும் வாயிலிருந்து வெளிவருகின்ற எச்சிலேயாகும். அந்த எச்சில் இறைவனை அடையலாமா எனச் சிவவாக்கியார் கேட்கின்றார். மேலும்,

*''வாயிலே குடித்தநீரை எச்சிலென்று சொல்லுவீர்''*[40]

என்றும்,

*''ஓதுகின்ற வேதம்எச்சில் உள்ளமந் திரங்களெச்சில்*

*போதங்க ளானதெச்சில் பூதலங்கள் ஏழுமெச்சில்*

*மாதிருந்த விந்துஎச்சில் மதியும்எச்சில் ஒளியுமெச்சில்*

*ஏதிலெச்சி லில்லதில்லை இல்லையில்லை இல்லையே''*[41]

என்றும் பாடியுள்ளார். இப்பாடலில் அவர் வாய்வழியாகச் சொல்கின்ற வேதங்களும், மந்திரங்களும், குருதேவர் போதித்த போதனைகளும் எச்சிலேயாகும் என்று கூறுகிறார். ஏழுகோள்களுமே ஆதியில் நெருப்புக்

கோளத்திலிருந்து சிதறிய எச்சிலே என்றும், விந்துப்பையிலிருந்து வெளிவருவதால் விந்துவும் எச்சிலே என்றும், கதிரவனிடமிருந்து ஒளியைப் பெற்று வெளியிடுவதால் மதியெனும் நிலவும் எச்சிலே என்றும், நிலவில் இருந்து வருவதால் அதன் ஒளியும் எச்சிலே என்றும், சிவவாக்கியார் அறிவியல் பார்வையோடு சிந்தித்துரைக்கின்றார். சிவவாக்கியார் மற்றொரு பாடலில் எச்சிலைப் பற்றி,

*''எச்சில்எச்சில் என்றுநீர் இடைந்திருக்கும் ஏழைகாள்*
*துச்சில்எச்சில் அல்லவோ தூயகாயம் ஆனதும்*
*வைத்தஎச்சில் தேனலோ? வண்டின் எச்சில் பூவலோ?*
*கைச்சுதாவில் வைத்துடன் கறந்தபாலும் எச்சிலே''*[42]

என உரைக்கின்றார். மக்கள் தாம் உண்ட உண்கலத்தை எச்சில் எனத் தள்ளுகிறார்கள். ஆனால் உண்ண எடுத்துக்கொடுத்த கைகளை அவர்கள் வெட்டி எறிவதில்லை. மாறாக அக்கைகளால் பூசனையெல்லாம் செய்கின்றார்கள். எச்சிலென முகம் சுளிப்பவர்கள் எத்தனையோ எச்சில் பொருட்களை இன்முகத்தோடு பயன்படுத்துகிறார்கள் எனச் சிவவாக்கியார் ஒரு பட்டியலையே கொடுக்கின்றார். 1. ஒதுங்கி மறைவாக இட்ட எச்சில்தானே உடம்பாகியது. 2. வண்டு நக்கிய பூதான் பூசைக்குச் செல்கின்றது. 3. வண்டு இட்ட எச்சில்தான் தேன்கூட்டில் தேனாகிறது. வண்டின் எச்சில்பட்ட தேனை உடம்புக்கு நல்லதென்று மக்கள் மகிழ்வோடு உண்கின்றனர். 4. பசுவின் மடியினில் கன்று ஊட்டிய

எச்சில்பட்ட காம்பிலிருந்து வரும் பால்தான் உணவாகிறது. இவ்வெச்சில் பொருட்களையெல்லாம் சுவைத்து மகிழும் வேதியர்கள் பிறபொருட்களை மட்டும் எச்சில் என இழித்துரைப்பது எந்தவிதத்திலும் நியாயமாகாது என்று சாடுவதனை மேற்கண்ட பாடல்வழி அறியமுடிகின்றது.

**3.9.5 வந்த இடமும் சென்ற இடமும்**

வேதியர்கள் தம்முள்ளிருக்கும் ஆன்மாவை அறியாமல், நாம் எங்கிருந்து வந்தோம், இறந்தபிறகு எங்கு செல்கின்றோம் என்பதையும் உணராமல் புத்தகங்களைக் கையில் வைத்துக் கொண்டு பொய்யான கதைகளையெல்லாம் கூறி மக்களை ஏமாற்றுகின்ற ஏமாற்றுப் பேர்வழிகளேயாவர் என்று சிவவாக்கியார் சாடுகிறார். இதனை,

***''புத்தகங் களைச்சுமந்து பொய்களைப் பிதற்றுவீர்***
***செத்ததும் பிறந்ததும் எங்ஙனென்று அறிகிலீர்''***[43]

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

இறைவனைக் காணப்போகின்றேன் என்று காடு, மேடு, பள்ளம், மலை, ஆறுகளைக் கடந்தும், பல ஊர்களைக் கடந்தும் பல்வேறு நாடுகளைக் கடந்தும் சென்று வந்தாலும் இறைவனைக் காணவும் முடியாது. வீடுபேற்றை அடையவும் முடியாது என்கிறார் சிவவாக்கியார். மேலும் மக்களது உடலுக்குள் வந்த ஆவி அவரது உடலைவிட்டுப் பிரியும்போது அது எங்கிருந்து வந்ததோ அங்கேயே சென்றுவிடுகிறது.

கூத்தனாகிய இறைவன் உன்னுள் இருக்கிறான். அதனை உணராமல் எங்கு செல்லினும் அவன்பாதம் காணார் என்று அவர் கூறுகிறார். இதனை,

*''காடுமேடு குன்றுபள்ளம் கானின்ஆறு அகற்றியும்*
*நாடுதேசம் விட்டலைவர் நாதன்பாதம் காண்பரோ?*
*கூடுவிட்டு அகன்றுன்ஆவி கூத்தனூர்க்கே நோக்கலால்*
*வீடுபெற்று அரண்பதத்தில் வீற்றிருப்பர் இல்லையே''*[44]

என்ற பாடலின்வழி அவர் அறிவுறுத்துகின்றார்.

*''பிறப்பதற்கு முன்னரே இருந்தவாற தெங்ஙனே*
*பிறந்துமண் இறந்தபோது இருக்குமாறு எங்ஙனே*
*குறித்துநீர் சொலாவிடில் குறிப்பிலாத மாந்தரே*
*அறுப்பனே செவியிரண்டு அஞ்சரிந்த வாளினாள்''*[45]

என்னும் பாடலில் பிறப்புக்கு முன்னரும், இறப்புக்குப் பின்னரும் உண்டானநிலை எதுவென்று கேட்கிறார். எச்சில், படையல், மந்திரம், பூசை எனப் பின்பற்றி வாழும் நீங்கள் தெரிந்துகொண்டது யாது எனும் பொருள்படக் கேட்பதனை விளங்கிக் கொள்ள முடிகிறது. இங்கு வேதியர்களாகிய நீங்கள் பதில் சொல்லாவிடில் உங்களது செவியிரண்டையும் அறுப்பேன் என்று சிவவாக்கியார் கொதிப்படைகிறார். ஐம்புலன்களையும் அரிந்தவாள் என்னிடம் இருக்கிறது என்று

யோகசக்தியைப் பற்றி அவர் கூறுகிறார். உயிர் எங்கிருந்து வந்ததோ அங்கேயே செல்கிறது. அதனை அறியாமல் வெற்றுச் சடங்குகள் செய்வது வீணானதேயாகும் என்று சிவவாக்கியார் எண்ணுகின்றார்.

**3.9.6 சித்தரும் ஆரவாரப் பூசையெதிர்ப்பும்**

நாட்டில் பலர் அடுத்தவர்களை நோக்கி வசைமொழிகளை வாரித்தூற்றியும், கொலை, கொள்ளை புரிந்தும், பிறர்பொருளை வஞ்சித்து ஏமாற்றியும், பிறர் மனம் புண்படும்படியாகப் பல்வேறு தீயசெயல்களைச் செய்தும் வருகின்றனர். கோவிலுக்குச் சென்று சிறப்புப் பூசைகளைச் செய்தும் அன்னதானம் முதலியவற்றைச் செய்தும் வருவதனைச் சிவவாக்கியார் வன்மையாகச் சாடுகிறார்.

*''நித்தமும் மணிதுலக்கி நீடுமூலை புக்கிருந்து*
*கத்தியே கதறியே கண்கள்மூடி என்பயன்?*
*எத்தனைபேர் எண்ணினும் எட்டிரண்டும் பத்தலோ?*
*அத்தனுக்கிது ஏற்குமோ அறிவிலாத மாந்தரே''*[46]

எனச் சிவவாக்கியார் மானுடரைப் பார்த்துக் கேட்கிறார். நீங்கள் அன்றாடம் மணியை நன்கு துலக்கிப் பூசையறையில் தீபமேற்றி மணியசைத்துக் கத்தினாலும், கதறினாலும், கண்மூடிக் கிடந்தாலும் அதனால் ஒரு பயனும் விளையாது. எத்தனைபேர் எத்தனைமுறை எண்ணிப்பார்த்தாலும் எட்டும் இரண்டும் கூட்டினால் பத்துதான் வரும். கத்திப் பாடிக்கொண்டு

செய்கின்ற பூசை பிறர்கவனத்தை ஈர்க்கும் கீழான பூசை என்பது இவரது கருத்து. இது பக்தியும் இல்லை. சித்தியும் தராது. ஆயிரம் அழுக்குகளை மனத்திலே வைத்துக்கொண்டு இதுபோன்ற ஆரவாரப்பூசைகளால் அவர்கள் அடைவது இழிவேயாகும் எனப் போலியான பூசைசெய்யும் மானிடர்களைச் சாடுவதனை அறியமுடிகின்றது. மற்றொரு பாடலில் சிவவாக்கியார்,

*"ஆடுகொன்று கூறுசெய்து அமர்ந்திருக்கும் வாறுபோல்*
*தேடுகின்ற செம்பினை திடப்படப் பரப்புவீர்*
*நாடுகின்ற தம்பிரான் நமக்குளே இருக்கவே*
*போடுகின்ற அற்பபூசை பூசையென்ன பூசையே"*[47]

என்பார். சிற்றூர்களில் திருவிழா நாட்களில் ஆட்டைக்கொன்று கறியைக் கூறுபோடுவார்கள். அதுபோன்று செம்புக்கலசங்களைப் பரப்புகிறீர். பின்னர் கூட்டமாகக்கூடி வேதபாராயணம் செய்து ஒலியெழுப்பி ஆரவாரமாகப் பூசை செய்கின்றீர். இறைவனை நம்முள்ளே காண்பதனை விட்டுவிட்டு இன்னோரன்ன அற்பப் பூசைகள் யாவும் ஏன் எனத் துணிவோடு கேட்கும் பாங்கினையும் சிவவாக்கியார் பாடல்களில் காணமுடிகின்றது.

சமுதாயத்தில் நடந்து வருகின்ற அறிவற்ற செயல்களையும், ஏமாற்றுவித்தைகளையும், பொய்வேடங்களையும், போலியான வெற்று ஆரவாரப்பூசைகளையும், பொய்யான மந்திரங்களையும் சாடுவதோடு

மக்கள் மூடப்பழக்கங்களுக்கு அடிமையாகாமல் பகுத்தறிவுச் சிந்தனை பெறுவதற்கு ஒரு முன்மாதிரியாக வாழ்ந்து காட்டியவர் சித்தர் சிவவாக்கியார். இதற்கு அவரது பாடல்கள் சான்றாக இருப்பதனை அனைவரும் அறிந்து தெளியலாம்.

### 3.10. பாம்பாட்டிச்சித்தரும் பகுத்தறிவுச் சிந்தனையும்

மூடப்பழக்கத்திலிருந்து மக்கள் விடுபடவேண்டும் என்ற சிந்தனை பாம்பாட்டிச்சித்தரிடம் மேலோங்கி இருந்ததனை இவரது பாடல்கள் பகர்கின்றன. சிவவாக்கியாரைப்போன்றே இவரும் ஆரவாரப் பூசைசெய்வதைக் கடிந்துரைக்கின்றார். மலை, சிலை, கோயில்களைச் சுற்றி வருவதனால் மட்டுமே வளமான வாழ்க்கையும், புண்ணியமும் வாய்த்துவிடுவதில்லை என்பதனை,

*“பூசைசெய்த தாலேசுத்த போதம் வருமோ?*
*பூமிவலஞ் செய்ததனாற் புண்ணியம் உண்டோ?*
*ஆசையற்ற காலத்திலே ஆதி வத்துவை*
*அடையலாம் என்றுதுணிந் தாடுபாம்பே”*[48]

என்னும் பாடலடிகளின் வாயிலாக விளக்குகின்றார். பூசைசெய்தல், பூமியை வலமாகச் சுற்றிவருதல் முதலிய இவையெல்லாம் பயனற்ற செயல்கள் என்பதும் அவற்றால் ஒன்றும் விளையப் போவதில்லை என்பதும் இவரது கருத்தாகும். ஆசையே துன்பத்திற்குக் காரணம்.

ஆதலால் ஆசைகளைத் துறந்தால் வாழ்வில் நிம்மதிவரும் என்பது புத்தரது கொள்கை. பாம்பாட்டியாரும் புத்தர் கொள்கையைப் பின்பற்றுகிறார். தம் மனத்தில் எந்தவித ஆசைகளும் இல்லாமல் இருக்கும்போது பரம்பொருளை நினைத்துத் தியானித்தால் இறைநிலையைக் காணலாம், அடையலாம் என்பதனைப் பாம்பாட்டியாரின் இப்பாடல் மூலமாக அறிய முடிகின்றது.

பாம்பாட்டிச்சித்தர், மூடமதிகளைச் சாடுவதில் வல்லவர் என்பதற்கு அவரது பின்வரும் பாடல்கள் சான்றாக விளங்குகின்றன.

*"உளியிட்ட கற்சிலையில் உண்டோ உணர்ச்சி*
*உலகத்தின் மூடர்களுக்கு உண்டோ உணர்ச்சி*
*புளியிட்ட செம்பிற்குற் றம்போமோ? அஞ்ஞானம்*
*போகாது மூடருக்கென்று ஆடுபாம்பே."*[49]

உளியால் செதுக்கிய கற்சிலைக்கும், புளியிட்டுத் துலக்கும் செப்புச்சிலைக்கும் உணர்வு இருக்காது. அவற்றுக்கெல்லாம் பூசை மற்றும் பல சடங்குகள் செய்கின்ற மூடர்களுக்கும் உணர்ச்சியே கிடையாது எனப் பாம்பாட்டிச்சித்தர் சாடுகிறார். அத்தகையோர்க்கு எத்தனைபேர் தோன்றி அவர்களது மூடமதியைக் கூறி விளக்கினாலும் புரியவைத்தாலும் அவர்களால் புரிந்துகொள்ள முடியாது. உண்மையை உணராதோர் அறிவில்லாத மூடர்களே என அவர் சாடுவதனைக் காணமுடிகின்றது.

*"ஏட்டுச் சுரக்காய் கறிக்கிங் கெய்திடாதுபோல்*

*எண்திசை திரிந்துங் கதியெய்தல் இல்லையே!*

*நாட்டுக்கொரு கோயில்கட்டி நாளும் பூசித்தே*

*நாதன்பாதம் காணார்கள் என்றாடுபாம்பே.'*[50]

எட்டுத்திசைகளுக்கும் சென்று திரிந்து கோயில் குளமென அலைந்து வந்தாலும், ஒவ்வொரு நாட்டினிலும் ஒரு கோயில்கட்டிப் பூசைசெய்து வந்தாலும் இறைவனைக் காணவே முடியாது. இறைநிலையைக் காண இவை சரியான பாதைகளல்ல. இறைவனை நம் உடம்புக்குள்ளேயே காணமுடியும்; எத்தனை திசையில் தேடினாலும் அவன்பாதத்தைக் காணமுடியாது. ஏட்டுச் சுரைக்காயைச் சமைத்து உண்ணமுடியாது. அதுபோல எண்திசைகளில் சுற்றிவந்தாலும் இறைவனைக் காணமுடியாது எனக் கூறுகின்ற பாங்கினை அறியமுடிகின்றது.

### 3.11. பட்டினத்தாரும் உருவ வழிபாடு எதிர்ப்பும்

பட்டினத்தாரும் உருவ வழிபாட்டை வெறுக்கின்றார். பொதுவாகவே சித்தர்கள் அனைவருமே சிலைகளை வைத்து வணங்கும் சடங்குகளை, ஆரவாரப் பூசைகளை அறவே தேவையில்லை என்கின்றனர். பாம்பாட்டியாரின் ஒரு பாடலின் சாரத்தை இவரும் அப்படியே தனது பாடலில் தந்திருக்கின்றார்.

*''உளியிட்ட கல்லையும் ஒப்பிட்ட சாந்தையும் ஊத்தையாரப்*
*புளியிட்ட செம்பையும் போற்றுகிலேன்''*[51]

என்கிறார். சிற்பிகளின் கைகளால் உளியின் உதவியோடு செய்த கற்சிலையையும், அழுக்குப்போகவேண்டும் என்பதற்காகப் புளியிட்டுத் தேய்த்து வெளுக்கின்ற செப்புச்சிலையையும் போற்றமாட்டேன் என்கிறார். உயிரற்ற இப்பொருள்களில் ஒன்றுமில்லை என்ற தெளிந்த சிந்தனை கொண்டவராய்ப் பட்டினத்தார் இருந்துள்ளார் என்பதற்கு மேற்போந்த அவரது பாடலடிகள் சான்றாகின்றன. பட்டினத்தார்,

*''வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் வேறொருவர்க்கு*
*எட்டாத புஷ்பம் இறையாத தீர்த்தம் இனிமுடிந்து*
*கட்டாத லிங்கம் கருதாத நெஞ்சம் கருத்தினுள்ளே*
*முட்டாத பூசையன்றோ குருநாதன் மொழிந்ததுவே''*[52]

என்னும் பாடலில் செப்புத் தகட்டில் சக்கரம் வெட்டுவதும், லிங்கத்தைக் கட்டி நிலைக்கவைப்பதும், உதடுகுவித்து நாவசைத்து மந்திரம் ஒலிப்பதும், பிறர்காணும்படியாக நீராடிப் பூக்களைச் சொறிவதும் பயனற்ற செயல்களாகும். எனவே மனத்தால் செய்யும் இறைவழிபாடே சிறந்ததென்கிறார் பட்டினத்தார்.

### 3.1.2 அகத்தியரும் உருவ வழிபாடு எதிர்ப்பும்

அகத்தியரது பாடலிலும் உருவ வழிபாட்டைச் சாடும் பாங்கு

காணப்படுகிறது. உருவ வழிபாட்டினைப் போற்றுபவர்களை மூடர்கள், அறிவிலிகள் என அகத்தியர் தம் ஞானப்பாடலில் குறிப்பிடுகிறார்.

*"வாடுவார் நாமமென்றும் ரூபமென்றும்*
*வையகத்தில் கல்செம்பைத் தெய்வமென்றும்*
*நாடுவார் பூரணத்தை அறியார்மூடர்*
*நாய்போல் குரைத்தல்லோ ஒழிவார்காணே"*[53]

எனும் பாடலில் இறைவனுக்குப் பல்வேறு பெயர்களையெல்லாம் சூட்டி, பல்வேறு உருவங்களைக் கற்பித்து, அவ்வுருவங்களைக் கல்லினாலும், செம்பினாலும் செய்துவைத்து அவைதான் இறைவன் என்று நாடுபவர்கள், அச்சிலைகளிடம் போய் நாய்போல் குரைத்துப் பல்வேறு வேண்டுதல்களை முறையிடுவார்கள். பின்னர் தமது வேண்டுதல்கள் நடக்கவில்லையே என வாடுவார்கள். இவர்களனைவரும் தம் உள்ளே இருக்கும் பரம்பொருளாகிய பூரணத்தை அறியாத மூடர்களாவர் என அகத்தியர் சாடுகின்றார்.

**3.13 புறவழிபாட்டைச் சாடும் குதம்பைச் சித்தர்**

தம்முள்ளே இருக்கும் இறைவனைத் தேடுவதை விட்டுவிட்டு உருவச்சிலைகளில் போய் இறைவனைத் தேடுவதென்பது வேடிக்கையான செயலாகும் என்பது சித்தர்கள் பலரின் கருத்தாகும். உருவ வழிபாட்டினை மேற்கொள்வதென்பதும் அறிவற்ற மூடர்களின்

செயல்கள் என்பதே சித்தர்களின் ஒருமித்த முடிபாகும். அவ்வகையில் குதம்பைச் சித்தரும் உருவ வழிபாட்டைச் சாடுகிறார்.

*''கல்லினைச் செம்பினைக் கட்டையைக் கும்பிடல்*
*புல்லறி வாகுமடி குதம்பாய்*
*புல்லறி வாகுமடி''*[54]

எனக் கல்லால், செம்பினால், கட்டையால் செய்த சிலைகளை வணங்குபவர்கள் புல்லறிவாளர்களாவர். அவர்களுக்கு மற்ற அறிவு எதுவுமே இல்லை என உருவ வழிபாடு மேற்கொள்வோரைக் குதம்பைச் சித்தர் சாடுகின்றார்.

*''கோயில் பலதேடிக் கும்பிட்ட தால்உனக்கு*
*ஏயும் பலன்வருமோ குதம்பாய்*
*ஏயும் பலன்வருமோ!''*[55]

என்றும்,

*''மெய்த்தலத் தில்லாத மெய்ப்பொருள் ஆனவர்*
*பொய்த்தலத் தெய்வத்துண்டோ குதம்பாய்*
*பொய்த்தலத் தெய்வத்துண்டே''*[56]

என்றும் சுட்டுகின்றார். உடம்பே ஆலயம். அதனுள்ளேயே இருக்கின்றது மெய்ப்பொருள். அதனைக் காண்பதை விட்டுவிட்டுப் பலகோயில்களில்

சென்று தேடினாலும் அங்கெல்லாம் தெய்வத்தைக் காணமுடியாது. கோயில் பல சென்று கும்பிட்டாலும் ஒரு பலனும் விளையப்போவதில்லை என்கிறார் குதம்பைச் சித்தர். பின்வரும் பாடல்களில் அவர் மக்களைப் பார்த்து,

*''சிற்பர்கள் கட்டுந் திருக்கோயில் உள்ளாகத்*
*தற்பரம் வாழ்வதுண்டோ? குதம்பாய்*
*தற்பரம் வாழ்வதுண்டோ?''*[57]

என்றும்,

*''அன்பான பத்தர் அகக்கோயில் கர்த்தற்கே*
*இன்பான கோயிலடி குதம்பாய்*
*இன்பான கோயிலடி''*[58]

என்றும் இயம்புகின்றார். இறைநிலையைக் காண எண்ணுகின்ற அன்பான பக்தர்களுக்கு உள்ளமே கோயில் ஆகும். அதுவே இறைவன் வீற்றிருக்கும் வீடுமாகும். அதை எண்ணாமல் சிற்பிகள் கட்டிய திருக்கோயில்களில் எல்லாம் பரம்பொருளைக் காண முடியாது. பரம்பொருளை உள்ளத்திலே காணுங்கள். மற்ற இடங்களில் தேடுவது மூடச் செயல்கள், வீணான வேலைகள் என்கின்றனர் சித்தர்கள்.

*''இருந்த இடத்திலே இருந்தே அறியாமல்*
*வருந்தித் திரிவதென்னோ? குதம்பாய்*
*வருந்தித் திரிவதென்னோ?''*[59]

என்றும்,

***"காசிரா மேச்சுரம் கால்நோவச் சென்றாலும்***

***ஈசனைக் காணுவையோ? குதம்பாய்***

***ஈசனைக் காணுவையோ?"***[60]

என்றும் குதம்பைச்சித்தர் எடுத்துரைக்கின்றார். இருந்த இடத்திலிருந்தே நாம் அமர்ந்த இடத்திலிருந்தே நம் உள்ளத்தே இறையைக் காண முயல்வதை விட்டுவிட்டுக் காசி, ராமேச்சுரம் என கால்நோக வருந்திச் சென்றாலும் அங்கெல்லாம் ஈசனைக் காணமுடியாது என்கிறார். அவ்வாறு செல்வது மூடமதி என்பதைவிட வேறென்னவென்று சொல்வது என்கிறார் குதம்பைச்சித்தர்.

***"போரில் ஊசிப் பொறுக்கத் துணிதல்போல்***

***ஆரியன் தேடுதலே குதம்பாய்***

***ஆரியன் தேடுதலே."***[61]

போர்க்களத்தில் சென்று ஊசியைத் தேடினால் அவ்வளவு எளிதில் கிடைத்தவிடாது. அதுபோலத்தான் இறைவனைத் தேடுவதும். அவ்வளவு எளிதில் இறைவனை அறியமுடியாது என்கிறார். அடுத்த பாடலில் வேதனையெல்லாம் நீங்கி விடாமுயற்சியோடு மனத்தால் தியானித்துக் கொண்டே இருந்தால் இறைவனைக் காணலாம். காணமுடியும் என்கிறார் குதம்பைச்சித்தர். இதனை,

*"வேதனை நீங்கி விடாது தொடர்ந்தோரே*

*நாதனைக் காணுவர்காண் குதம்பாய்*

*நாதனைக் காணுவர்காண்"*[62]

என்னும் பாடலடிகளின்வழி அவர் உணர்த்துகின்றார்.

**3.13.1.** அறியாமையைச் சாடும் குதம்பைச்சித்தர்

*"பொய்யான சோதிடர் பொய்மொழி யாவுமே*

*வெய்ய மயக்கமடி குதம்பாய்*

*வெய்ய மயக்கமடி."*[63]

சோதிடம் என்பது பொய், அவர்கள் கூறும் அனைத்தும் பொய். அவர்கள் கூறும் பொய்யனைத்தும் கேட்கும் மானிடர்க்கு மயக்கந் தரவல்லனவாகும். எனவே மானிடரே சோதிடத்தை நம்பாதீர். சோதிடம் உங்களை முன்னேறவிடாமல் செய்துவிடும் என எச்சரிக்கிறார் குதம்பைச்சித்தர்.

*"மீளாத வியாதியில் மேன்மேலும் நொந்தார்க்கு*

*நாளேது கோளேதடி குதம்பாய்*

*நாளேது கோளேதடி"*[64]

என்னும் பாடலடிகளின் வழியே குதம்பைச்சித்தர். சோதிடத்தை வன்மையாகச் சாடுகிறார். உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கும் நோயாளிக்கு நல்லநாள், நட்சத்திரம், ராகுகாலம், எமகண்டம், குளிகை,

வாரசூலை எனப் பார்த்து அதன் பின்னர் மருத்துவமனைக்குக் கொண்டு போகலாம் என நினைப்பது மடமை. அறியாமை குடிகொண்ட மூடத்தனம். எனவே உயிருக்குப் போராடிக்கொண்டிருக்கும் நோயாளியைக் காப்பாற்றுவதுதான் முதல் கடமையே தவிர நாள் கோள் பார்ப்பது மூடத்தனம். மக்கள் பகுத்தறிவோடு சிந்தித்துச் செயல்பட வேண்டும் என்பது குதம்பைச் சித்தரின் அறிவுரையாகும்.

*''செத்தபின் சாப்பறை செத்தார்க்கு சேவித்தால்*
*சத்தம் அறிவாரடி குதம்பாய்*
*சத்தம் அறிவாரடி.''*[65]

ஒருவர் இறந்த பின்னர் மேலதாளம் கொட்டி ஒலி எழுப்புவதைச் செத்தவர் அறியப் போவதுமில்லை அது அவருக்குக் கேட்கப் போவதுமில்லை. செத்தவர்க்குச் செய்வதல்ல அது. மற்றவர்க்காகச் செய்வது என்பதைச் சொல்லாமல் சிந்திக்க வைக்கின்றார் குதம்பைச்சித்தர்.

*''தந்தைதாய் செய்வினை சந்ததிக்கு ஆமென்பார்*
*சிந்தை தெளிந்திலரே குதம்பாய்*
*சிந்தை தெளிந்திலரே.''*[66]

தாய் தந்தையர் செய்த வினை பிள்ளைகளுக்குப் போய்ச்சேரும் என்று கூறுவதில் குதம்பை சித்தருக்கு உடன்பாடில்லை. அவ்வாறு கூறுவது அறியாமை, சிந்தை தெளியாமை என்று அவர் கூறுகிறார்.

*"மெய்க்குறி கண்டு விளங்க அறியார்க்குப்*
*பொய்க்குறி ஏதுக்கடி குதம்பாய்*
*பொய்க்குறி ஏதுக்கடி."* [67]

இப்பாடலில் மெய்யான வடிவத்தைக்கண்டு விளங்க முடியாதவர்க்குக் குறிசொல்லி ஏமாற்றும் பொய்யான பிழைப்பு எதற்கு எனச் சாடுகிறார்.

*"தீட்டால் உடம்பு திறங்கொண் டிருக்கையில்*
*தீட்டென்று சொல்வ தென்னை - குதம்பாய்*
*தீட்டென்று சொல்வ தென்னை."* [68]

இப்பாடலடிகளில் குதம்பைச் சித்தர் பெண்களுக்கு மாதவிடாய் என்ற தீட்டு வந்ததால்தான் மனிதர்களே பிறப்பினை எடுக்கின்றனர் என்றும், மாதமானால் தீட்டு, தொட்டால் தீட்டு என்று கூறுவது மிகுந்த அறியாமையாகும் என்றும் கூறுகிறார். சிவவாக்கியாரைப் போலவே இவரும் இயற்கை நிகழ்வையும் தொடுவதையும் தீட்டென்று கூறும் மூடமதியாளரைச் சாடுவதனை அறிந்திட முடிகிறது.

**3.14. தொகுப்புரை**

குறிப்பிட்ட ஒரு சிலர் தம் நலன் கருதி மூடப்பழக்க வழக்கங்களை மக்களிடையே வலிந்து புகுத்தியுள்ளனர். மக்களில் பலர் அவற்றைப் பற்றி அறிவுக்கண் கொண்டு ஆய்ந்து பார்க்காமல் ஏற்றுக்கொண்டு விட்டனர். மக்களின் அறியாமையினைக் கண்டு வருந்திய சித்தர்கள்

மக்களிடையே மண்டிக் கிடக்கின்ற அறியாமையை அகற்றும் நோக்கில் பாடல்கள் பலவற்றைப் புனைந்துள்ளனர்.

மக்களை முட்டாளாக்குகின்ற பல்வேறு மூடப்பழக்க வழக்கங்களைத் தத்தம் பாடல்களின் வழியே சுட்டிக்காட்டி மக்களிடையே பகுத்தறிவுச் சிந்தனையைப் பரப்பி, விழிப்புணர்வை ஏற்படுத்தியவர் களாகச் சித்தர்கள் விளங்கியுள்ளனர் என்பது அவர்களது பாடல்கள் மூலம் புலனாகின்றது.

இயல் மூன்று

## அடிக்குறிப்பு விளக்கம்

1. சா. தங்கபிரகாசம், பாரதிதாசன் பாடல்களில் பெரியார் சிந்தனைகள், ப.61.
2. பெரியார், ஈவேராவின் சிந்தனைகள், மூன்றாம் தொகுதி, ப.1555.
3. பெரியார், உண்மை (14.2.1974), ப.1.
4. க. நாராயணன், சித்தர் சிவவாக்கியார், ப.51.
5. பெரியார் உயர் எண்ணங்கள், தொகுதி-□□, ப.15.
6. பாரதிதாசன், புகழ்மலர்கள், ப.55.
7. பாரதிதாசன், தமிழுக்கு அமுதென்றுபேர், ப.61.
8. சா. தங்கபிரகாசம், மு.கு.நூ. ப.63.
9. மேற்படி. ப.65.
10. க. நாராயணன், மு.கு.நூ, ப.60.
11. மேற்படி. ப.61.
12. மேற்படி. ப.61.
13. மேற்படி. ப.62.
14. சிவவாக்கியார் பாடல், 4.
15. மேற்படி. 508.
16. மேற்படி. 425.
17. மேற்படி. 518.
18. மேற்படி. 520.

19. மேற்படி. 494.

20. இரா. கலாவதி, சித்தர் பாடல்களில் நடப்பியல், ப.111.

21. சிவவாக்கியார் பாடல், 36.

22. மேற்படி. 33.

23. மேற்படி. 41.

24. மேற்படி. 76.

25. மேற்படி. 35.

26. மேற்படி. 130.

27. மேற்படி. 269.

28. மேற்படி. 166.

29. ஸ்ரீஞானஜோதி சம்பங்கி, சித்தர் சிவவாக்கியார் பாடல், ப.272.

30. சிவவாக்கிபார் பாடல், 193.

31. மேற்படி. 225.

32. மேற்படி. 195.

33. மேற்படி. 212.

34. மேற்படி. 249.

35. மேற்படி. 313.

36. மேற்படி. 347.

37. மேற்படி. 423.

38. மேற்படி. 465.

39. மேற்படி. 460.

40. ஸ்ரீஞானஜோதி சம்பங்கி, மு.கு.நூ.ப.255.

41. மேற்படி. ப.255.

42. சிவவாக்கியார் பாடல், 478.

43. மேற்படி. 473.

44. மேற்படி. 507.

45. ஸ்ரீஞானஜோதி சம்பங்கி, மு.கு.நூ.ப.256.

46. சிவவாக்கியார் பாடல், 486.

47. மேற்படி. 480.

48. பாம்பாட்டிச்சித்தர் பாடல், 100.

49. மேற்படி, 92.

50. மேற்படி. 95.

51. பட்டினத்தார் பாடல், 61.

52. மேற்படி. 50.

53. அகத்தியர் ஞானப் பாடல், 10

54. குதம்பைச்சித்தர் பாடல், 138.

55. மேற்படி. 176.

56. மேற்படி. 178.

57. மேற்படி. 179.

58. மேற்படி. 180.

59. மேற்படி. 181.

60. குதம்பைச்சித்தர் பாடல், 174.

61. மேற்படி. 178.

62. மேற்படி. 180.

63. மேற்படி. 210.

64. மேற்படி. 191.

65. மேற்படி. 193.

66. மேற்படி. 194.

67. மேற்படி. 211.

68. மேற்படி. 192.

# சித்தர் பாடல்களும் தனிமனித மேம்பாடும்

## 4.0. முன்னுரை

சித்தர்கள் பலரும் தனிமனித மேம்பாட்டை வலியுறுத்துகின்றனர். தனிமனித ஒழுக்கமே சமுதாய மேம்பாட்டுக்கு வழிவகுக்கும் என்பது சித்தர்களின் முடிபாகும். மக்களாகப் பிறந்த ஒவ்வொருவரும் தத்தம் உடம்பைப் பேணிக்காப்பது இன்றியமையாததாகும் எனச் சித்தர்கள் அறிவுறுத்துகின்றனர். இளமையும், யாக்கையும், செல்வமும் நிலையுடையனவல்ல என்னும் பேருண்மையைச் சித்தர்கள் வெளிப்படுத்தியுள்ளனர். சித்தர்களது பாடல்களின் துணைகொண்டு தனிமனித மேம்பாட்டிற்கான வழிமுறைகளை இவ்வியல் விளக்குகின்றது.

## 4.1. தனிமனித மேம்பாடு

எந்த ஒரு மனிதனுக்கும் தேவையானது அறிவு, ஆற்றல், மனத்திட்பம், இரக்ககுணம், அன்பு, வள்ளல் தன்மை, ஒழுக்கம், பெரியோரை மதித்தல் போன்றனவாகும். மனித வாழ்க்கைக்குத் தேவையான உயர்ந்த குணங்கள் கொண்ட ஒருவன் தானும் மேன்மையடைவான். தன்னைச் சார்ந்தோரையும் மேன்மையடையச் செய்வான். ஒவ்வொரு மனிதரும் மேம்பாடு அடையும் குணங்களை வளர்த்துக் கொள்ளும்போது சமுதாயம் வளம்பெறும். நாடும் நலம்பெறும். சித்தர் பாடல்களில் தனிமனித மேம்பாட்டுச் சிந்தனைகள் பரவலாகக் காணக்கிடக்கின்றன.

### 4.2 உடலோம்பலில் சித்தர்களின் பங்கு

மனிதராகப் பிறந்தவர்கள் நோய்நொடியின்றி நீண்ட நாட்கள் வாழ்வதற்கு உடலைப் பேணிக்காப்பது இன்றியமையாததாகும். சுவர் இருந்தால்தான் சித்திரம் வரையமுடியும் என்பது பழமொழி. உடல் நோய்நொடி இல்லாமல் நலமாக இருந்தால்தான் எதனையும் சாதிக்க முடியும்; உள்ளத்திலே வீற்றிருக்கின்ற இறைவனைக் காணமுடியும் என்பது சித்தர்களின் கருத்து. திருமூலர்,

*''ஊனுக்குள் ஈசனைத் தேடும் மருளற்காள்*
*தேனுக்குள் இன்பம் சிவப்பா கருப்பா*
*தேனுக்குள் இன்பம் சிறந்திருந் தாற்போல்*
*ஊனுக்குள் ஈசன் ஒளிந்திருந் தானே''*

என உடலை ஓம்பவேண்டியதன் முக்கியத்துவத்தைச் சுட்டுகின்றார். இப்பாடல் திருமந்திரத்தில் இடம்பெறவில்லை என்று த.ந.கணபதி சுட்டிக்காட்டுகிறார்.[1]

'ஆலயத்தின் பல்வேறு பகுதிகளும், அமைப்புகளும் மனித உடம்பை அடிப்படையாகக் கொண்டே அமைக்கப்படுகின்றன. கோயிலின் அடித்தளம் மனிதனின் பாதங்களைக் குறிக்கிறது. ஜங்கம் என்பது கால்களைக் குறிக்கிறது. பந்தனம் என்பது கோயிலின் ஒட்டுமொத்த கட்டுமானத்தையும் பிணைக்கிறது. கோபுரத்தின் உடல் பகுதியும் அதன்

இரு பக்கங்களும் கழுத்தையும் தோள்களையும் குறிக்கின்றன. கோபுரத்தின் உச்சிப்பகுதியான சிகரம் தலையின் உச்சிப்பகுதியைக் குறிக்கிறது. இந்தக்கருத்தை ஆமோதிக்கின்ற பாடலாக,

*'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்*
*வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்*
*தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்*
*கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே'*

(திருமந்திரம், மந்.1823)

என்னும் திருமூலரின் பாடல் அமைந்துள்ளது.

*''உடம்பை மலம் என்று எண்ணாமல் தலம் என்று மதிக்க வேண்டும்''*[2]

என்று வலியுறுத்துகிறார் திருமூலர். எனவே உள்ளமே கோயில் (கோ+இல்) இறைவன் வாழும் இல்லம். உடம்பே ஆலயமாக விளங்குவதால் மானிடர் இந்த அரிய உடம்பை வீணாக அழியாமல் போற்றிப் பாதுகாக்க வேண்டுமென்று திருமூலர் வலியுறுத்துகின்றார்.

*''காயப் பைக்குள் நின்ற கள்வன்''*[3]

என்கின்றார் திருமூலர்.

*"கோயில்பள்ளி ஏதடா? குறித்துநின்ற தேதடா?*
*வாயினால் தொழுதுநின்ற மந்திரங்கள் ஏதடா?*
*ஞானமான பள்ளியில் நன்மையாய் வணங்கினால்*
*காயமான பள்ளியில் காணலாம் இறையையே"*[4]

என வாயினால் மந்திரங்கள் கூறியெல்லாம் இறைவனைக் காணமுடியாது. காயமான (காயம்-உடம்பு) உடம்பிலேயே இறைவனைக் காணமுடியும் என்பது சிவவாக்கியாரின் கருத்தாகும்.

மேலும் 'உரியிலே தயிர் இருக்க ஊர்புகுந்து வெண்ணெய் தேடவேண்டாம். அவ்வாறு தேடினால் அது அறிவற்றவர்களின் செயல்களாகத்தான் இருக்கும் என்கிறார் சிவாவக்கியார்'.[5]

எனவே உடம்புக்குள்ளேயே இறையைக் காணமுடியும், வெளியில் எங்கும் தேடி அலைய வேண்டாம், இறைவன் வீற்றிருக்கும் இவ்வுடம்பைப் போற்றிக் காக்கவேண்டும் என்பதே சிவவாக்கியாரின் சிந்தனையாக வெளிப்படுகின்றது.

*"உடம்பு என்கிற உருவரங்கமே இறைவனின் திருவரங்கம்"*[6]

என்னும் உண்மையை மக்கள் உணரவேண்டும் என வலியுறுத்துகிறார்.

கொங்கணச் சித்தரும் வாலைக்கும்மியில் 24ஆவது பாடலில் உடம்பைப் பாதுகாப்பதன் இன்றியமையாமையை,

*"ஊத்தைச் சடலமென் றெண்ணாதே இதை*
*உப்பிட்ட பாண்ட மென்றெண் ணாதே*
*பார்த்த பேருக்கே ஊத்தையில் லையிதைப்*
*பார்த்துக்கொள் உன்றன் உடலுக் குள்ளே"*[7]

எனக் காட்டுகின்றார். எனவே உடம்பை ஊத்தைச் சடலம் என்றும், உப்பிட்டபாண்டம் என்றும் நினைக்கவேண்டாம். உடம்பின் உண்மை இரகசியத்தை உணர்ந்தவர்கள் போற்றிப் பாதுகாப்பர் என்று கொங்கணச் சித்தர் கூறுகின்றார்.

உடலை வளர்ப்பதன் மூலம் உயிரை வளர்க்க வேண்டும் என்கின்றார் திருமூலர். உடம்பை முன்னம் இழுக்கென்று எண்ணியிருந்து, பின் தெளிவு ஏற்பட்ட நிலையையும் அவர் குறிப்பிடுகின்றார். இதனை,

*"உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே*
*உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"*[8]

என்றும்,

*"உடம்பினை முன்னம் இழுக்கென்று இருந்தேன்*
*உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்*
*உடம்புளே உத்தமன் கோயில்கொண் டானென்று*
*உடம்பினை யானிருந்து ஓம்பு கின்றேனே"*[9]

என்றும் வரும் பாடலடிகள் கொண்டு உணரலாம்.

இதே கருத்தைப் பாம்பாட்டிச் சித்தரும் பகர்கிறார்.

***"ஊத்தைச் சடத்தினைப் புடமே இடுவோம்."***[10]

உடம்பானது அழுக்குப் படலமாகவும், ஊத்தைச் சடலமாகவும் இருந்தாலும் அதனைப் பாதுகாத்து இறைவன் வீற்றிருக்கும் கோயிலாக மாற்றவேண்டும் என்று அவர் கூறுகின்றார்.

சித்தர் பலரும் உடம்பினைப் போற்றிப் பாதுகாக்க வேண்டுமென்று வலியுறுத்துகின்றனர். மக்கள் தமது திறமைகளை, சாதனைகளை வெளிப்படுத்துவதற்கு உடல் வளமும் நலமும் உடையதாக இருக்க வேண்டும் என்பதும் சித்தர்தம் கருத்தாகும்.

**1. உடலைக் கட்டுடன் வைக்கும் யோகம்**

'ஆன்மாவைப் பரமான்மாவோடு ஒன்றுபடுத்தும் முயற்சி யோகமாகும். யோகம் என்னும் சொல் 'யூஜ்' என்னும் வடசொல்லினின்று பிறந்ததாகும். அச்சொல்லுக்குச் சேர்தல் அல்லது இணைதல் என்பது பொருளாகும். நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பதற்கேற்ப உடல்நலத்தைப் பேணும் வகையில் இவ்யோகத்தை மக்கள் கடைப்பிடிக்கின்றனர். நாளும் ஓயாது இயங்குவதால் வலுவிழக்கும் உடலுக்கு வலிவையும் செயலாற்றும் திறத்தையும் அளிப்பதாகவும் அமைகிறது. உடலை இளமையாகவும் கட்டுடனும் வைத்துக்கொள்ளவும் இது பயன்படுகிறது.'[11]

‘வாழ்நாள் முழுவதும் நோய் வராமல் நல்லுடல் பெற்று நல்வாழ்வு பெறவேண்டுமானால் அதற்குரிய ஒரேவழி யோகாசன முறையைப் பின்பற்றுவதாகும். நமது உடம்பில் பல முக்கியக் குழலற்ற சதைக் கோளங்கள் (கிளான்ட்ஸ்) உள்ளன. அவற்றிலிருந்து வெளிப்படும் ஆர்மோன்கள்தான் ரத்தத்துடன் கலந்து நோய்க்கிருமிகளைக் கொல்லுகின்றன. இவை ஒழுங்காக வேலைசெய்தால் நமக்கு நோயே வருவதில்லை. இந்தச் சுரப்பிகள் நன்கு வேலை செய்வதற்குரிய சக்தியைக் கொடுக்கக் கூடியது யோகாசனமே என்று ஆசனா ஆண்டியப்பன் குறிப்பிடுவதாகக் கலாவதி இயம்புகின்றார்.’[12]

யோகப் பயிற்சிக்கும் தேகப்பயிற்சிக்கும் இடையே பல்வேறு வேறுபாடுகள் உள்ளன.

**யோகப்பயிற்சி**

1. மூளையைப் பயன்படுத்தி வேலை செய்பவர்களுக்கு யோகாசனம் சிறந்தது. எனவே யோகாசனத்தால் மூளை வலுப்பெறும்.

2. யோகப் பயிற்சியினால் உடலில் நோய்த்தடுப்புச் சக்தி அதிகமாகும்.

3. யோகப் பயிற்சியினை 15 மணித்துளி செய்தாலே போதும்.

4. எந்த வயதிலும் யோகப்பயிற்சி செய்யலாம்.

5. யோகப் பயிற்சிக்குக் கருவிகள் தேவையில்லை.

6. யோகப்பயிற்சி வெளித்தசை மற்றும் உள்ளுறுப்புக்களைப் பலப்படுத்தும்.

7. வேலை மற்றும் கவலையால் ஏற்படும் பலவீனத்தை யோகாசனப் பயிற்சி சரிசெய்கின்றது.

**தேகப்பயிற்சி**

1. தேகப் பயிற்சியினால் உடல் வலுப்பெறுகிறது.

2. தேகப் பயிற்சிக்கு நோய்தடுக்கும் சக்தி கிடையாது.

3. தேகப் பயிற்சியினை மணிக்கணக்கில் செய்யவேண்டும்.

4. தேகப் பயிற்சிக்குக் கருவிகள் தேவை.

5. தேகப் பயிற்சியினால் சக்தி விரயம் ஆகும்.

6. தேகப் பயிற்சியினால் உடல் உறுப்புகள் முறுக்கேறுகின்றன.

7. மாமிசம் போன்ற அதிக உணவு தேவை. கோபம் மற்றும் மூர்க்க குணத்தை ஏற்படுத்தும்.

இவ்வாறு யோகப் பயிற்சிக்கும் தேகப் பயிற்சிக்கும் உள்ள வேறுபாட்டினைக் கலாவதி வகைப்படுத்துவதனைக் காணமுடிகின்றது.

### 4.3. மனித உடலும் ஐம்பூதமும்

ஐம்பூதங்களின் சேர்க்கையினால், மனித உடல் உருவாகின்றது எந்தெந்த உறுப்புகள் எந்தெந்தப் பூதங்களை உணர்த்துகின்றன என்று சித்தர்கள் கூறியதனை வரிசைப்படுத்துகிறார் த.ந. கணபதி.

1. ''எல்லா உறுப்புகளையும் கொண்ட மனித உடல் விண்ணையும் மண்ணையும் உணர்த்துகிறது.

2. மனித உடலின் உட்பகுதி - பூமிக்கும் நட்சத்திரங்களுக்கும் உள்ள இடைவெளியை உணர்த்துகின்றது.

இதயம்-தீ (நெருப்பு)

இரத்தம், ஈரல் - நீர்

இரத்தக்குழாய் மற்றும் மூச்சுக்குழாய்களில் இயங்கும் மூச்சுதான் காற்று.

இவ்வாறு தீ, நீர், காற்று இம்மூன்றும் உள்வெளியில் உள்ளன.

உடல்தசை, நுரையீரல் - மண்(நிலம்)

தலை - வானம் (ஆகாயம்)''[13]

''பூமியைப் போலவே நமது உடலும் பஞ்ச பூதங்களால் ஆனவை.

1. நிலம் (மண்) - எலும்பு, மாமிசம், தோல், நரம்பு, ரோமம் (முடி).

2. நீர் - உமிழ்நீர், சிறுநீர், வியர்வை, இரத்தம், சுக்கிலம்.

3. நெருப்பு(தீ) - பசி, தாகம், தூக்கம், உடலுறவு இவை நிகழும்போது உடலில் வெப்பம் உண்டாவதை அறியலாம்.

4. வாயு (காற்று) - கிடத்தல், நடத்தல், இருத்தல், ஓடல், தத்தல் (உடம்பில் ரத்தம் மூச்சுக்குழாய்களில்).

5. ஆகாயம் (வான்) - ஆசை, பயம், வெட்கம், மோகம், துவேசம்.

இவ்வாறு நமது உடல் பஞ்ச பூதங்களால் ஆனது''[14]

என்று பொருத்திக் கூறியுள்ள பாங்கினை அறியமுடிகின்றது.

**4.4. சித்தர்களும் மருத்துவப் பார்வையும்**

சித்தர்கள் மனித உடலில் செயல்படுகின்ற அத்தனை உறுப்புகளைப் பற்றியும் ஆராய்ந்து கூறியுள்ளனர். மனிதனுக்கு வரக்கூடிய நோய்களை மூன்று பிரிவுகளில் அடக்கிவிடுகின்றனர்.

**1. வாதம்**

'வாதமென்பது வாயுவின் தன்மையால் இயங்குவது. வாதம் அதிகமானால் கை, கால் செயல்படாமல் போய்விடும். எனவே வாயு சம்பந்தமானது வாதம். இவ்வாத நோயினைக் குறைக்க வேண்டுமானால் வாயுவை அதிகப்படுத்தும் பொருட்களை உண்ணுதலைத் தவிர்க்க வேண்டும்.

**2. பித்தம்**

பித்தம் உஷ்ணத்தின் தன்மையால் இயங்கும். பித்தமென்பது உடலில் கல்லீரல் சுரக்கும் ஒருவித நீராகும். இது அதிகமாகச் சுரந்தால் தலைசுற்றல், மயக்கம், வாந்தி போன்றனவற்றை ஏற்படுத்தும். இதனைக் கட்டுப்படுத்தப் பித்தம் தொடர்பான பொருட்களைச் சாப்பிடுதலைத் தவிர்க்க வேண்டும்.

**3. சிலேத்துமம் அல்லது கபம் (சளி)**

இது நீரின் தன்மையால் இயங்கும். குளிர்ச்சி சம்பந்தமானது சிலேத்துமம்.

'மேலே கூறப்பெற்ற வாதம் பித்தம் சிலேத்துமம் ஆகிய இவற்றில் எவை மிகினும் குறையினும் அவை சம்பந்தமான வியாதிகளை உண்டுபண்ணும்'[15] என்று சித்தர்கள் கூறியுள்ளனர்.

**4.4.1. மனித உடலில் இயங்கும் வாயுக்கள்**

மானிட உடலோ அல்லது உலகின் எந்த உயிரினமோ இயங்குவதற்கு முக்கிய அடிப்படைக் காரணியாக இருப்பது உயிர். இதனை வடமொழியில் பிராணன் என்பர். 'பிராணன் என்பது உயிரக வாயு (ஆக்சிஜன்). இப்பிரபஞ்சத்தில் ஆகாயம் எங்கும் நிறைந்து எல்லையற்று இருப்பதைப்போல் பிராண சக்தியும் எங்கும் நிறைந்து எல்லையற்றதாய் இருக்கின்றது.'[16]

> ***"நாம் இயல்பாகச் சுவாசிக்கும் காற்றில் 20.96 சதவீதம் பிராணவாயு உள்ளது. ஒரு மூச்சில் எடுத்துக் கொள்ளும் பிராணன் 45 சதவீதம் மட்டுமே. ஆழ்ந்து சுவாசித்து உள்நிறுத்தினால் மேலும் நாம் பிராணனை எடுத்துக்கொள்ள இயலும். எனினும் இப்பிராணன் உடலில் உட்புகவும் வெளிவரவும் மூலாதாரத்தில் உள்ள உயிர்ப்புக் காற்றைப் பயன்படுத்த வேண்டியிருக்கிறது"***[17]

என்று சி. வேலுச்சாமி குறிப்பிடுவதாக இரா. கலாவதி சுட்டுகின்றார்.

சித்தர்கள் தங்களது ஆராய்ச்சிகளின் மூலமாக மனித உடம்பில் பத்து வகையான வாயுக்கள் இயங்கிக் கொண்டிருப்பதாகக் குறிப்பிடுகின்றனர். மேலும், அவ்வாயுக்களின் வேலைகளையும் வரிசைப்படுத்திக் கூறுகின்றனர்.

1.“**பிராணன்** - இதனைத் தமிழில் உயிர்க்காற்று என்பர். இது இதயத்திலிருந்து சலித்துக் கொண்டே பசி, தாகங்களை உண்டாக்கும்.

2. **அபானன்** - இதனைத் தமிழில் மலக்காற்று என்பர். இது உடலின் கழிவுப் பொருட்களை வெளித்தள்ளும்.

3. **உதானன்** - இதனை ஒலிக்காற்று என்பர். இது உடலில் இருந்து உஸ்வாசம், நிஸ்வாசம் செய்யும்.

4. **வியானன்** - இதனைத் தொழில்காற்று என்பர். இது இரத்தத்தை எங்கும் பரவச் செய்து உடலைத் தாங்கி நிற்கும்.

5. **சமானன்** - இதனை நிரவுக் காற்று என்பர். இது நாம் உண்ட உணவுவகைகளைச் செரிக்கச் செய்யும்.

6. **நாகன்** - இதனைக் கொட்டாவிக் காற்று என்பர். இது தேகத்தை முறுக்கிக் கொட்டாவி விடச் செய்யும்.

7. **கூர்மன்** - இதனை விழிக்காற்று என்பர். இது விக்கலையும் ஏப்பத்தையும் உண்டாக்கும்.

8. **கிருகரன்** - இது தும்மலை உண்டாக்கும். இதனைத் தும்பக் காற்று என்பர்.

9. **தேவதத்தன்** - இது சிரித்தல், சோகம் முதலியவற்றை உண்டாக்கும். இதனை இமைக்காற்று என்பர்.

10.**தனஞ்செயன்**- இதனை வீங்கல் காற்று என்பர். இது உடலில் பிராணன்(உயிர்) நீங்கியபின் தேகத்தில் ஐந்து நாட்கள் தங்கியிருந்து சதைவீங்கி வெடித்து வெளிச்செல்லும்.”[18]

இவ்விதம் பத்து வகையான வாயுக்கள் மனித உடம்பில் இயங்கி மேற்கண்ட செயல்களையெல்லாம் செய்துகொண்டிருக்கின்றன என்று சித்தர்கள் ஆராய்ந்து கூறியிருக்கின்றனர். மக்கள் இவற்றையெல்லாம் அறிந்து தங்களுடைய உடல் உறுப்புகளையும் மனத்தையும் வளப்படுத்தி, நலமுடன் வாழ வேண்டும் என்ற நல்லெண்ணத்தில் இவ்வாறு கூறிவிட்டுச் சென்றுள்ளனர் என்பது தெள்ளத் தெளிவாகிறது.

**44.2 மனம் - பற்றிச் சித்தர்கள் கூறுவன**

உடலைப் பாதுகாக்க வேண்டுமென்று சித்தர்கள் வலியுறுத்துகின்றனர். அவ்வுடலைப் பேணிப் பாதுகாப்பதில் முக்கியப் பங்கு வகிப்பது மனமேயாகும். எண்ணங்களின் பிறப்பிடமாக விளங்கும் மனத்தைச் செம்மைப்படுத்தவேண்டும். நல்ல எண்ணங்களே மனத்திலிருந்து உதிக்க வேண்டும் தீய எண்ணங்களை விலக்க வேண்டும். எப்போதும் மனத்தைத் தூய்மையாய் வைத்துக் கொள்ளவேண்டும்.

மனத்தைத் தேவையற்ற சிந்தனைகளில் அலையவிடக்கூடாது. எனவே மானிடர் தம் மனத்தை அடக்கினால் ஆன்மநிலை கிட்டும் என்று

சித்தர்கள் தம் பாடல்களில் வலியுறுத்திக் கூறியுள்ளனர். இதனை,

*''மனமென்னும் மாடடங்கில் தாண்டவக்கோனே - முத்தி*
*வாய்த்ததென்று எண்ணேடா தாண்டவக் கோனே''*[19]

என்ற இடைக்காட்டுச் சித்தரின் பாடல்வழி அறிய முடிகின்றது. அவர் மனத்தை மாடாக உருவகித்து, கட்டுத்தறிக்குள் அடக்கப்படாத மாடு அருகிலுள்ளோர்க்கு ஊறு செய்வதுபோலக் கட்டுப்பாடு இல்லாத மனமும் பிறருக்குத் தீங்கினை விளைவிக்கும் என்று அறிவுறுத்துகின்றார்.

*'மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டாம்*
*மனமது செம்மையானால் வாயுவை உயர்த்த வேண்டாம்*
*மனமது செம்மையானால் வாசியை நிறுத்த வேண்டாம்*
*மனமது செம்மையானால் மந்திரம் செம்மை யாமே'*[20]

என்று அகத்தியரும் மனச்செம்மையால் ஏற்படும் பலன் குறித்து விளக்குகிறார்.

எனவே புற அழுக்கைப் போக்கும் மனிதன் அக அழுக்கையும் அறவே நீக்கி வாழ்வானானால் ஆன்மநிலையினை அடைந்து ஆனந்தமாக வாழமுடியும் என்பது சித்தர்களின் முடிவாகும்.

மனதை ஒருநிலைப் படுத்தியபின் ஒன்றைத் திரும்பத்திரும்ப நினைக்கும்போது நினைத்தது நடந்துவிடும் என்ற கருத்தினை ஓர் உவமை மூலம் உணர்த்துகின்றார் சிவவாக்கியார்.

*''கடலிலே திரியும்ஆமை கரையிலேறி முட்டையிட்டுக்*
*கடலிலே திரிந்தபோது ரூபமான வாறுபோல்''*[21]

என்பார். இதே கருத்தை,

*''கருக்கொண்ட முட்டைதனைக் கடல்ஆமை தான்நினைக்க*
*உருக்கொண்ட வாறதுபோல் உனைஅடைவ தெக்காலம்?*[22]

எனப் பத்திரகிரியாரும் குறிப்பிடுகின்றார். கடலில் வாழும் ஆமையானது முட்டையிடுங் காலத்தில் கடற்கரை மணற்பரப்பில் வந்து குழிதோண்டி முட்டையைப் புதைத்துவிட்டுக் கடலுக்குள் சென்றுவிடும். பின்னர் அந்த முட்டை பற்றிய நினைவிலேயே அது இருக்கும். குறிப்பிட்ட நாள் கழிந்தபின் மணலில் புதைத்த முட்டையிலிருந்து ஆமைக்குஞ்சு வெளிவந்து அது வாழத் தொடங்கிவிடும். அந்த முட்டைமீது ஆமையானது அடைகாக்க வில்லையென்றாலும் அதன் நினைவே குஞ்சுபொறிக்கவைக்கச் செய்கிறது என்று சிவவாக்கியாரும், பதிரிரகிரியாரும் மனத்துக்கு, மனம் நினைக்கும் எண்ணத்திற்கும் வலிமையுண்டு என்று மானுடர்க்குப் புரியவைக்கின்றனர்.

நெஞ்சறி விளக்கம் என்ற நூலிலும் கணபதிதாசர் இதே சிந்தனையைப் பதிவுசெய்துள்ளதாகத் த.ந. கணபதி குறிப்பிடுகின்றார்.

*"குளத்திலே கிடக்கும்ஆமை குளக்கரை முட்டையிட்டுக்*
*குளத்துநீர்க் குள்ளிருந்து குறிப்புடன் நினைக்கும்போது*
*குளத்திலே புதைத்தமுட்டை கருவுரு வானாற்போலுன்*
*உளத்திலே நாகைநாதர் உருவறிந்து உணர்வாய்நெஞ்சே!"*[23]

என்பதே அப்பாடலாகும். உடலைப் பேணிக் காக்கவேண்டியதன் இன்றியமையாமையையும் உடலில் இயங்குகின்ற வாயுக்களின் தன்மைகளையும், மனத்தினைச் செம்மைப்படுத்தி ஒரு நிலைப்படுத்தும் முறையினையும் சித்தர்கள் தமது பாடல்களின் வாயிலாகச் சொல்லிச் சென்றுள்ளனர்.

**4.5. சித்தர் பாடலும் தனிமனித ஒழுக்கமும்**

உலகில் மனிதராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் தம் வாழ்நாளில் அரிய நூல்களைப் படிக்க வாய்ப்பில்லாதவர்கள். அந்நூற்கருத்துக்களைச் செவிவழியாகக் கேட்டாவது தம் வாழ்வைச் செம்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். தனிமனித வாழ்வு சீர்மை பெற்றால்தான் நாடும் வீடும் நலம் பெறும். தனிமனித ஒழுக்கம் காக்கப்படவில்லையாயின் வாழ்வு சீரழிந்துவிடும். தனிமனித ஒழுக்கக்கேடு பால்வினை நோய்களுக்கு வித்திடும் என்று சித்தர்கள் எச்சரித்தனர். ஒழுக்கம் தவறுவதால், ஏற்படுகின்ற தீங்கினைச் சுட்டிக்காட்டியுள்ளனர். பட்டினத்தார் பொருட் பெண்டிரை நாடிச்செல்வோரை நோக்கி,

*"எத்தனைபேர் நட்டகுழி எத்தனைபேர் தொட்டமுலை*
*எத்தனைபேர் பற்றி இழுத்தஇதழ் - நித்தம்நித்தம்*
*பொய்யடா பேசும் புவியில்மட மாதரைவிட்டு*
*உய்யடா, உய்யடா உய்"*[24]

என்று அறிவுறுத்துகின்றார். மேலும் பட்டினத்தார்,

*"பொல்லா பாவக்கடலில் போகாதே!*
*கரைதெளியா இன்பக் கடலில் மூழ்காதே!*
*எல்லை மீறிய வாழ்வினை விரும்பாதே!*
*மங்கையரின் காமவலைக்கு ஏங்கி உருகாதே!*
*பொன்னாசை, மண்ணாசை, பூங்குழலார் ஆசை என்றறிந்து*
*சோராதே!*
*பால்இருக்கும் தோல்தனத்தைப் பாராதே!*
*மங்கையர்கள் காலிடுக்கை நத்திக் கரையாதே!*
*காணாததைக் கண்டால் கண்டதெல்லாம் காணாது*
*வீண்ஆவல் கொண்டு உள்மெலியாதே!*
*போகம் அதை நம்பாதே!*
*மஞ்சனையக் கூந்தல் மடவாரைக் கண்டு உருகாதே!*
*மனத்தை இங்கும் அங்குமாய் ஈடழிய விடாதே!"*[25]

என்று பாடுகின்றார். ஒருவனுக்கு ஒருத்தி என்ற எண்ணத்தை விட்டொழித்துப் பலரை அடைய ஏங்கி அலைபவருக்குப் பட்டினத்தார் விடும் எச்சரிக்கை ஏற்புடையதாகும்.

**4.5.1. பேராசையும் பெருநட்டமும்**

மனிதர்களில் ஆணுக்கும் பெண்ணுக்கும், ஆசையானது அளவோடு இருத்தல் நலம். அளவுக்கு மீறிப் போகும்போது பெருத்த ஏமாற்றத்தை ஏற்படுத்திவிடும் என்றும் எச்சரிக்கிறார் பட்டினத்தார். எனவே எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் தாங்கிக்கொள்ளக் கூடிய ஒரு மனப்பக்குவத்தினை மானிடர் பெறவேண்டும் என்பதும் சித்தரின் அவா. இதனை,

> ***“மாலைப் பொழுதில் நறுமஞ்சள் அரைத்தே குளித்து***
> ***வேலை மினுக்கிட்டு விழித்திருந்து - சூலாகிப்***
> ***பெற்றாள்; வளர்த்தாள்; பெயரிட்டாள்; பெற்றபிள்ளை***
> ***பித்தானால் என்செய்வாள் பின்”***[26]

என்று பட்டினத்தார், இப்பாடலில் அளவுக்கதிகமான ஆசைகளையும், கற்பனைகளையும் மனத்துள் வகுத்துக்கொண்டு வாழும் பெண்களுக்கு அறிவு புகட்டுகின்றார். திருமணம் ஆன புதிதில் மஞ்சள் அரைத்துக் குளித்துத் தன்னை ஒப்பனை செய்துகொண்டு கணவனோடு இணைந்து சூலாகிய கரு உருவாகிப் பத்துமாதம் கழித்து மகவைப்

பெற்றெடுக்கின்றாள். தான் பெற்ற பிள்ளை பைத்தியமாகி விட்டால் அப்பெண்மணி தானும் பைத்தியமாகிவிடுவாள் அல்லது தற்கொலை செய்து கொண்டு இறந்து விடுவாள் அல்லது வாழ்க்கையை அடியோடு வெறுத்துவிடுவாள். இஃது உலக இயற்கை.

இந்த நிலைக்கு எவருமே ஆளாகக் கூடாது என்ற எண்ணம் பட்டினத்தாருக்குப் பிறந்திருக்கிறது. எனவே பிள்ளைகள் மீதும் மற்ற எப்பொருள்கள் மீதும் அளவு கடந்த ஆசைகளை உருவாக்கிக் கொள்ளாதீர்கள். அதுவே உங்களை ஆபத்தில் தள்ளிவிடும் என்ற உளவியல் சார்ந்த சிந்தனையை மனித இனத்திற்கு வழங்கியுள்ளார்.

*“இருப்பதுபொய் போவதுமெய் என்றெண்ணி நெஞ்சே*
*ஒருத்தருக்கும் தீங்கினை உன்னாதே!-பருத்ததொந்தி*
*நம்மதென்று நாமிருப்ப! நாய் நரிகள், பேய்கழுகு*
*தம்மதென்று தாமிருக்கும் தாம்.”*[27]

நீண்ட நாள் வாழ்வோம் என்பது பொய், இறப்பதே மெய். பருத்த உடம்பும், பெருத்த வயிறும் நம்முடையதென்று நினைத்து ஆசையாசையாய் வளர்ப்பீர்கள். ஆனால் எங்கு இறப்போம் என்று எவருக்கும் தெரியாது. ஆசையாய் வளர்க்கும் உடலை நாய்களும் நரிகளும், பேய்களும், கழுகுகளும், தீயும், மண்ணும், புழுக்களும் தம்முடையதென்று நினைத்துக் கொண்டிருக்கின்றன என்பதனை மறந்துவிடாதீர்கள் என்று பட்டினத்தார் உணர்த்துகின்றார்.

### 4.6. நல்லுணர்வுகளை வளர்க்கும் சித்தர்களின் உள்ளுணர்வுகள்

ஒவ்வொரு தனிமனிதரும் மனதளவில் நலமுடையவராக இருப்பாரானால் சமுதாயமும் இந்த நாடும் நலம்பெறும் என்றெண்ணிய சித்தர்கள் தங்களது உள்ளுணர்வுகள் மக்களை நல்வழிப்படுத்துகின்ற நல்லுணர்வுகளாக இருக்கவேண்டும் என்று கருதியே பலநற் கருத்துக்களை வழங்கிவிட்டுச் சென்றுள்ளனர். அறியாமையில் உழல்பவர்கள் அறியாமையில் இருந்து விடுபடவும் தவறு செய்பவர்கள் திருந்தி வாழவும், தீங்கிழைப்போரால் பிறர்படும் துன்பங்களை எடுத்துக்காட்டித் தீங்கிழைப்பவர்களை நல்வழிப்படுத்துவதிலும் சித்தர்கள் ஈடுபட்டனர். மேலும், மக்கள் பொய்கூறுதல், கருமிகளாக இருத்தல், நேர்மைக்கு மாறாக நடத்தல், சூது, கொலைபுரிதல் போன்றவற்றிலிருந்து திருத்தி நல்வாழ்வு வாழ, சமுதாயம் மலரச் சித்தர்கள் பெரும் பணியாற்றி வந்தனர்.

மக்கட் சமுதாயம் நல்வழியில் செல்லவும், நல்லுணர்வுகளை வளர்த்துக் கொள்ளவும் சித்தர் பாடல்கள் பெரிதும் துணைபுரிகின்றன. அகத்தியச் சித்தர்,

*''சத்தியமே வேண்டுமடா மனித னானால்*
*சண்டாளஞ் செய்யாதே தவறிடாதே*
*புத்திகெட்டுத் திரியாதே; பொய்சொல் லாதே;*
*புண்ணியத்தை மறவாதே பூசல் கொண்டு*

*கத்தியதோர் சள்ளிட்டுத் தர்க்கியாதே*

*கர்மி யென்று நடவாதே''*[28]

எனப் பாடும்பாடலில் மனித அறத்தைப் போதிப்பதனை அறியமுடிகின்றது. மனிதனாகப் பிறப்பவன் சத்தியத்தைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும், உண்மையாய் நடந்திட வேண்டும்; முறைதவறி நடக்கக்கூடாது; பொய் சொல்லக் கூடாது; புத்திகெட்டுத் திரியக்கூடாது; புண்ணியம் செய்வதை மறக்கக்கூடாது; எவருக்கும் எதையும் கொடுத்துதவாத கருமியாக வாழக்கூடாது என அகத்தியச்சித்தர் கூறும் அறிவுரை போற்றுதற்குரியதாகும்.

''இதிகாச நூலான இராமாயணத்தில் தரசரதன், இராமன், இராவணன், அரசன், முனிவர், தேவர், அரக்கன் என்று நாள்தோறும் பகையாய்த்தானே அந்நூலில் பாடப்பட்டுள்ளது. நாலுவேதம், ஆறுசாத்திரம், தர்மம், அதர்மம், குரு, சீடர் என்றெலாம் கூறியிருப்பது சிலர் வயிறு பிழைப்பதற்காகத்தான்''[29] என்று புரட்சியான கருத்துக்களை அகத்தியச்சித்தர் பாடலில் காணமுடிகின்றது. எனவே சாதாரண மனிதனும் உண்மைநிலையைச் சிந்திக்க, விழிப்புணர்வு பெற அகத்தியச்சித்தர் பாடல் துணைநிற்பதனைக் காண முடிகின்றது.

*''பதறாதே! பாவிகளின் சொற்கேளாதே! யாரிடமும் வீண்பேச்சு*

*பேசாதே! எவரிடமும் பகைகொளாதே! எவரையுமே*

***ஏளனமாகப் பேசாதே! சினங்காதே! எந்நேரமும் உறங்கிடாதே! உலகத்தில் நடப்பனவற்றை அறிந்து, வென்று, தெளிந்து பின்பு உலகத்தோடு ஒத்துவாழ்! காரியத்தைக் கருத்தில் கொள்''***[30]

என்றெல்லாம் மானிடர்க்குக் கூறும்போது சித்தர்க்கு மனிதர்மீதுள்ள பற்றும் அவர்தம் உள்ளுணர்வும் கண்ணாடியெனப் புலப்படுகின்றன. இவ்வுணர்வுகளை மக்கள் புரிந்து நடந்து பின்பற்றினால் சாதனையாளர் களாகவும், நல்லதொரு சமுதாயத்தைப் படைப்பவர்களாகவும் ஆகமுடியும் என்பது சித்தரின் துணிவான முடிவாகும்.

உலகில் மக்கள் பல்வேறு மதங்களில் சிக்கித் தவிப்பதைப் பார்க்கிறோம். அதனால் பல்வேறு தெய்வங்களும், மதப்பூசல்களும் உருவாகின்றன. 'தெய்வம் உண்டென்றும், இந்த உலகுக்கெல்லாம் ஒரே கடவுள்தான் என்றும் இருக்கவேண்டும் என்று பட்டினத்தார் வலியுறுத்துகிறார். மேலும் அவர் பசித்தோர் முகம் பார்க்கவேண்டும் என்றும் நல்லறமும் நட்பும் நன்றென்று எண்ணவேண்டும் என்றும், செல்வத்தையெல்லாம் பெரும்பொருட்டாக எண்ணக்கூடாது'[31] என்றும் கூறுகின்றார்.

பட்டினத்தார் ஞானம் நூறு என்ற பகுதியில் பல நல்லுணர்வுகளை வளர்க்கும் அறிவுரைகள் பலவற்றை வழங்குகின்றார். அவை

*"இருவினைக்கு ஆளாகாதே! என் உடைமை என எண்ணாதே!*
*பெருகு சினங்கொண்டு பினற்றாதே! ஓடி அலையாதே!*
*மயங்கித் திரியாதே! பொருளுடைமை நம்பாதே!*
*பொய் வாழ்வை விரும்பாதே! இருட்டு உறவை நம்பி இருக்காதே!*
*வீண் ஆவல் கொள்ளாதே! கண்டித்து ஓடாதே!*
*ஒன்பதுவாய்க் கூட்டை உறுதியென்று நம்பாதே!*
*பாக்கியத்தைக் கண்டு மகிழாதே!*
*தாக்கும் இடி வந்தால் சலியாதே!*
*திருட்டுமன வண்டருடன் கூடாதே!*
*கொள்ளைக்கு உட்பட்டுக் குடிகேடரோடு இருந்து*
*கள்ளக் கருத்தால் கருதாதே!*
*எவ்வினைகள் வந்தாலும் ஏங்காதே!*
*சற்றும் இளையாதே"*[32]

என்று பட்டினத்தார் அறிவுறுத்துகின்றார். எளிமையும், இனிமையும், பொருட்செறிவும் நிறைந்த அவரது உள்ளுணர்வுகளை மானுடர் புரிந்துகொள்ள வேண்டும், புரிந்துகொண்டு மானிட இனம் தழைக்க வேண்டும்.

சித்தர்கள் மானுட உடம்பைக் காற்றடைத்தபை, நாறும் உடம்பு, புழுக்கூடு, ஊற இறைக்கின்ற உப்பிட்ட பாண்டம், ஓட்டைத் துருத்தி,

ஊன்பொதிந்த உடம்பு என்று கூறினும் அதனைப் பேணாமல் விட்டு விடவேண்டும் என்று கூறுவதில்லை. பேணிக்காக்கவேண்டும் என்றே வலியுறுத்துகின்றனர்.

*''கூடிய பொய்களைச் சொல்லாதே பொல்லாக்*
*கொலை களவுகள் செய்யாதே*
*ஆடிய பாம்பை அடியா தேயிது*
*அறிவு தானடி வாலைப் பெண்ணே''*[33]

என்றும்,

*''காசார் கள்பகை செய்யா தேநடுக்*
*காட்டுப் புலிமுன்னே நில்லாதே*
*தேசாந்தி ரங்களும் செல்லாதே மாய்கைத்*
*தேவடி யாள்தனம் பண்ணாதே''*[34]

என்றும் கொங்கணவர் வாலைக்கும்மியில் பல அறிவுரைகளைப் பகர்கின்றார். மேலும் ''தன்வீடிருக்க அசல்வீடு போகாதே! தாயார் தகப்பனை வையாதே!'' என்றும் கொங்கணச்சித்தர் வாலைக்கும்மியில் வலியுறுத்துகின்றார்.

தனிமனிதனுக்காகக் குரல்கொடுப்பதும், மானிடரை நல்வழிப் படுத்த அறிவுரை பகர்தலும் சித்தர்களுக்கே உரிய குணமாகும்.

*''நல்ல வழிதனை நாடு எந்த*

*நாளும் பரமனைத் தேடு*

*வல்லவர் கூட்டத்தில் கூடு - அந்த*

*வள்ளலை நெஞ்சினில் வாழ்த்திக் கொண்டாடு''*[35]

என்று கடுவெளியார், நல்லவழியில் சென்று உண்மையான இறைவனைத் தேடு, அறிவில், ஒழுக்கத்தில், உள்ள உறுதிகொண்ட வல்லவர்கள் கூட்டத்திலே இறைவனை வாழ்த்திக் கொண்டாடு என்கிறார்.

*''பொய்ந் நெறிகளிலே போய்த் தடுமாற வேண்டாம். தவிக்க வேண்டாம். அமைதியின்றித் தத்தளிக்க வேண்டாம். அறிவுப் பாதையில் முன்னேறு. வெட்டவெளியினைப் பார், தெளிவுகொள். அஞ்ஞானமார்க்கத்தை அழித்துவிடு, பின் இன்பத்தைக் காண்பாய். மனதில் அமைதி பெறுவாய், மற்றவர்களும் இந்த ஆனந்தத்தை அடையும்படிக் கூறுவதே உன் கடமையாகும்''*[36]

என்கிறார் கடுவெளிச் சித்தர். 'யோக மார்க்கத்திலே நடக்கிறோம் என்று சொல்லி, சிலர் கஞ்சா, அபின் போன்ற போதைப் பொருட்களை உட்கொண்டு யோகம் செய்வதுபோல் காட்சியளிப்பர். அவர்கள் வயிற்றுப் பிழைப்புக்காக வேடம் போடுபவர்கள். உண்மையான யோகிகள் போதைப் பொருட்களை உபயோகிக்க மாட்டார்கள். நல்லொழுக்கத்திலே சிறந்து

விளங்குவார்கள் என உண்மையானவர்களையும் போலியானவர்களையும் அடையாளம் காட்டுகிறார்'[37] கடுவெளிச்சித்தர்.

மேலும் கஞ்சா புகை குடியாதே; கள் குடியாதே; பிறர் அஞ்ச உயிர்க்கொலை புரியாதே; புத்தியற்றவர் அஞ்ஞான நூல் படியாதே; பிச்சையென்று ஒன்றும் கேளாதே; பெண்ணாசை கொண்டு பெருக்க மாளாதே! மெய்க்குருவின் சொல்லைக் கடந்து போகாதே; நல்ல புத்தியைப் பொய்வழிதனில் நடத்தாதே; இந்த உலகம் ஒரு முள்ளு; சற்றும் இச்சை வையாமல் எந்நாளும் தள்ளு; பிறர் தாழும்படியாக நீ தாழ்வைப் பண்ணாதே என்றெல்லாம் தன்னுடைய உள்ள உணர்வுகளைக் கடுவெளியார் வெளிப்படுத்துவது மனித சமுதாயத்திடம் அவர் கொண்டிருந்த அன்பினைத் தெரிவிக்கின்றது. மேலும்,

> ***"கள்ளவேடம் புனையாதே! கொள்ளை கொள்ள நினையாதே***
> ***நட்புக் கொண்டவருக்கு தீகோள் முனையாதே'[38]***

எனக் கடுவெளியார் சிறந்த நீதிகளையும், ஒழுக்கமுறைகளையும், அறிவுரைகளையும் கூறியிருப்பதனை மானிடர் படித்துப் பின்பற்றினால் மானுடம் தழைத்து வையம் செழிக்கும் என்பது முற்றிலும் உண்மையாகும்.

ஒவ்வொரு மனிதரும் தம் வாழ்வில் நலம்பெற வேண்டுமானால் தம்மிடம் இருக்கின்ற, தீய குணங்களை விட்டொழிக்க வேண்டும் என்று குதம்பைச் சித்தர் அறிவுறுத்துகின்றார்.

“கோபம் பொறாமை கொடுஞ்சொல் வன்கோளிவை

பாபத்துக் கேதுவடி - குதம்பாய்

பாபத்துக் கேதுவடி,[39]

கள்ளங்கட் காமம் கொலைகள் கபடங்கள்

பள்ளத்தில் தள்ளுமடி - குதம்பாய்

பள்ளத்தில் தள்ளுமடி,[40]

பொருளாசை உள்ளஇப் பூமியில் உள்ளோர்க்கு

இருளாம் நரகமடி - குதம்பாய்

இருளாம் நரகமடி,[41]

கற்புள்ள மாதரைக் கலக்க நினைக்கினும்

வற்புள்ள பாவமடி - குதம்பாய்

வற்புள்ள பாவமடி,[42]

தாழாமல் உத்தமர் தம்மை இகழ்வது

கீழாம் நரகமடி - குதம்பாய்

கீழாம் நரகமடி,[43]

பாழாய்ப் பூசைகள் பண்ணும் மடையர்க்கே

ஏழாம் நரகமடி - குதம்பாய்

ஏழாம் நரகமடி,[44]

*ஆசை அறுத்தோர்க்கே ஆனந்தம் உண்டென்ற*

*ஓசையைக் கேட்டிலையோ - குதம்பாய்*

*ஓசையைக் கேட்டிலையோ,*[45]

*தேக்கிய ஆசையைச் சீயென்று ஒறுத்தோரே*

*பாக்கிய வான்களடி - குதம்பாய்*

*பாக்கிய வான்களடி*[46]

என்பன போன்ற பல எளிமையான கண்ணிகளில் இசைநயத்தோடு உள்ள உணர்வுகளை வெளிப்படுத்தும் பாங்கு குதம்பைச் சித்தருக்கே உரியது. குதம்பைச் சித்தரின் இவ்வறிவுரைகள் அவர் மானுட சமுதாயத்தின் மீது கொண்டிருந்த ஈடுபாட்டினைக் காட்டுகின்றன.

**4.7. சித்தரும் தாய்ப்பாச வெளிப்பாடும்**

பட்டினத்தார் வணிகராக இருந்து செல்வராகத் திகழ்ந்து 'காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே' என்னும் நிலையாமைத் தத்துவத்தை உணர்ந்தவர். அதன் பின்பு அரண்மனை வாழ்க்கை, செல்வம், தாய், மனைவியென அனைத்தையும் துறந்து துறவியானார், பற்றற்றவராய்ப் பல ஊர்களைச் சுற்றியவர். பிச்சையேற்று உண்டு வாழ்ந்து வந்தவர். சில காலம் கழித்து அன்னை இறந்த செய்தி கேட்டுத் துடிதுடித்தவர். அனைத்தையும் துறந்த பட்டினத்தாரேலேயே தாய்ப்பாசத்தைத் தட்டிக் கழிக்க முடியவில்லை. உள்ளத்திலிருந்து ஒதுக்கிடவும் மனம் இடம் தரவில்லை. பெற்ற தாயின்மீது பற்றில்லா

மகன் உலகில் இருக்கமுடியாது. காரணம் மனிதநேயமும் நன்றி மறவாப் பண்பும் தாயை மறக்க மறுக்கிறது. இறந்த அன்னையைப் பச்சை வாழைமட்டையின்மீது கிடத்தி ஈமச்சடங்கு செய்யும்போது,

*''ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்துபெற்றுப்*
*பையலென்ற போதே பரிந்தெடுத்துச் - செய்யஇரு*
*கைப்புறத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை*
*எப்பிறப்பில் காண்பேன் இனி''*[47]

எனப் பட்டினத்தார் பாடுகின்றார். மேலும் அவர்,

*''முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாள்சுமந்து*
*அந்தி பகலாய்ச் சிவனைஆதரித்துத் - தொந்தி*
*சரியச் சுமந்துபெற்ற தாயார் தமக்கோ*
*எரியத் தழல்மூட்டு வேன்''*[48]

எனவும்,

*''வட்டிலிலும் தொட்டிலிலும் மார்மேலும் தோள்மேலும்*
*கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து - முட்டச்*
*சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டும் தாய்க்கோ*
*விறகிலிட்டுத் தீமூட்டு வேன்''*[49]

எனவும் வருந்திப் பாடுகின்றார். அவரது வருத்தம்

*“நொந்து சுமந்துபெற்று நோவாமல் ஏந்திமுலை*
*தந்து வளர்த்தெடுத்துத் தாழாமே - அந்திபகல்*
*கையிலே கொண்டென்னைக் காப்பாற்றும் தாய்தனக்கோ*
*மெய்யிலே தீமூட்டு வேன்”*[50]

எனவும்,

*“அரிசியோ நானிடுவேன் ஆத்தாள் தனக்கு*
*வரிசையிட்டுப் பார்த்து மகிழாமல் - உருசியுள்ள*
*தேனே அமிர்தமே செல்வத் திரவியப்பூ*
*மானே எனஅழைத்த வாய்க்கு”*[51]

எனவும்,

*“அள்ளி இடுவது அரிசியோ தாய்த்தலைமேல்*
*கொள்ளிதனை வைப்பேனோ கூசாமல் - மெள்ள*
*முகம்மேல் முகம்வைத்து முத்தாடி என்றன்*
*மகனே எனஅழைத்த வாய்க்கு”*[52]

எனவும் பட்டினத்தார் வருந்திப் பாடுகின்றார்.

அன்னை உடல் நெருப்புக்குள் மூழ்குவதே சரி என்று ஒரு முடிவுக்கு வந்த பட்டினத்தார்,

*“முன்னை இட்டதீ முப்பு ரத்திலே*
*பின்னை இட்டதீ தென்னிலங் கையில்*
*அன்னை இட்டதீ அடிவ யிற்றிலே*
*யானும் இட்டதீ மூள்க மூள்கவே”*[53]

எனக்கூறி அன்னையின் உடலுக்குத் தீயை மூட்டுகின்றார். தீப்பற்றி எரியும்போது பட்டினத்தாருக்கு உடல் பதறுகிறது வெந்தழலில் வேகும் அவ்வுடலைப் பார்த்து உள்ளம் பதைத்த அவர்,

*''வேகுதே தீயதனில் வெந்து பொடிசாம்பல்*
*ஆகுதே பாவியேன் ஐயகோ - மாகக்*
*குருவி பறவாமல் கோதாட்டி என்னைக்*
*கருதி வளர்த்தெடுத்த கை''*[54]

என்றும்,

*''வெந்தாளோ சோணகிரி வித்தகா! நின்பதத்தில்*
*வந்தாளோ என்னை மறந்தாளோ - சந்ததமும்*
*உன்னையே நோக்கி உகந்துவரம் கிடைத்துஎன்*
*தன்னையே ஈன்றெடுத்த தாய்''*[55]

என்றும்,

*''வீற்றிருந்தாள் அன்னை வீதிதனில் இருந்தாள்*
*நேற்றிருந்தாள் இன்றுவந்து நீறானாள் - பால்தெளிக்க*
*எல்லோரும் வாருங்கள் ஏதென்று இரங்காமல்*
*எல்லாம் சிவமயமே யாம்''*[56]

என்றும் குறிப்பிடுகின்றார்.

மேற்கண்ட பட்டினத்தாரின் பத்துப் பாடல்களும் மற்ற மனிதர்களுக்குத் தக்க பாடமாக அமைந்துள்ளன.

**4.8. சித்தர்களும் நிலையாமையும்**

உலகில் பிறந்த ஒவ்வொரு தனிமனிதரும் வாழ்வில் நிலையாமையை நன்கு உணர்ந்து அதற்கேற்றாற்போல் தம் வாழ்வை அமைத்துக் கொள்ளவேண்டும். இந்நிலையாமையை அறியாத, தெரியாத, உணராத மானிடர்க்காகவே சித்தர்கள் நிலையாமை பற்றிப் பல பாடல்களில் எடுத்துரைக்கின்றனர்.

சிவவாக்கியார் எதனையும் பகுத்தறிவோடு அணுகக் கூடியவர். இவ்வுண்மையினை,

***"நீளவீடு கட்டுறீர் நெடுங்கதவு சாத்துறீர்***
***வாழவேணும் என்றலோ மகிழ்ந்திருந்த மாந்தரே?***
***காலன்ஓலை வந்தபோது கையகன்று நிற்பீரே***
***ஆலம்உண்ட கண்டர்பாதம் அம்மைபாதம் உண்மையே"***[57]

என்னும் அவரது பாடல்கொண்டு அறியலாம். மகிழ்ச்சியுடன் வாழவேண்டும் என எண்ணி அரண்மனைபோன்ற வீடுகட்டியுள்ளீர்கள். ஒருநாள் எமன்வந்து உங்களை அழைக்கும்போது உங்களுடன் அரண்மனை, செல்வம் எவையுமே உடன் வரப்போவதில்லை என்னும் உண்மையினை அவர் உணர்த்துகின்றார்.

*''ஓடம்உள்ள போதெல்லாம் நீர்ஓடியே உலாவலாம்*
*ஓடம்உள்ள போதெல்லாம் உறுதிபண்ணிக் கொள்ளலாம்*
*ஓடமும் உடைந்தபோதில் ஒப்பில்லாத வெளியிலே*
*ஆடுமில்லை கோலுமில்லை யாருமில்லை ஆனதே''*[58]

என்னும் பாடலில் ஓடமாகிய இந்த உடம்பில் உயிர் ஓடிக்கொண்டிருப்பதனால் பல இடங்களுக்கும் சென்று வரலாம்; வயதும் உடல் தன்மையும் கொண்டு இன்னும் இவ்வளவு நாட்கள் வாழலாம் என்றும் உறுதிசெய்து கொள்ளலாம்; ஆனால் ஒருநாள் திடீரென ஓடமாகிய உடம்பானது உடைந்து உயிர்பிரிந்துவிட்டால் எதுவுமே இல்லாமல் போய்விடும் என்று சிவவாக்கியார் கூறுகிறார்.

*''வீடெடுத்து வேள்விசெய்து மெய்யனோடு பொய்யுமாய்*
*மாடுமக்கள் பெண்டிர்சுற்றம் என்றிருக்கும் மாந்தர்காள்*
*நாடுபெற்ற நடுவர்கையில் ஓலைவந்து அழைத்திடில்*
*ஓடுபெற்ற அவ்விலை பெறாதுகாணும் உடலமே''*[59]

என்னும் இப்பாடலில் சிவவாக்கியார் செல்வம், மனைவி, மக்கள், சுற்றத்தார் முதலிய யாவருமே பொய்யே என அறிவுறுத்துகின்றார்.

*''கறந்தபால் முலைபுகா; கடைந்த வெண்ணெய் மோர்புகா;*
*உடைந்துபோன சங்கின்ஓசை உயிர்களும் உடற்புகா;*
*விரிந்தபூ உதிர்ந்தகாயும் மீண்டும்போய் மரம்புகா;*
*இறந்தவர் பிறப்பதில்லை இல்லைஇல்லை இல்லையே''*[60]

என்னும் பாடலில் 'இறந்தபின் மறுபிறவி இல்லை' என்னும் உண்மையினை அவர் உணர்த்துகின்றார்.

*''மண்கலம் கவிழ்ந்தபோது வைத்துவைத்து அடுக்குவார்*
*வெங்கலம் கவிழ்ந்தபோது வேணுமென்று பேணுவார்*
*நம்கலம் கவிழ்ந்தபோது நாறும்என்று போடுவார்*
*எண்கலந்து நின்றமாயம் என்னமாயம் ஈசனே''*[61]

என்னும் பாடலில் சிவவாக்கியார் உணர்த்தும் உண்மை சிந்தனைக்குரியதாகும். மண்பானை கவிழ்ந்து உடைந்தபோது பானை ஓடுகளை அடுக்கிக்கொண்டுபோய் எறிந்துவிடுகின்றனர். வெங்கலப் பாத்திரத்தை உதவும் என்று எடுத்து வைத்துக் கொள்கின்றனர். வீசி எறிவதில்லை. ஆனால் மனித உடம்பானது இறந்தபின்பு நாற்றம் எடுத்துவிடுவதால் இரண்டு நாட்கள் கூட வைத்திருக்க முடியாமல் கொண்டுபோய்ப் புதைத்தோ எரித்தோ வந்துவிடுகின்றனர். அவ்வாறு நாற்றம் வீசும் எண்சாண் உடம்பினிலும் ஈசன் கலந்து நிற்பது மாயமே என உரைக்கிறார் சிவவாக்கியார் மேலும் அவர்,

*''மாடுகன்று செல்வமும் மனைவிமைந்தர் மகிழவே*
*மாடமாளி கைப்புறத்தில் வாழுகின்ற நாளிலே*
*ஓடிவந்து காலதூதர் சடுதியாக மோதவே*
*உடல்கிடந்து உயிரகன்ற உண்மைகண்டும் உணர்கிலீர்''*[62]

என்றுரைக்கின்றார்.

மனைவி மக்களோடும், மாடு, கன்று போன்ற செல்வங்களோடும் மாட மாளிகையில் வாழுகின்ற நாட்களில் எமன்வந்து நம்மீது ஏதோ ஒரு வகையில் மோதியபோது உடலை விட்டு நம் உயிரானது கழன்று விடுகிறது. அவ்வாறு நாம் இறக்கும்போது மனைவி, மக்கள், சொந்தம், பந்தம், அரண்மனை, செல்வமென எவையுமே நம்முடன் வருவதில்லை என்னும் உண்மையினை நேரில் கண்ட பிறகும் மனிதர்கள் உணரவில்லையே என ஏங்குகிறார் சிவவாக்கியார்.

உனை ஓதாமல், ஐந்தெழுத்தையும் சொல்லாமல் இத்தனை நாட்களாய் வேல்போன்ற கண்களையும், அழகிய உடலையும் பெற்றுள்ள பெண்களின் அழகில் மயங்கிக் கிடந்துவிட்டேன். நான் இறக்கும் காலத்தில் என்னுடலை நரிதின்னுமோ அல்லது கழுகு பருந்து தின்னுமோ. குரைக்கின்ற நாய் இழுத்துச் செல்லுமோ அல்லது எரியுண்ணுமோ அல்லது வேறு ஏதேனும் உயிர்கள் என்னை இரையாகத் தின்னுமோ கச்சி ஏகம்பனே என யாக்கையின் நிலையாமையைப் பட்டினத்தார் வலியுறுத்துகிறார். இதனை,

***''வரிக்கோல வேல்விழியார் அநுராக மயக்கில் சென்று***
***சரிக்கோதுவேன் எழுத்து அஞ்சுஞ்சொலேன் தமியேனுடலம்***
***நரிக்கோ? கழுகுபருந்தினுக்கோ? வெய்யநாய் தனக்கோ***
***எரிக்கோ? இரையெதற்கோ? இறைவா கச்சிஏகம்பனே''***[63]

என்னும் பாடல்வழி அறியமுடிகின்றது.

*"ஊற்றைச் சரீரத்தை ஆபாசக் கொட்டிலை ஊன்பொதிந்த*
*பீற்றல் துருத்தியைச் சோறிடும் தோற்பையைப் பேசரிய*
*காற்றில் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல் செய்தே*
*ஏற்றுத் திரிந்துவிட்டேன் இறைவா! கச்சிஏகம்பனே!"*[64]

நாறுகின்ற அழுக்கு உடம்பை, ஆபாச உறுப்புகளை, சதைப் பிடிப்பிலிருந்து வியர்வை பீறிட்டு வருகின்ற உடம்பை, சோறு போட்டு வைக்கின்ற இந்தத் தோலால் ஆகிய பையை, பெரிதாகப் பேசுவதற்கு ஏதுமில்லாத காற்றடைத்த பாண்டமாகிய நிலையில்லாத இவ்வுடம்பை மிகவும் விரும்பி இருப்பது பயனற்றதாகும். இவையெல்லாம் அழியக் கூடியவை. நிலையில்லாதவை என்பதை உணராமல் வாழ்வது இழிவென உணர வேண்டும் என்று பட்டினத்தார் இறைவனிடம் முறையிடுகிறார். மேலும் அவர்,

*"முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவிலொரு*
*பிடிசாம்பலாய் வெந்துமண் ணாவதுகண்டு பின்னுமிந்தப்*
*படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்லால் பொன்னினம் பலவர்*
*அடிசார்ந்து நாம்உய்ய வேண்டுமென்றே அறிவாரில்லையே*[65]

என்றும் மக்களுக்காக வருந்துகின்றார்.

மன்னர்களானாலும் மக்களானாலும் முடிவில் ஒரு பிடி சாம்பலாய் வெந்து மண்ணாகப் போவது திண்ணம் என்பதைக் கண்டபின்னும்,

இறைவனடியை வேண்டுமேன்றே அறியாமலே காலம் கழிக்கின்றனரே என்று அவர் கூறுகின்றார்.

மேலும் அவர்,

*''காதற்ற ஊசியும் வாராதுகாணும் கடைவழிக்கே''*[66]

என்றும் உரைக்கின்றார்.

*''மனையாளும் மக்களும் வாழ்வும் தனமும்தன் வாயில் மட்டே*
*இனமான சுற்றமும் மயானமட்டே வழிக்கேதுதுணை*
*தினையாமளவு எள்ளளவாகிலும் முன்பு செய்தவம்*
*தனையாள என்றும் பரலோகம் சித்திக்கும் சத்தியமே''*[67]

என்ற பட்டினத்தாரின் பாடல் வரிகளைப் புரிந்து கொண்டு கவிஞர் கண்ணதாசன் பாதகாணிக்கை என்ற திரைப்படத்தில்,

*வீடுவரை உறவு; வீதி வரை மனைவி;*
*காடுவரை பிள்ளை; கடைசி வரை யாரோ?*

என்று பாடியிருப்பது ஈண்டு எண்ணத்தக்கதாகும்.

இதே பொருளில் கொங்கணரின் வாலைக்கும்மியில்,

*''பெண்டாட்டி மந்தைமட்டும் வருவாள் பெற்ற*
*பிள்ளை மசானக் கரையில் மட்டும்''*[68]

என்ற பாடல்வரிகள் இடம்பெற்றுள்ளன. கணவன் இறந்த பின்பு

இடுகாட்டுக்கு எடுத்துச் செல்லும்போது அவன் மனைவி அவ்வூரின் மந்தைவெளி வரை வருவாள், மகன் மயானக்காடு வரை வருவான் என்கிறார்.

பட்டினத்தார் யாக்கை நிலையற்றது, என்னும் உண்மையினை

*"எரிஎனக்கென்னும் புழுவோ எனக்கென்னும் இந்தமண்ணும்*
*சரிஎனக்கென்னும் பருந்தோ எனக்கென்னும் தான்புசிக்க*
*நரிஎனக்கென்னும் புன்நாய் எனக்கென்னும் இந்நாறுடலைப்*
*பிரியமுடன் வளர்த்தேன் இதனால் என்னபேறு எனக்கே"*[69]

என்னும் பாடலின் வாயிலாக அறிவுறுத்துகின்றார்.

*"தாயாரும் சுற்றமும் பெண்டிரும் கைவிட்டுத் தாழ்ந்திடும் நாள்*
*நீயார் நானார் எனப்பகர்வார் அந்த நேரத்திலே*
*நோயாரும் வந்து குடிகொள்வாரே கொண்டநோயும் ஒரு*
*பாயாரும் நீயுமல்லால் பின்னையேது நட்பாம்உடலே."*[70]

நெறியல்லா நெறியில் செல்லும் ஒருவனை அவன் அன்னை உள்ளிட்ட பலரும் புறக்கணித்துவிடுவர். இதனால் அவன் மனம் வருத்தமுறும். நோய்நொடிகள் புகும். இறுதியில் அவன் மரணத்தைத் தழுவுவான். எனவே யாக்கை நிலையற்றது என்னும் உண்மையினை ஒவ்வொருவரும் உணரவேண்டும் என்று பட்டினத்தார் அறிவுறுத்துகின்றார். மேலும் பட்டினத்தார்,

*''எத்தனைநாள் கூடி எடுத்த சரீரம் இவை*
*அத்தனையும் மண்தின்ப தல்லவோ''*[71]

என்றும் யாக்கை நிலையாமை பற்றி எடுத்தியம்புகின்றார்.

*''மாணிக்கம் முத்து வயிரப் பணிபூண்டு*
*ஆணிப்பொன் சிங்காசனத்தில் இருந்தாலும்*
*காணித்துடலை நமன் கட்டியே கைப்பிடித்தால்*
*காணிப்பொன் கூடவரக் காண்கிலமே நெஞ்சமே.''*[72]

இப்பாடல் முத்து வைரம் மாணிக்கம் முதலானவற்றை அணிகலன்களாக அணிந்து கொண்டிருந்தாலும், ஆணிப் பொன்னால் செய்த சிம்மாசனத்தில் அமர்ந்து சிறந்தாலும் எமன் வந்து பிணித்து அழைத்துச் செல்லும்போது அவை உடன் வரப்போவதில்லை எனப் பட்டினத்தார் கூறிச் செல்வ நிலையாமையை வலியுறுத்துகின்றார். எதுவுமின்றித் தனியாகப் பிறப்பெடுக்கும் மக்கள் எதையும் எடுத்துச் செல்ல முடியாமல் தனியாகவே செல்கின்றனர். இதுதான் வாழ்க்கை என உணர்த்துகின்றார் பட்டினத்தார்.

*''இருப்பதுபொய் போவதுமெய் என்றெண்ணி நெஞ்சே!*
*ஒருத்தருக்கும் தீங்கினை உன்னாதே - பருத்ததொந்தி!*
*நம்மதென்று நாமிருப்ப நாய்நரிகள் பேய் கழுகு*
*தம்மதென்று தாமிருக்கும் தாம்.''*[73]

நீண்ட காலம் வாழ்வோம் என்பது பொய், போவதும் மெய் என்று ஒவ்வொருவரும் எண்ணி எவருக்கும் எத்தீங்கினையும் மனத்தாலும் நினைக்கக்கூடாது. பருத்துவளர்ந்த இந்த உடம்பு நம்முடையதென்று நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் நாய் நரிகளும், பேய் கழுகுகளும் தம்முடையது என்று எண்ணிக்கொண்டிருப்பதனை எவரும் மறந்துவிடக்கூடாது என்று பட்டினத்தார் மக்களுக்குக் கூறும் அறிவுரை பொருள் பொதிந்ததாகும். ஒவ்வொருவரும் தாம் நல்லதையே நினைத்து நல்லனவற்றையே செய்து, ஆசையைத் துறந்து வாழ்வதே சாலச் சிறந்ததாகும். அப்போதுதான் மனம் அமைதியடையும், வாழ்வில் தெளிவு பிறக்கும் என்று பட்டினத்தார் கருதுகின்றார்.

நிலையாமைத் தத்துவத்தைப் பாம்பாட்டிச் சித்தர் பல்வேறு சான்றுகளைக் கூறி விளக்குகிறார்.

> ***"நாடுநகர் வீடுமாடு நற்பொருள் எல்லாம்***
> ***நடுவன் வரும்பொழுது நாடி வருமோ?***
> ***கூடுபோன பின்பிவற்றால் கொள்பயன் என்னோ?***
> ***கூத்தன் பதம்குறித்து நின்றாடு பாம்பே."***[74]

என்பது பாம்பாட்டிச் சித்தர் பாடலாகும்.

எமன் வந்து நம்மை அழைக்கும் பொழுது, நாம் இறக்கும்பொழுது நாடு, நகரம், வீடு, மாடு பொருட்கள் என எவையும் நம்மோடு உடன்

வருவதில்லை. தனியாகத்தான் சென்றாக வேண்டும், வேறு வழியே இல்லை என்று நிலையாமையை உணர்த்துகிறார்.

*''யானை சேனை தேர்பரியாவும் அணியாய்*
*யமன் வரும்போது துணையாமோ அறிவாய்''*[75]

நால்வகைப் படைகளையும் கொண்டு ஒருவர் பெருவாழ்வு வாழ்ந்து வந்தாலும் எமன் வரும்போது இவை எவையுமே துணையாக உடன் வருவதில்லை என்பதனை அறிந்திடுங்கள் என்று பாம்பாட்டிச் சித்தர் அறிவுறுத்துகின்றார்.

*''மாணிக்கமா மணிமுடி வாகு வலயம்*
*மார்பில் தொங்கும் பதக்கங்கள் மற்றும்பணிகள்*
*ஆணிப்பொன் முத்தாரம் அம்பொன் அந்தக்கடகம்*
*அழிவான பொருளென நின்று ஆடுபாம்பே.''*[76]

மாணிக்கக்கல் பதித்த மணிமுடியும், மார்பில் தொங்கும் பதக்கங்களும் ஆணிப் பொன்னால் செய்த பொன்னரி மாலையும், அழகிய பொன்னால் செய்யப்பட்ட நண்டு உருவம் பொறித்த அணிகலன் முதலிய இவையனைத்துமே நிலையின்றி அழியக் கூடியன எனச் செல்வ நிலையாமையைப் பாம்பாட்டிச் சித்தர் இப்பாடலில் வலியுறுத்துவதனை அறிய முடிகிறது. மாட மாளிகைகள் உள்ளிட்ட எவையும் மக்கள் இறக்கும்போது உடன் வருவதில்லை என்பதனைப் பாம்பாட்டிச் சித்தர்,

*‘மாடகூட மாளிகைகள் வண்ண மண்டபம்*

*மதில் சூழ்ந்த அரண்மனை மற்றும் உள்ளவை கூடவாரா’’*[77]

என்னும் பாடல் வழி உணர்த்துகின்றார்.

*“மலைபோன்ற செம்பொற்குவை வைத்திருப்பவர்*

*மறலிதான் வருகையில் வாரிச் செல்வரோ?’’*[78]

செம்பொற் காசுகளை மலைபோல் குவித்துவைத்திருந்தாலும் எமன் வரும்போது எவரும் அவற்றை வாரிக்கொண்டு செல்ல முடியாது என்று பாம்பாட்டிச் சித்தர் மேற்கண்ட பாடல் மூலம் வலியுறுத்துகின்றார்.

மக்கள் மறைவுக்குப் பின் அவர்களுடன் பஞ்சுமெத்தை, பூம்படுக்கை முதலிய எவையும் உடன் வருவதில்லை என்ற உண்மையினைப் பாம்பாட்டிச்சித்தர்,

*“பஞ்சணையும் பூவனையும் பாயலும் வெறும்*

*பாழ்ச்சுடு காடதிலே பயன் பெறுமோ?*[79]

என அறிவுறுத்துகின்றார். மேலும் அவர்,

*“முக்கனியும் சர்க்கரையும் மோதகங்களும்*

*முதிர்சுவைப் பண்டங்களும் முந்தி உண்டவாய்*

*மிக்கஉயிர் போனபின்பு மண்ணை விழுங்க*

*மெய்யாகக் கண்டோம் என்று ஆடுபாம்பே’’*[80]

என்னும் பாடலில் சுவைமிக்க கனிகளையும் தின்பண்டங்களையும் பிறவற்றையும் உண்ட வாயில் இறப்பிற்குப்பின் மண்ணே விழுகிறது. இதுதான் வாழ்க்கை என்னும் உண்மையினைப் புரிந்து கொள்ளுங்கள் என மானிடர்களுக்குப் புரியவைக்கின்றார்.

*''வண்ணப்பட்டும் வாசனையும் வாய்த்த கோலமும்*
*வண்கவிகை ஆலவட்டம் மற்றுஞ் சின்னமும்*
*திண்ணமுடன் யமபுரம் செல்லுங் காலத்தில்*
*சேரவர மாட்டா வென்று ஆடுபாம்பே.''*[81]

மக்கள் உடுத்துகின்ற வண்ண வண்ணப் பட்டாடைகளும், பல்வேறு வாசனைத் தெளிப்பான்களும், நிழல்தரும் குடைகளும், ஆலவட்டம் எனும் தலைப்பாகையும் முதலிய இவையனைத்தும் எமபுரம் செல்லும்போது உடன் வருவதில்லை: பின்னர் எதற்காகப் பல்வேறு கோலங்கள் என்று பாம்பாட்டிச் சித்தர் சிந்திக்க வைக்கின்றார். பாம்பாட்டிச்சித்தர்,

*''மக்கள் பெண்டிர் சுற்றம்மருமக்கள் மற்றவர்*
*மாளும்போது கூடஅவர் மாள்வ தில்லையே''*[82]

என்னும் இப்பாடல் வரிகளில் மனைவி மக்கள் சுற்றம் எனப் பிணைந்தும், தம்குடும்பம் எனவும் சுயநலத்தோடு வாழுகின்றீர்கள். வீட்டிற்காக மாடாக உழைக்கிறீர்கள், இருந்தாலும் நீங்கள் இறக்கின்றபோது உங்கள்

குடும்பத்தினர் மற்றும் சுற்றத்தினர் கூடவே இறப்பதில்லை. எனவே சுயநலமின்றி எல்லோருக்காகவும் உழைத்தால் புகழும் கிடைக்கும் புண்ணியமும் கிடைக்கும் என்றுரைக்கின்றார். மேலும் பாம்பாட்டிச் சித்தர்,

*''ஊத்தைக் குழிதனிலே மண்ணை எடுத்தே*
*உதிரப் புனலினிலே உண்டை சேர்த்தே*
*வாய்த்த குயவனார் அவர்பண்ணும் பாண்டம்*
*வறையோட்டுக்கும் ஆகாதென்று ஆடு பாம்பே''*[83]

என்னும் பாடலடிகளின் வழியே தாயின் வயிற்றிலே உருவாகிப் பிறந்து வளர்ந்து வாழ்கின்ற இம்மானிட உடம்பு இறந்தபின்பு பிச்சையோட்டுக்குக் கூடப் பயன்படாது என்று கூறுகின்றார். பாம்பாட்டிச் சித்தர்,

*''இருவர் மண்சேர்த்திட ஒருவர் பண்ண*
*ஈரைந்து மாதமாய் வைத்த சூளை*
*அருமையாய் இருப்பினும் அந்தச் சூளை*
*அரைக்காசுக்கு ஆகா தென்று ஆடுபாம்பே''*[84]

எனவும்,

*''பரியாசம் போலவே கடித்த பாம்பு*
*பலபேர் அறியவே மெத்த வீங்கிப்*
*பரியாரம் ஒருமாது பார்த்த போது*
*பையோடு கழன்றதென்று ஆடு பாம்பே''*[85]

எனவும்,

*''சீயுமலமும் செறிசெந் நீரும் நிணமும்*

*சேர்ந்திடுதுர் நாற்றமுடைக் குடம்அது உடைந்தால்*

*நாயும் நரியும் பெரிய பேயும் கழுகும்*

*நமதென்றே தின்றிடும் என்று ஆடுபாம்பே''*[86]

எனவும் யாக்கை நிலையாமை பற்றி அறிவுறுத்துகின்றார்.

*''நீரில் எழும் நீர்க்குமிழி நிலை கெடல்போல்*

*நில்லாது உடல் நீங்கிவிடும் நிச்சயம் என்றே''*[87]

என்றும்,

*''பேசரிய நவவாயில் பீற்றல், துருத்தி*

*பெருங்காற்றுள் புகுந்ததால் பேச்சுண் டாச்சே*

*ஈசன்நிலை அறியாருக்கு இந்தத் துருத்தி*

*எரிமண்ணிற்கு இரையாம் என்று ஆடுபாம்பே''*[88]

என்றும் யாக்கை நிலையாமை குறித்து எடுத்துரைக்கின்றார்.

மனிதர்களுக்கு உடம்பில் ஒன்பது வாயில்கள் உள்ளன. அந்த ஒன்பது வாயில்களிலுமே அழுக்கு மட்டுந்தான் வெளியேறுகின்றன. கண்ணில் அழுக்கும், உப்புக் கண்ணீரும், மூக்கிலிருந்து சளியும், வாயிலிருந்து ஊத்தையும், எச்சிலும், பிறப்பு உறுப்பிலிருந்து சிறுநீரும்,

சுக்கிலமும், மலவாயிலிருந்து மலமும், இரண்டு காதுகளில் இருந்து குரும்பி எனும் அழுக்கும் வெளியேறுகின்றன. உடம்பிலுள்ள ஓட்டைகள் அனைத்துமே, அழுக்கைத்தான் வெளியேற்றுகின்றன என்னும் உண்மையினைக் கொண்டே உடம்பினை 'நாறும் உடல்' என்கின்றனர். பாம்பாட்டிச் சித்தர், மக்களாகப் பிறந்த ஒவ்வொருவரும் வாழ்க்கையைப் பலருக்கும் பயன்படுகின்ற விதத்தில் அமைத்துக் கொள்ள வேண்டுமென்று அறிவுறுத்துகின்றார்.

நீர்மேல் காணப்படுகின்ற குமிழி எவ்வாறு விரைவில் அழிந்து விடுகின்றதோ அதுபோலவே இந்த மனித உடலும் சிலகாலம் வாழ்ந்தபின் அழிந்துவிடும் தன்மைகொண்டது. எனவே உலகப் பொருட்கள் மீது கொண்ட பற்றை நீக்கி வாழக் கற்றுக் கொள்ளுங்கள். ஏனெனில் அவையும் அழியக் கூடியனவே என்னும் உண்மையினைக் கடுவெளிச்சித்தர்,

*''நீர்மேல் குமிழியிக் காயம் - இது*
*நில்லாது போய்விடும் நீயறி மாயம்*
*பார்மீதில் மெத்தவும் நேயம் - சற்றும்*
*பற்றா திருத்திடப் பண்ணும் உபாயம்''*[89]

என்னும் பாடிலடிகளின் வாயிலாகச் சுட்டுகின்றார். மக்கள் உழைத்து ஈட்டுகின்ற சொத்துக்களில் ஒரு தூசு அளவுகூட நிலைத்து நிற்பதில்லை.

அவை யாவும் நிலையாக ஒருவரிடத்திலேயே நில்லாது என்னும் செல்வ நிலையாமையைக் கடுவெளிச் சித்தர்,

*''தேடும் சொத்துக்களில் ஒருதூசும் நில்லாதே''*[67]

எனக் குறிப்பிடுகின்றார்.

இதே கருத்தமைந்த பாடலை இடைக்காட்டுச் சித்தரும் பாடியுள்ளமையை ஈண்டுச் சுட்டிக் காட்டுவது சாலப் பொருத்த முடையதாகும்.

***''இரும்பை இழுக்கும் காந்தத்து இயற்கைபோல் பல்பொருளை***
***விரும்பினதால் அவை நிலையோ விளம்புவாய் கல்மனமே''***[90]

இரும்பைக் காந்தம் இழுப்பதுபோல் மக்களுக்குப் பொருட்கள் மீது நாட்டம் எழுகிறது. நிலையற்ற பொருள்கள்மேல் ஏன் நாட்டம் கொள்ள வேண்டும் என்று அவர் வினவுகின்றார்.

யாக்கை நிலையாமையைப் பாமரனும் புரிந்துகொள்ளும் வகையில் எளிய சொற்களைக் கொண்டு பாடல் இயற்றும் திறன் குதம்பைச் சித்தருக்கேயுரிய தனிச்சிறப்பாகும். மனிதர்களில் பலர் பல்வேறு விதமான வாசனைத் திரவியங்களையும், நறுமணப் பொடிகளையும் பூசிக்கொள்கின்றனர். இஃது ஏன் என அவர் வினவுகின்றார். இதனை,

*''பேசரு நாற்றம் பெருகும் உடலுக்கு*

*வாசனை ஏதுக்கடி குதம்பாய்*

*வாசனை ஏதுக்கடி''*[91]

என்னும் பாடலடிகளின் வழியே உணரமுடிகின்றது.

மேலும் குதம்பைச் சித்தர் மெய்வீசும் நாற்றத்தை மறைப்பதற்கு மஞ்சள் பூச்சு ஏன் என வினவுகின்றார். இதனை,

*''நீச்சக் கவுச்சது நீங்காமெய்க்கு மஞ்சள்*

*பூச்சுத்தான் ஏதுக்கடி குதம்பாய்*

*பூச்சுத்தான் ஏதுக்கடி*

என்னும் பாடலடிகள் காட்டுகின்றன.

*''போராட்டம் செய்து புழுத்த உடம்பிற்கு*

*நீராட்டம் எதுக்கடி? குதம்பாய்*

*நீராட்டம் எதுக்கடி''*[92]

என்னும் கும்பைச் சித்தர் பாடலடிகளும்,

*''காகம் கழுகு களித்துண்ணும் மேனிக்கு*

*வாகனம் எதுக்கடி குதம்பாய்*

*வாகனம் எதுக்கடி''*[93]

என்னும் பாடலடிகளும் நிலையாமையை வலியுறுத்துகின்றன.

மரணத்திற்குப் பின் செய்யப்படும் சடங்குகளையும் குதம்பைச் சித்தர் வெறுத்துரைக்கின்றார். இதனை,

*"கோவணத் தோடே கொளுத்தும் உடலுக்குப்*
*பூவணை ஏதுக்கடி குதம்பாய்*
*பூவணை ஏதுக்கடி"*[94]

என்ற பாடலடிகளும்,

*"முதிர்ந்த சுடுகாட்டில் முல்லையை ஒத்தப்பல்*
*உதிர்ந்து கிடக்குமடி குதம்பாய்*
*உதிர்ந்து கிடக்குமடி"*[95]

என்ற பாடலடிகளும் புலப்படுத்துகின்றன.

*"பிறக்கும் போதுற்ற பெருமையைப் போலவே*
*இறக்கும் போதெய்துவிடும் - குதம்பாய்*
*இறக்கும்போ தெய்துவிடும்"*[96]

எனப் பலவாறாகச் சித்தர்கள் நிலையாமையை வலியுறுத்திச் சென்றுள்ளனர். எனவே மானுடர் இளமையும், யாக்கையும், செல்வமும் நிலையுடையனவல்ல என்பதனை உணர்ந்து, பிறருக்காகவும் வாழ்ந்து ஒவ்வொரு தனிமனிதரும் மேம்பாடு அடைய வேண்டுமெனச் சித்தர்கள் தம் பாடல்களில் வலியுறுத்துகின்றனர்.

**4.9. தொகுப்புரை**

மனிதருள் பலருக்கு உடலைப் பற்றிய முக்கியத்துவம் தெரிவதே இல்லை. கல்வியறிவு இன்மையாலும், அறியாமையினாலும், ஆணவத்தினாலும் தங்களது உடல் உறுப்புகளைப் பற்றியும், நோய்கள் பற்றியும், நோய்ப் பாதுகாப்புமுறை பற்றியும் அறியாமல் பிணியுற்று, துன்பத்தை அனுபவித்து வாழ்நாளில் முன்கூடியே இறப்பவர்கள் பலர். ஆனால் சித்தர்கள் தங்களது உடலை இறைவன் வாழும் இல்லமாகவே எண்ணினர். எனவே சித்தர்கள் மனிதர்களை நோக்கி உடலை அழுக்குடம்பு என்று எண்ணாமல், ஆண்டவன் வீற்றிருக்கும் ஆலயமாக எண்ணுங்கள் என அறிவுறுத்தினர்.

உடல் உறுப்புகளையும், உடலில் இயங்கும் காற்றின் தன்மைகளையும், மனத்தைச் செம்மைப் படுத்துதலையும் எந்தவொரு மனிதரும் தெரிந்திருக்க வேண்டும். இதனைச் சித்தர் பாடல்கள் வலியுறுத்துகின்றன. தனிமனித ஒழுக்கம் மிகமிக இன்றியமையாதது என்று சித்தர்கள் உணர்த்துகின்றனர். ஒழுக்கச் சீர்கேட்டால் வாழ்வு இருண்டுவிடும் என்றும் எச்சரிக்கை விடுப்பதனைச் சித்தர் பாடல்களில் காணமுடிகின்றது.

## அடிக்குறிப்பு விளக்கம்

1. த.ந. கணபதி, தமிழ்ச் சித்தர் மரபு, ப.194.
2. மேற்படி. 194.
3. திருமந்திரம், 2128.
4. சிவவாக்கியார் பாடல், 185.
5. மேற்படி. 76.
6. த.ந. கணபதி, மு.கு.நூ. ப. 195.
7. கொங்கணர் வாலைக்கும்மி, 24.
8. திருமந்திரம், 704.
9. திருமந்திரம், 705.
10. பாம்பாட்டிச் சித்தர் பாடல், 145.
11. இரா. கலாவதி, சித்தர் பாடல்களில் நடப்பியல், ப.132.
12. மேற்படி. 143.
13. த.ந. கணபதி, மு.கு.நூ, ப.109.
14. மானோஸ், சித்தர் பாடல்கள், ப.21.
15. மேற்படி. ப.26.
16. இரா. கலாவதி, மு.கு.நூ, ப.139.
17. மேற்படி. 139.
18. மானோஸ் மு.கு.நூ.ப. 29.
19. இடைக்காட்டுச் சித்தர் பாடல், 13.
20. அகத்தியச் சித்தர் (ஞானம் 2) பாடல், 1.

21. சிவவாக்கியார் பாடல், 99.

22. பத்திரகிரியார் பாடல், 173.

23. த.ந. கணபதி, மு.கு.நூ, ப.178.

24. பட்டினத்தார் பாடல் (பொது), 16.

25. பட்டினத்தார் ஞானம்.100.

26. பட்டினத்தார் பாடல் (பொது), 19.

27. மேற்படி. 17.

28. அகத்தியர் ஞானம், 9.

29. அகத்தியர் ஞானம், 3.

30. அகத்தியர் (ஞானம்-4) பாடல் 20-22.

31. பட்டினத்தார் பாடல் (பொது), 112.

32. பட்டினத்தார் ஞானம்,100.

33. கொங்கணர் வாலைக்கும்மி, 91.

34. மேற்படி. 93.

35. கடுவெளிச்சித்தர் ஆனந்தக்களிப்பு, 6.

36. மேற்படி. 10.

37. சாமி சிதம்பரனார், சித்தர்கள் கண்ட விஞ்ஞான தத்துவம், ப.80.

38. கடுவெளிச்சித்தர் பாடல், 33.

39. குதம்பைச் சித்தர் பாடல், 83.

40. மேற்படி. 84.

41. குதம்பைச் சித்தர் பாடல், 85.

42. மேற்படி. 86.

43. மேற்படி. 87.

44. மேற்படி. 90.

45. மேற்படி. 116.

46. மேற்படி. 117.

47, பட்டினத்தார், அன்னை இறந்தபோது பாடிய பாடல், 1.

48. மேற்படி. 2.

49. மேற்படி. 3.

50. மேற்படி, 4.

51. மேற்படி, 5.

52, மேற்படி. 6.

53. மேற்படி. 7.

54. மேற்படி. 8.

55. மேற்படி. 9.

56. மேற்படி. 10.

57. சிவவாக்கியார் பாடல், 23.

58. மேற்படி. 24.

59. மேற்படி, 25.

60. மேற்படி. 48.

61. மேற்படி. 80.

62. சிவவாக்கியார் பாடல், 83.

63. பட்டினத்தார் பாடல், 11.

64. மேற்படி. 25.

65. மேற்படி. 51.

66. மேற்படி. 101.

67. மேற்படி. 103.

68. கொங்கணர், வாலைக்கும்மி, 82.

69. பட்டினத்தார் பாடல் (பொது), 14.

70. மேற்படி. 138.

71. பட்டினத்தார் பாடல் (பொது), 14.

72. மேற்படி. 6.

73. மேற்படி. 17.

74. பாம்பாட்டிச் சித்தர் பாடல், 40.

75. மேற்படி. 41.

76. மேற்படி. 42.

77. மேற்படி. 43.

78. மேற்படி. 44.

79. மேற்படி. 45.

80. மேற்படி. 46.

81. மேற்படி. 47.

82. மேற்படி. 48.

83. பாம்பாட்டிச் சித்தர் பாடல், 60.

84. மேற்படி. 61.

85. மேற்படி. 62.

86. பாம்பாட்டிச் சித்தர் பாடல், 63.

87. மேற்படி. 64.

88, மேற்படி. 67.

89. கடுவெளிச்சித்தர், ஆனந்தக் களிப்பு, 3.

90. இடைக்காட்டுச் சித்தர் பாடல், 50.

91. குதம்பைச் சித்தர் பாடல், 62.

92. மேற்படி. 67.

93. மேற்படி. 69.

94. மேற்படி. 70.

95. மேற்படி. 73.

96. மேற்படி. 82.

# சித்தர் பாடல்களும் சமுதாய மேம்பாடும்

## 5.0. முன்னுரை

சித்தர்கள் 'எம் கடன் பணிசெய்து கிடப்பதே' என்னும் கொள்கையுடையவர்களாவர். மனித சமுதாயம் வளமோடும் நலமோடும் வாழ்வாங்கு வாழவேண்டும் என்ற நன்னோக்கில் பாடல்கள் பலவற்றைப் புனைந்த பெருமைக்குரியவர்கள்; போலிச் சாமியார்களை தோலுரித்துக் காட்டியவர்கள்; பெண்ணின் பெருமை பேசியவர்கள்; அவர்களது நற்கருத்துக்கள் எக்காலத்தவர்க்கும் ஏற்புடையனவாகும் என்று கூறின் மிகையாகாது.

## 5.1. சமுதாயம் - சொல்லும் பொருளும்

சமுதாயம் என்பது பல குடும்பங்கள் அருகருகே சேர்ந்து வாழும் ஒரு கூட்டமைப்பு ஆகும். தனிமனிதராக வாழாமல் தனக்கென உள்ள குடும்ப உறுவுகளோடும் மற்ற இன மக்களோடும் ஒரு பகுதியில் கூட்டமாக, பல குடும்பங்களைச் சேர்ந்து வாழ்வதற்குச் சமுதாயம் என்று பெயர். ஒரே பகுதியில் சேர்ந்து வாழும்போது பல நன்மைகள் கிடைக்கின்றன. ஒற்றுமை உணர்வு வலுப்பெறுகின்றது. ஒருவருக்கொருவர் உதவி செய்தல், எண்ணங்களைப் பகிர்தல், அவசர ஆபத்துக் காலங்களில் துணை நிற்றல், அனைவரும் இணைந்து சமுதாய வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் பாடுபடல் எனப் பல்வேறு நன்மைகள் ஏற்படுகின்றன. மேலும்,

*"சமுதாயமானது பல்வேறு நெறிமுறைகளையும் மரபுகளையும் பழக்க வழக்கங்களையும் கொண்ட ஓர் அமைப்பு. அவ்வமைப்பு அதிகாரமும், ஒருவர் மற்றவர்க்கு உதவும் இயல்பும் கொண்டதாகக் காணப்படுகிறது. அது மக்களினத்தில் பல்வேறு பிரிவுகளையும் குழுக்களையும் கொண்டு விளங்குவதாகும் என்பர். சித்தர்களின் பாடல் வழிப் புலனாகும் சமுதாயமும் பல்வேறு பிரிவுகளையும் சாதிகளையும் வெளிக் காட்டுகின்றன."*[1]

எனவே சித்தர்களின் பாடல்களில் மிளிருகின்ற சமுதாய மேம்பாட்டுச் சிந்தனைகள் ஈண்டு ஆராயப் பெறுகின்றன.

**5.2 சித்தர்களும் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனையும்**

சித்தர்கள் பலர் சமுதாய ஏற்றத்திற்கான சிந்தனைகளைக் கொண்டிருந்தமையை அவர்களது பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.

**அகத்தியச் சித்தரின் சமுதாயச் சிந்தனைகள்**

சமுதாய மக்கள்மீது அகத்தியர் கொண்ட சிந்தனை அளப்பரியது. திருமூலர் 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்னும் கொள்கையை அடியொற்றி வாழ்ந்தவர் என்பதனை அவரது பாடலடி புலப்படுத்துகிறது. ஒருவனே தேவன் என்று இருக்கின்ற நிலையில் அங்கு சாதி, மத, இன பேதமென்று எவையுமில்லை. ஒற்றுமையை வலுப்படுத்தும். ஒருவர் மீது ஒருவர்க்கு அன்பும், பரிவும் ஏற்படும். ஆனால் வெவ்வேறு

தெய்வங்கள் என்ற நிலை வரும்போது சமுதாயத்தில் ஏராளமான பிரிவினைகள் தோன்றி மக்களிடையே காணும் ஒற்றுமையைத் தகர்த்துப் பொடிப்பொடியாக்கிவிடும். இவ்வுண்மையினைத் தெளிவாக உணர்ந்த அகத்தியச் சித்தர்.

*''ஒருவனென்றே தெய்வத்தை வணங்க வேணும்*
*உத்தமனாய்ப் பூமிதனில் இருக்க வேணும்*
*பருவமதில் சேறுபயிர் செய்ய வேணும்*
*பாழிலே மனத்தை விடான் பரமஞானி''*[2]

என்று கூறுகின்றார். ஒருவர் தாழ்ந்த குலத்தில் பிறந்திருந்தாலும் ஒழுக்கமுள்ளவராக வாழ்ந்து காட்டினால் அவரே பரமயோகி என்று அகத்தியச் சித்தர் குறிப்பிடுகிறார். இதனை,

*''சீலமுள்ள புலத்தியனே பரம யோகி''*[3]

என்னும் பாடலடி புலப்படுத்துகின்றது. எக்குலத்தில் பிறந்தவராக இருப்பினும் ஒழுக்கத்தை உயிராகக் கருதி வாழ்பவர்கள் அனைவருமே பரமயோகியாவர் என்னும் அகத்தியச் சித்தரின் கூற்று அவர் சமுதாய முன்னேற்றத்தின்மீது கொண்டிருந்த நாட்டத்தை வெளிப்படுத்துகின்றது.

ஆடவர் சமுதாயத்தில் ஒருசிலர் காமவெறியர்களாய் விளங்குவதனைக் கண்ட அகத்தியச் சித்தர்.

*''மாடுதான் ஆனாலும் ஒருபோக் குண்டு*

*மனிதனுக்கோ அவ்வளவுந் தெரியா தப்பா!*

*நாடுமெத்த நரகம்என்பார் சொர்க்கம் என்பார்*

*நல்வினையோ தீவினையோ எண்ண மாட்டார்''*[4]

என மனம் கனன்று பாடுகின்றார். இத்தகையோர் காளை மாடுகளை விடக் கேவலமாக இருக்கின்றார்களே என்று அவர் கவலைப்படுகின்றார். ஒரு பசுமாடு சினையானால் அல்லது கருவுற்று இருந்தால் அப்பசுமாட்டினை எந்த ஒரு காளைமாடுமே புணருவதில்லை. மீறி அருகே வந்தாலும் பசுமாட்டை நுகர்ந்து பார்த்துவிட்டு விலகிச் சென்றுவிடும். இது பலரும் அறிந்த உண்மை. பேசவும் சிந்திக்கவும் தெரியாத மாடே புரிந்து உணர்ந்து நடந்துகொள்ளும்போது ஆறறிவு படைத்த மானிடருள் ஒரு சிலர் அவ்வாறு நடந்து கொள்வதில்லை என்கிறார் அகத்தியச் சித்தர். அவரது இச்சிந்தனை ஆணினம் திருந்தி வாழவும் பெண்ணினம் களங்கமுறாமல் வாழவும் வழிகாட்டுவதற்கு உரியது எனலாம்.

சமுதாயத்தின் அடிமட்டத்தில் வாழ்கின்ற மக்களுக்கு நூலறிவைப் போதிக்கா விட்டால் அவர்கள் அறியாமையில் உழன்று அழிந்தொழிவர். தம்மை மேற்சாதியினர் என்று கூறிக்கொள்வோர் ஏழை எளிய மக்களின் உழைப்பில் உண்டு வாழ்கின்றனர். மேற்சாதி, கீழ்ச்சாதி என்னும் பகுப்பெல்லாம் இதற்குத்தான் என்பதனை,

*"பிழைப்பதற்கு நூல்பலவும் சொல்லா விட்டால்*

*பூரணத்தை அறியாமல் இறப்பா ரென்றும்*

*உழைப்பதற்கு நூல்கட்டிப் போடா விட்டால்*

*உலக்தில் புத்திகெட்டே அலைவர் என்றும்*

*தழைப்பதற்குச் சாதி என்றும் விந்துவென்றும்*

*தந்தைதாய் பிள்ளையென்றும் பாரில் என்றும்*

*உழைப்பதற்குச் சொன்னதல்லால் கதிவேறில்லை*

*உத்தமனே அறிந்தோர்கள் பாடினாரே"*[5]

என்னும் பாடல்வழி அகத்தியச் சித்தர் அறிவுறுத்துகின்றார்.

சமுதாயத்தில் சில குடும்பங்களில் உள்ளோர் சொத்து, கடன், நிலம், பணம், மனைவி, மக்கள், உறவினர் என எவர் மூலமாகவோ எதன் மூலமாகவோ மன நெருக்கடிக்கு ஆளாகிச் சிலர் குடும்பத்தை வெறுத்துத் துறவு வாழ்க்கை வாழ முற்படுகின்றனர். தத்துவத்தைப் பற்றிப் பெரிதாக அறிந்தவர்போல் வாய்கிழியப் பேசி ஏழைக் குடிசைகள் தோறும் சென்று பிச்சையெடுத்து உண்ண முற்படுகின்றனர். இத்தகையோரது பேச்சுக்களைக் கேட்டு எவரும் மனக்குழப்பத்திற்கு ஆளாகி விடாமல் உடலை ஓம்பி வாழுங்கள் என்று அகத்தியச் சித்தர் அறிவுறுத்துகின்றார். அவரது இவ்வறிவுரை மக்கட் சமுதாயத்தின்மேல் அவருக்குள்ள ஈடுபாட்டினையே காட்டுகின்றது. அவரது ஈடுபாட்டினை,

*"வாழாமல் உலகம் விட்டு வேடம்பூண்டு*
*வயிற்றுக்காக வாய்ஞானம் பேசிப் பேசித்*
*தாழ்வான குடிதோறும் இரப்பான் மட்டை*
*தமையறியாச் சண்டாளர் முழுமாடப்பா*
*பாழாகப் பாவிகளின் சொற்கேளாதே*
*பதறாதே வயிற்றுக்காக மயங்கிடாதே*
*கேளாதே பேச்செலாம் கேட்டுக் கேட்டுக்*
*கலங்காதே உடல் உயிரென்று உரைத்திடாதே'*[6]

என்னும் பாடல்வழி அறிய முடிகின்றது. அகத்தியச் சித்தர் மனித சமுதாயத்தின்மீது பெரும் அக்கறைகொண்டு பாடியுள்ள கருத்துக்களை மக்கள் அறிந்து திருந்தி நல்வாழ்வு வாழ்வது இன்றியமையாததாகும்.

**5.3. சிவவாக்கியாரின் சமூகச் சிந்தனை**

சிவவாக்கியார் தம் பாடல்களில் பேச்சு மொழியையே முற்றிலும் கையாண்டு தமிழிலக்கியத்தில் ஒரு புதிய நடையைத் தந்துள்ளார். தமது கருத்துக்கள் பாமர மக்களையும் சென்றடைய வேண்டும் என்ற நல்ல எண்ணமே இதற்குக் காரணமாகும். இவரது பாடல் கருத்துக்கள் சுற்றி வளைக்காமல் அம்புபோல நேராகச் சென்று இலக்கை எய்யவல்ல சக்தி வாய்ந்தவையாகும்.

எவரோ சிலரால் வலிந்து புகுத்தப்பட்ட சாதி, மதப் பிரிவுகளால் மக்கள் பெருந்துன்பத்திற்கு ஆளாகின்றனர். ஒருவன் வேறொரு

சாதியாரைப் பார்த்துச் சற்று இழிவாகப் பேசினாலே நாட்டில் குருதி பெருக்கெடுத்து ஓடுகிறது. ஒரு மதத்தில் கூறப்பட்டுள்ள கருத்துக்களைப் பகுத்தறிவு நோக்கில் ஆராய்ந்து கூறிவிட்டாலும், நம் மதத்தைக் கேவலமாகப் பேசிவிட்டார் என்று மக்கள் ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டு மாய்ந்து போகின்றனர். இதைக் கண்ணுற்ற சிவவாக்கியார் மக்களை ஒன்றுபடுத்தும் எண்ணத்தில்,

*''எங்கள்தேவர் உங்கள்தேவர் என்றிரண்டு தேவரோ*
*அங்கும் இங்குமாய் இரண்டுதேவர் இருப்பரோ?*
*அங்குமிங்கும் ஆகிநின்ற ஆதிமூர்த்தி ஒன்றலோ?*
*வங்கவாரம் சொன்னபேர்கள் வாய்புழுத்து மாள்வாரே''*[7]

எனப் பாடுகின்றார். உலகில் ஆதிமூலம் என்பது ஒன்றே ஒன்றுதான். அவ்வாறு இருக்கையில் நீங்கள் உங்கள் தேவர் எங்கள் தேவர் என்று வாதிட்டு ஏன் மாய்ந்து போகின்றீர்கள். இனிமேலும் இதுபோன்ற ஆரவாரத்தில் எவராவது ஈடுபடுவீர்களேயாயின் உங்களது வாய் புழுத்துப் போகும் என எச்சரிக்கையிடுவதனைக் காணமுடிகின்றது.

சித்தர்கள், சமுதாயத்தில் நடக்கின்ற ஒவ்வொரு நிகழ்வையும் கண்காணித்துள்ளனர். உலகில் அன்னதானம் செய்துவருவோர் பலர் உள்ளனர். பணம் படைத்தோர் துரைத்தனம் செய்யலாம். ஆனால் பிற உயிர்களைத் துன்பப்படுத்திக் கை, கால், கண், முதலிய உறுப்புகளை

விண்ணம் செய்பவர்கள் வெந்நரகில் வெந்துவீழ்வர் என்னும் உண்மையினைச் சிவவாக்கியார்,

*''அன்னமிட்ட பேரெல்லாம் அனேககோடி வாழவே*
*சொன்னமிட்ட பேரெல்லாம் துரைத்தனங்கள் பண்ணலாம்*
*விண்ணமிட்ட பேரெல்லாம் வீழ்வர் வெந்நரகிலே''*[8]

என்னும் பாடலடிகளின் வாயிலாக அறிவுறுத்துகின்றார்.

பிறிதொரு பாடலில் சிவவாக்கியார், 'தருமம் தலைக்காக்கும்' என்ற சிந்தனையை வலியுறுத்துகிறார்.

*''ஆடுமாடு தேடினும் ஆனைசேனை தேடினும்*
*கோடிவாசி தேடினும் குறுக்கேவந்து நிற்குமோ?*
*ஓடியிட்ட பிச்சையும் உகந்து செய்த தர்மமும்*
*சாடிவிட்ட குதிரைபோல் தர்மம்வந்து தாங்குமே.''*[9]

ஒருவர் ஆடு மாடு யானை சேனை எனக் கோடி செல்வம் சேர்த்தாலும் விபத்து மற்றும் மரண காலங்களில் அவை அவரைக் காப்பதில்லை. இல்லையென்று வந்தோர்க்கு விரும்பி ஓடியிட்ட பிச்சையும், மனமுவந்து செய்த அறச்செயல்களும் ஆபத்துக் காலங்களில் துணை நிற்கும். எனவே மக்கள் அறச் செயல்களைச் செய்ய வேண்டும் என்று சிவவாக்கியார் குறிப்பிடுகின்றார்.

குளத்தில் நீர் இறைக்கும்போது இரண்டு கைகளும் இணைந்து செயல்பட்டால்தான் நன்றாக இறைக்க முடியும். அதுபோல மக்கள் மன மாசுகளை அகற்றிவிட்டு நான் நீ என்ற பேதமின்றிச் செயல்பட்டால் சோதியோடு கலக்க முடியும் என்று சிவவாக்கியார் பின்வரும்பாடல் வாயிலாக அறிவுறுத்துகின்றார்.

*''கயத்துநீர் இறைக்குறீர் கைகள் சேர்ந்து நிற்பதேன்*
*மனத்துள் ஈரம் ஒன்றிலாத மதியிலாத மாந்தர்காள்*
*அகத்துள் ஈரம் கொண்டு அழுக்கறுக்க வல்லீரேல்*
*நினைத்திருந்த சோதியும் நீயும்நானும் ஒன்றலோ''*[10]

எனவும்,

*''சருகருந்தி நீர்குடித்துச் சாரல்வாழ் தவசிகாள்!*
*சருகருந்தில் தேகங்குன்றிச் சஞ்சலம் உண்டாகுமே!*
*வருவிருந்தோடு உண்டுஉடுத்தி வளர்மனை சுகிப்பிரேல்*
*வருவிருந்தோன் ஈசனாகி வாழ்வளிக்கும் சிவாயமே''*[11]

மலைச் சாரல்களில் கிடைக்கின்ற தூதுவளை, துளசிபோன்ற இலைகளைப் பச்சையாகத் தின்றும், அல்லது காய்ந்த சருகு இலைகளைப் பொடியாகச் செய்தும் தின்றும், தண்ணீர் குடித்தும் துறவிகள் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் இலைச் சருகுகளை உண்ணாது இருப்பார்களேயானால் நோய்வாய்ப்பட்டுத் துன்பமடைவர். மனைவி மக்கள் உள்ளிட்டோர்

நிறைந்த குடும்பத்தைத் தவிக்க விட்டுவிட்டு மலைச்சாரலில் வந்து தங்கிக் குளிரிலும், மழையிலும் வெயிலிலும் துன்பப்பட்டுத் தழைகளைத் தின்று உடலைக் காக்கும் செயல் பயனற்றதாகும். வீட்டுக்கு வருகின்ற விருந்தினரை உபசரித்தும், தாமும் உண்டும், உடுத்தியும் வாழும் இல்லற வாழ்க்கையை இத்தகையோர் மேற்கொண்டாலே ஈசன் அருள் புரிவான். எனவே துறவியாய் வாழ்வதைவிட இல்லற வாழ்வே சிறந்தது என்று அவர்களுக்குச் சிவவாக்கியார் அறிவுறுத்துகின்றார்.

''பிறர்பொருளை நினைக்கும் அற்பர்கள் நரகத்திற்குச் செல்வர்'' என்று சிவவாக்கியார் குறிப்பிடுகின்றார்.

***''ஆசைகொண்டு அனுதினமும் அன்னியர் பொருளினை***
***மோசம் செய்து அபகரிக்க முற்றிலும் அலைபவர்***
***பூசையோடு நேமநிட்டை பூரிக்கச் செய்பாதகர்***
***காசினியில் ஏழ்நரகைக் காத்திருப்ப துண்மையே''***[12]

அளவுக்கு அதிகமான ஆசையால் பிறர் பொருளை செய்து கோயில்கள் தோறும் சென்று பூசைகள் செய்தாலும் அவர்களுக்கு நன்மை கிட்டாது. நரகம்தான் கிட்டும் என்று கூறுவதனால் இத்தகைய தவறுகளைச் செய்பவர்கள் மனம் திருந்தி நல்வாழ்வு வாழ முற்படுவர் என்பது திண்ணம். சிவவாக்கியாரின் இவ்வறிவுரை மனிதவள மேம்பாட்டில் அவருக்குள்ள அக்கறையைக் காட்டுகின்றது.

**5.31. சித்தர் பாடல்கள் காட்டும் போலிச் சாமியார்களின் நிலை**

எல்லா மதங்களிலும் போலிச்சாமியார்கள் உள்ளமையைக் காணமுடிகின்றது. ஏமாறும் மக்கள் உள்ளவரை ஏமாற்றும் போலிச்சாமியார்களும் இருந்து கொண்டுதான் இருப்பர். இத்தகையோரைப் பற்றிச் சிவவாக்கியார்,

*''யோகசாடை காட்டுவார் உயரவும் எழும்புவார்*
*வேகமாக அட்டசித்து வித்தைகற்று நெட்டுவார்*
*மோகம்கொண்டு மாதரின் மூத்திரப்பை சிக்கிப்பின்*
*பேயது பிடித்தவர்போல் பேருலகில் சாவரே''*[13]

என்னும் பாடல்வழிப் படம்பிடித்துக் காட்டுகின்றார்.

போலிச் சாமியார்கள் துறவிவேடங்கொண்டு சில வித்தைகளைக் காட்டுவார்கள். பெண்கள் மீது மோகங்கொண்டு அவர்களிடையே சிக்கிப் பின்னர் பேய்பிடித்தவர் போல அதே நினைவில் உழன்று சாவார்கள் என்று குறிப்பிட்டிருப்பது முற்றிலும் உண்மையேயாகும்.

*''காயகாயம் உண்பதாகக் கண்டவர் மதித்திட*
*மாயவித்தை செய்வதுஎங்கு மடிப்புமோசம் செய்பவர்*
*நேயமாகக் கஞ்சா அடித்து நேர்அபினைத் தின்பதால்*
*நாயதாக நக்கிமுக்கி நாட்டினில் அலைவரே''*[14]

என்னும் சிவவாக்கியாரின் பாடல் போலிச்சாமியார்களின் ஒழுக்கக் கேடுகளை வெளிப்படுத்துகின்றது. போலிச்சாமியார்கள் என்றும் இளமையோடு இருக்க வேண்டும் என்பதற்காகக் காயகல்பம் உண்டு வாழ்வதாகக் கூறுவர்; ஆனால் எவருக்கும் தெரியாமல் போதைப் பொருள்களான கஞ்சாவையும், அபினையும் உட்கொள்வர். மேலும் அவர்கள் பிறர்பொருளை அபகரிப்பதைப் பின்வரும் பாடலில் எடுத்துரைக்கிறார்.

*''நீரினால் குமிழிஒத்த நிலையில்லாத காயமென்று*
*ஊரினில் பறையடித்து ஊதாரியாய்த் திரிபவர்*
*சீரினில் உனக்குஞான சித்திசெய்வேன் பாரென*
*நேரினில் பிறர்பொருளை நீளவும்கைப் பற்றுவார்''*[15]

ஊரினில் ஊதாரிகளாகத் திரியும் அவர்கள் ஏதோ தத்துவ உண்மைகளை அறிந்தவர்கள்போல் பிதற்றுவர்; நீர்மேல் எழும்புகின்ற குமிழி நிலையில்லாததுபோல இந்த மானுட உடம்பும் நிலையில்லாதது என்பர் மக்களில் சிலரிடம் ஞானசித்தி செய்கின்றேன் என்று கூறி அவர்களது வீட்டிற்குச் சென்று அவ்வீடுகளிலுள்ள பொருட்களைத் திருடிக் கொண்டு வந்துவிடுவார்கள் என்று போலிச் சாமியார்களின் பல உண்மை நிலையினைச் சிவவாக்கியர் விளக்குகின்றார். சிவவாக்கியார் சமுதாயத்தின்மீது கொண்ட பற்றின் காரணத்தால் போலிச் சாமியார்களிடம் ஏமாந்து விடக்கூடாது என்று அறிவுறுத்துவது வரவேற்கத்தக்கதாகும். சிவவாக்கியார்,

*''காவியும் சடைமுடி கமண்டலங்கள் ஆசனம்*

*தாவு ருத்திராட்சம் யோக தண்டுகொண்ட மாடுகள்*

*தேவியை அலையவிட்டுத் தேசமெங்கும் சுற்றியே*

*பாவியென்ன வீடெலாம் பருக்கைகேட் டலைவரே''*[16]

என்னும் இப்பாடலில் போலித் துறவிகளைக் காவி உடை, சடைமுடி, கையில் கமண்டலம், கழுத்தில் உருத்திராட்ச மாலைகள், யோகத் தண்டு, முதலியவற்றைக் கொண்ட அறிவிலாத மாடுகள் என்று சாடுகின்றார். ஏனெனில் இவர்கள் தங்கள் மனைவியரைத் தவிக்கும்படி விட்டுவிட்டு ஊரைவிட்டு ஓடி நாடுமுழுவதும் சுற்றிப் பலவீடுகளுக்கு சென்று சோறுபோடுங்கம்மா என்று கூவி அலைபவர்கள். குடும்பக் கடமையை மறந்து மக்களைத் துறந்து துறவி வேடம் பூண்ட இத்தகைய ஈனர்களால் நாடும் வீடும் கேடுறும் என்பது சிவவாக்கியாரின் முடிவாகும்.

*''முத்திசேரச் சித்திஇங்கு முன்னளிப்பேன் பாரெனச்*

*சத்தியங்கள் சொல்லியெங்கும் சாமிவேடம் பூண்டவர்*

*நித்தியம் வயிறுவளர்க்க நீதிஞானம் பேசியே*

*புத்தியாய்ப் பணம்பறித்து பாழ்நரகில் வீழ்வரே.''*[17]

உனக்கு முத்தி கிடைக்க யான் சித்தியளிப்பேன் எனக் கூறும் போலிச் சாமியார்கள் ஏமாற்றிப் பணம்பறித்துப் பாழ்நரகில் வீழ்வர் என்பது சிவவாக்கியாரின் முடிவாகும்.

சிவவாக்கியாரின் மேற்கண்ட பாடல்கள் அனைத்துமே சமூகச் சிந்தனையின் வெளிப்பாடாகவே இருப்பதனை மறுக்கவியலாது.

**5.4. சித்தர்களும் மனிதநேயச் சிந்தனையும்**

கொங்கணர் ஏழை எளியவர்கள்மீது இரக்கச்சிந்தனை கொண்டவர் என்பதற்கு,

*“ஏழைப் பனாதிகள் இல்லையென் றாலவர்க்கு*
*இருந்தால் அன்னம் கொடுக்க வேண்டும்*
*நாளையென் றுசொல்ல லாகா தேயென்று*
*நான்மறை வேதம் முழங்குதடி”*[18]

என்னும் பாடல் தக்க சான்றாகும்.

ஏதுமில்லா ஏழை எளியவர்கள் கேட்கும்போது உணவளித்து அவர்களது பசியினைப் போக்கவேண்டும். அவ்வாறின்றி அவர்களை அலைக்கழிப்பது அறிவற்ற செயலாகும் என்று கொங்கணவர் சுட்டுகின்றார்.

*“பஞ்சை பனாதி யடியாதே - அந்தப்*
*பாவந் தொலைய முடியாதே*
*தஞ்சமென் றோரைக் கெடுக்காதே யார்க்கும்*
*வஞ்சனை செய்ய நினையாதே”*[19]

என்னும் கொங்கணவரின் பாடல் வலியார் மெலியாரைத் துன்புறுத்துவதனைச் சாடுகின்றது.

ஏழைச் சமூகத்தின் மீது திருமூலர் கொண்ட மனித நேயச்சிந்தனையைக் கீழ்க்காணும் அவரது பாடலிலும் காணமுடிகின்றது.

*"படமாடக் கோயில் பகவற்கு ஒன்றுஈயில்*
*நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்குஆகா*
*நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்றுஈயில்*
*படமாடக் கோயில் பகவற்கு அங்காமே"*[20]

என்னும் பாடலில் திருமூலர் மனித நேயத்தைத் தெள்ளத் தெளிவாகச் சொல்லுகின்றார். கோயில்களிலுள்ள திருவுருவங்களுக்குப் படைக்கும் திருவமுது இறைவனைச் சென்று சேர்வதில்லை. ஆனால் நடமாடும் கோயிலாக உள்ள மனிதர்க்கு ஒன்று அளித்தால் அது இறைவனைச் சென்று சேர்கின்றது என்று திருமூலர் குறிப்பிடுவது தேம்பியழும் மனித நேயத்தைத் தேற்றுகின்ற தேன்தமிழ்க் குரலாய் உள்ளதை அறிய முடிகின்றது. படமாடும் கோயில் நடமாடும் கோயில் என இரண்டையும் ஒப்பிட்டு நடமாடுங்கோயிலே சிறந்தது என்று திருமூலர் கூறுவது ஈண்டு ஒப்புநோக்கத் தக்கதாகும்.

*"ஈரம் உடையவர் காண்பர் இறைவன் திருவடி"*[21]

என்பதும் திருமூலரின் அனுபவக் கூற்றாகும்.

மேலும் திருமூலர்,

*''யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை*
*யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை*
*யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி*
*யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே''*[22]

என்றியம்புகின்றார். தான் உண்பதற்குமுன் மற்றோர் உயிருக்கு ஒரு பிடி சோறு இடவேண்டும் என்று திருமூலரின் பாடலில் இருந்து வெளிப்படுவதனைக் காணும்போது உலக உயிர்கள்மீது சித்தர் கொண்டிருந்த பற்று புலனாகின்றது. தற்போது ஒருகிலோ அரிசி ஒரு ரூபாய்க்கு வழங்கும் திட்டத்திற்கும் திருமூலரின் கருத்து முன்னோடியாக இப்பதனைக் காண்கிறோம்.

*''.............................................வரியது*
*அவ்வுயிர்க்கு அன்பினை யாயின் ஆய்தொடி*
*எவ்வுயிர்க் காயினும் இரங்கல் வேண்டும்''*[23]

என்று மணிமேகலையில் சீத்தலைச் சாத்தனாரும்,

*''நீரின்றி அமையா யாக்கைக் கெல்லாம்*
*உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே''*[24]

என்று புறநானூறும்,

*''அற்றார் அழிபசி தீர்த்தல்''*[25]

எனத் திருவள்ளுவரும்,

*''அன்னமிட்ட பேரெலாம் அனேககோடி வாழவே''*[26]

என்று சிவவாக்கியாரும் வாழ்த்துகின்றனர். இவ்வாறு சித்தர்களும், பண்டைத் தமிழ்ப் புலவர்களும் உலக உயிர்கள்மீது பற்றுக் கொண்டிருந்தனர் என்பதும் நன்கு புலனாகின்றது.

*''கண்டாரை நோக்கிக் கருத்தோடு இருப்பார்க்குக்*
*கொண்டாட்டம் ஏதுக்கடி குதம்பாய்*
*கொண்டாட்டம் ஏதுக்கடி''*[27]

என்ற குதம்பைச் சித்தரின் பாடலும் பிறர் கண்ணிலிருந்து வழியும் நீரைக் கண்டு அவருக்கு வேண்டிய உதவி செய்வதே சிறப்பு என்று சுட்டுகின்றது. அதைவிடுத்து இறைவனுக்கு ஏன் கொண்டாட்டம் செய்ய வேண்டும் என்றும் வினவுகின்றது. மேலும்,

*''தாவார மில்லை தனக்கொரு வீடில்லை*
*தேவாரம் ஏதுக்கடி குதம்பாய்*
*தேவாரம் ஏதுக்கடி''*[28]

எனும் குதம்பைச் சித்தரின் பாடலடிகள் மனிதாபிமான உணர்வை வெளிப்படுத்துகின்றன. ''இதனைத் தா+வாரம் (தா-துன்பம்; வாரம்-பங்கு; வீடு-விடுதலை) என்று பொருள் கொண்டு பிற உயிர்கள்

படுகின்ற துன்பத்தில் தனக்கென ஒருபங்கு கொண்டு கேளாதவர்களுக்கு விடுதலைகிட்டாது. இத்தகையவர் தேவாரத்தைச் சொல்லிக் கொண்டிருப்பதால் பயன் ஒன்றுமில்லை''[29] எனப் பொருள் கூறுகிறார். இரா. கலாவதி

**5.5. சமுதாயம் மேம்படச் சித்தர்கள் கூறும் நல்லுரைகள்**

செம்மையான மனம் படைத்தவர்கள் சித்தர்கள். மானிட வாழ்க்கைக்கு இனியனவும், இன்னாதனவுமன பல அறிவுரைகளை அவர்கள் வழங்கிச் சென்றுள்ளனர்.

கடுவெளிச் சித்தர்,

*''நல்லவர் தம்மைத் தள்ளாதே*
*பொல்லாங்கில் ஒன்றும் கொள்ளாதே''*[30]

என்றும்,

*''பிச்சையென் றொன்றுங் கேளாதே - எழில்*
*பெண்ணாசை கொண்டு பெருக்க மாளாதே''*[31]

எனவும்,

*''மைவிழியாரைச் சாராதே''*[32]

எனவும்,

*''வைதோரைக் கூட வையாதே - இந்த*

*வையம் முழுவதும் பொய்த்தாலும் பொய்யாதே*

*வெய்ய வினைகள் செய்யாதே - கல்லை*

*வீணிற் பறவைகள் மீதில் எய்யாதே''*[33]

எனவும்,

*''பாம்பினைப் பற்றி யாட்டாதே - உன்றன்*

*பத்தினி மார்களைப் பழித்துக் காட்டாதே''*[34]

என்றும் கடுவெளிச் சித்தர் கூறும் அறிவுரைகள் ஏற்புடையதாகும். பத்திரகிரியாரும்,

*''மன்னுயிரைக் கொன்று வதைத்துண்டு உழலாமல்*

*தன்னுயிர் போலெண்ணித் தவம்முடிப்ப தெக்காலம்''*[35]

என்று மன்னுயிர்களைத் தம்முயிர்போல் என்னுகின்ற மனப்பக்குவத்தை மக்கள் பெறவேண்டுமென்று அறிவுறுத்துகின்றார்.

மனித உயிரை எமன் என்றைக்காவது கொண்டோடிப் போவான். எனவே பாவச் செயல்களைச் செய்யாதிருத்தல் வேண்டும் என்று கடுவெளிச் சித்தர் மக்களுக்கு அறிவுரை புகட்டுகின்றார். இதனை,

*''பாபஞ் செய்யாதிரு மனமே - நாளை*

*கோபஞ் செய்தே யமன்*

*கொண்டோடிப் போவான்*

*பாவஞ் செய்யாதிரு மனமே''*[36]

என்றார்.

முடிந்தவரையில் யாருக்கும் வயிறெரிந்து சாபமிடாதே. ஒவ்வொன்றும் விதிப்படிதான் நடக்கும். ஆகையால் உன் வயிற்றெரிச்சல் அந்த மனிதனைத் துன்பத்திற்கு ஆட்படுத்தும் என்பதைனையும் அறிந்து கோபத்தைக் கட்டுப்படுத்து என்றும், எப்பொருள் மீதும் மனத்திலே ஆசையே வளர்க்காதே அதனாலும் துன்பமே வரும் என்றும் கூறுவது ஏற்படையதாகும்.

*''சாபங் கொடுத்திட லாமோ - விதி*
*தன்னை நம்மாலே தடுத்திட லாமோ*
*கோபந் தொடுத்திட லாமோ - இச்சை*
*கொள்ளக் கருத்தை கொடுத்திட லாமோ''*[37]

என்று கடுவெளிச் சித்தர் கூறுவார். மற்றொரு பாடலில் உன்னை நாடி யார் வந்தாலும் அவர்களுக்கு ஆனந்தம் தருகின்ற ஆறுதல் அளிக்கின்ற சொற்களையே கூறு என்று கடுவெளிச் சித்தர் குறிப்பிடுகின்றார். இது மக்கள்மீது அதிலும் துன்பப்படுகின்ற மக்கள்மீது கடுவெளிச்சித்தர் கொண்டிருந்த ஈடுபாட்டையும், அன்பையும் வெளிப்படுத்துவனைக் காணமுடிகின்றது. இதனை,

*''உன்னை அண்டினோர்க்கு ஆனந்தமாம் வழிகூறு''*[38]

என்னும் பாடலடி புலப்படுத்துகின்றது.

*''சொல்லரும் சூதுபொய் மோசம் - செய்தால்*

*சுற்றத்தை முற்றாய்த் துடைத்திடும் நாசம்.''*[39]

சூது, பொய், மோசம் முதலிய தகாத செயல்களைச் செய்வது பாவமாகும். எனவே எவரும் இதுபோன்ற செயல்களைச் செய்யக்கூடாது என்று எச்சரிக்கை விடுக்கின்றார். கடுவெளிச்சித்தர் மக்களுக்கு இறுதியாக,

*''பிறர்தாழும் படிக்குநீ தாழ்வைப் பண்ணாதே''*[40]

என்று கூறும் அறிவுரை ஏற்றற்குரிய அறிவுரையாகும்.

**5.6. சித்தர்களும் மனித அறச்சிந்தனையும்**

சித்தர் பாடல்களில் மனிதர்களுக்குரிய அறங்களைப் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. சமுதாயத்தில் ஒழுங்கு, அமைதி நிலைத்திடவும், சமனிலை ஒற்றுமை உருவாகிடவும் ஒவ்வொரு மனிதரும் மேற்கொள்ளும் வாழ்க்கை நெறிமுறைகள் அடிப்படையாக அமைகின்றன. தனிமனிதன் நடத்தும் ஒழுக்கமுள்ள வாழ்க்கை, சமுதாய ஒழுங்கை நாளும் வளர்த்து வலிமையுறச் செய்யும். தனிமனித வாழ்வின் ஒழுக்கக் கேடுகள் காலப்போக்கில் சமுதாய ஒழுங்கைக் கெடுத்துவிடும். சமுதாயத்திற்கு அறிவுரை கூறிய சித்தர்கள் மனிதர்களுக்கு அறத்தாறுபடுத்தும் பணியையும் செய்துள்ளனர்.

''ஒழுக்கக் கேடுகள் அனைத்திற்கும் காரணமாய் இருப்பவை ஆசையும் செருக்கும். இவ்விரண்டுக்கும் அடிப்படை, உடைமை

உணர்வு. என்றும் எல்லாம் தமக்கே உடைமையாதல் வேண்டும் என்ற பேராசையே ஒழுக்கக் கேடுகளின் ஊற்றாக இருக்கிறது. எந்த உடைமையும் எல்லாக் காலத்தும் நிலைத்திருக்காது. நிலையாமை என்ற உண்மையை உணர்ந்த மனிதர்களிடம் பேராசை எழாது. ஒழுக்கக் கேடுகளும் உருவாகாது. பிறக்கும்போது மனிதன் இம்மண்ணுலகிற்கு எதையும் கொண்டு வருவதில்லை; இறக்கும்பொழுது எதையும் இவ்வுலகிலிருந்து கொண்டு போவதுமில்லை. இடையே வந்த செல்வமெல்லாம் இறைவன் தந்தவை. இவ்வுண்மையை உணர்ந்து இடையிடையே வந்துபோகும் இப்பொருளைப் பிறர்க்குக் கொடுத்து மகிழாமல், வெறுமனே இறந்துபோவாரை என்னென்று சொல்வது என்கிறார் பட்டினத்தார்''.[41] இவ்வுண்மையினை,

***''பிறக்கும்பொழுது கொடுவந்த தில்லை பிறந்துமண்மேல்***
***இறக்கும்பொழுது கொடுபோவ தில்லை இடைநடுவில்***
***குறிக்கும்இச் செல்வம்சிவம் தந்ததென்று கொடுத்தறியாது***
***இறக்கும் குலாமருக்கும் என்சொல்லுவேன் கச்சிஏகம்பனே''***[42]

என்னும் அவரது பாடல் விளக்குகின்றது.

மனதில் தோன்றும் தீயஎண்ணங்களே ஒழுக்கக்கேடான செயல்களாக வெளிப்படுகின்றன. இவ்வுலகில் என்றும் நிலைத்திருப்போம் என்பது பொய்; என்றேனும் ஒருநாள் இவ்வுலகை விட்டொழிந்து

போகப்போவதே மெய். எனவே யாருக்கும் தீங்கு செய்ய மனத்தாலும் எண்ணாதே என்று பட்டினத்தார் வேண்டுகோள் விடுக்கின்றார். இதனை,

> *''இருப்பதுபொய் போவதுமெய் என்றெண்ணி நெஞ்சே*
> *ஒருத்தருக்கும் தீங்கினை உன்னாதே''*[43]

என்று குறிப்பிடுகின்றார்.

மனத்தூய்மையே புறந்தூய்மைகள் அனைத்திற்கும் மூலம். மனத்துக்கண் மாசிலனாக இருப்பதே அறம் என்பது வள்ளுவர் வாக்கு. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும் என்பார் இராமலிங்க அடிகளார். பாவம் செய்யாதிரு மனமே எனத்தொடங்கி அறவுரை பலவற்றைச் சொல்கிறார் கடுவெளிச்சித்தர். அகமும் புறமும் தீயவர்களாக இருப்போரைக் காட்டிலும் நல்லவர்போல் புறவேடமிடும் தீயவர்களால் வரும் ஒழுக்கக் கேடுகள் கொடுமையானவை. இதனைக் கடுவெளிச்சித்தர்,

> *''கள்ளவேடம் புனையாதே; கட்குடித்து மயங்காதே;*
> *கஞ்சாபுகை பிடியாதே. உயிர்க்கொலை செய்யாதே;*
> *உயிர்க்குதவா நூல் பயிலாதே''*[44]

என்று குறிப்பிடுகின்றார்.

சூது, பொய், மோசடி போன்ற தீச்செயல்கள் புரிகின்றவர்களின் உறவுகள் யாவும் அழிந்திடும். நல்ல அன்பும், நட்பும் உடையவரின் உறவுகள் பெருகும். அவர்கள் சமுதாய நாயகர்களாகத் திகழ்வர். "பழிவாங்கும் உணர்வு விலங்குத் தன்மையை வெளிப்படுத்தும்; தீமை செய்தாரையும் மன்னிப்பது தெய்வத்தன்மையை வெளிப்படுத்தும்; நம்மை வைதாரையும் நாம் வையக்கூடாது; பொய் பேசக்கூடாது. தனித்து நிற்க நேரினும் உண்மைபேச அஞ்சக்கூடாது."[45]

'சேர்த்துவைத்த பொருள்களும் தேடிக்கொண்ட உறவுகளும் நாம் இவ்வுலகை விட்டுப் போகும்நாளில் உடன்வாரா. நம்மைப் பற்றிப் பிறர்கூறும் வாழ்த்துரைகளும், வசைமொழிகளுமே நாம் செல்லும் உலகில் நம் வாழ்வை அமைத்துத் தரும். உடல் அழிய நேரினும் உயிர்பிரிய நேரினும் பிறர்க்குத் தீங்கு செய்து பாவி என்ற பெயர் பெறக்கூடாது'[46] என்பார் பட்டினத்தார்.

*'ஓயாமல் பொய்சொல்வார் நல்லோரை நிந்திப்பார் உற்றுப்பெற்ற*
*தாயாரை வைவர் சதிஆயிரஞ்செய்வர், சாத்திரங்கள்*
*ஆயார் பிறர்க்கு உபகாரம் செய்யார் தமைஅண்டினர்க்கு ஒன்று*
*ஈயார் இருந்தென்ன போயென்ன கச்சி ஏகம்பனே.'*[47]

பொய்சொல்பவர், சதிசெய்பவர், தாயாரை வைபவர், நன்மைசெய்யாதவர், அண்டினோர்க்கு ஈயாதவர் முதலியோர் இருந்தாலும் செத்தாலும்

ஒன்றேயாகும். அவர்களால் யாருக்கும் என்ன பயனும் விளையப் போவதில்லை என்று அறிவுரை பகர்கின்றார் பட்டினத்தார். மேலும் பட்டினத்தார்,

*''ஈயா மனிதரை ஏன்படைத்தாய் கச்சி ஏகம்பனே''*[48]

என்றும் கேட்கின்றார். இது சமூகத்தின் மேல் அவருக்குள்ள அக்கரையைக் காட்டுகின்றது.

ஒருவர் பொய் கூறினார் என்னும் உண்மைகள் தெரிந்த பிறகு அவரது வாழ்க்கை நரகமாகி விடுகின்றது. எப்படியோ எவர்மூலமாகவோ சமாதானமாகிப் பின்பு பிள்ளைகளைப் பெற்றுவிட்டுக் காப்பதற்கும் வழியில்லாமல் கைவிடவும் முடியாமல் மரப்பிளவில் மாட்டிக்கொண்ட குரங்குபோல விழிப்பர். எனவே இல்லற வாழ்க்கையில் அகப்பட்டுச் சிக்கித் தவிக்காதீர் என்று வாழ்வினை வெறுத்து அறிவுரை கூறுவதனைக் காணமுடிகின்றது. இதனை,

*''நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியம் தேடி*
*நலனொன்றும் அறியாத நாரியரைக் கூடிப்*
*பூப்பிளக்க வருகின்ற புற்றீசல் போலப்*
*புலபுலென கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்*
*காப்பதற்கும் வகையறிவீர் கைவிடவும் மாட்டீர்*
*கவர்பிளந்த மரத்துளையில் கால்நுழைத்துக் கொண்டே*
*ஆப்புஅதனை அசைத்துவிட்ட குரங்குஅதனைப் போல*
*அகப்பட்டீர் கிடந்துழல அகப்பட்டீர் நீரே''*[49]

என்னும் பட்டினத்தார் பாடல் உணர்த்துகின்றது.

*'பேராசைகொண்டு பொருள்பின் ஓடாமலும், புறம்பேசித் திரிவாரோடு கூடாமலும், நல்லோர் நட்பை நழுவ விடாமலும், கோபம் நெஞ்சில் குடியேறாமலும், நன்னெறி வழுவாமலும், கொல்லாமலும், கொன்றதைத் தின்னாமலும், கோள் சொல்லாமலும், களவு செய்யாமலும், பொய் சொல்லாமலும், பொய்ச்சொல் கேளாமலும் வாழ்கின்ற மனிதனால் அறம் தழைக்கும்; சமுதாயம் நல்வாழ்வு பெறும் எனக் கொங்கண நாயனார் குறிப்பிடுகின்றார்.'*[50]

பணபலமும் உடல்வலிவும் கொண்டவர்கள் செய்யும் ஒழுக்கக் கேடுகளுள் முதன்மையாக இருப்பது பிறன்மனை நயத்தல். இவ்வொழுக்கக் கேடு குடும்ப அமைதியையும், சமுதாய அமைப்பையும் ஒழுங்கையும் கெடுத்துச் சிதைத்துவிடும். கற்புடைய பிற பெண்டிரை மனத்தால் நயப்பதும் தவறு என்னும் உண்மையினை,

*''கற்பு மங்கையர்மேல் மனம் வையாதே,''*[51]

*''தன்வீடு இருக்க அசல்வீடு போகாதே*
*தாயார் தகப்பனை வையாதே''*[52]

என்னும் கொங்கணச்சித்தர் பாடலடிகள் சுட்டுகின்றன.

தனிமனித வாழ்வையும், சமுதாய அமைப்பையும், சமூகப்போக்கையும் நெறிப்படுத்தி அமைதி தவழும் சமனிலைச் சமுதாயம்

காண முற்பட்ட சித்தர்களைச் சமுதாயச் சிற்பிகள் என்று கொள்வது பொருந்தும்.

**5.7. சித்தர்களும் சமூக உணர்வும்**

சித்தர்கள் பலரும் தங்கள் பாடல்களைச் சமுதாயத்தின் குரல்களாகவே பதிவுசெய்துள்ளனர். ‘தாங்கள் வாழ்கின்ற காலத்து மக்களின் குரலிலும் எதிர்காலத்தில் தோன்றுகின்ற தங்களின் வழித்தோன்றல்களின் குரலிலும் பாடல்களை இயற்றியுள்ளனர். மனிதர்களைப் பக்குவம் அடையச் செய்வனவாகவும், முன்னேற்றப் பாதையில் சமுதாயம் முழுவதையுமே இறைவனை நோக்கி ஆற்றுப்படுத்துவனவாகவும் சித்தர் பாடல்கள் விளங்குகின்றன. தனிமனித உணர்வு சமூக உணர்வாக மாறும்பொழுது மனிதகுலத்தின் ஒட்டுமொத்தக் குரலாக அது ஒலிக்கின்றது. ஆன்மநிலையில் தனிச்சிறப்புப் பெற்றவர்கள் சித்தர்கள். எனினும் சமுதாயக் கேடுகளைக் கண்டு அவர்கள் மனம் வருந்தினர். ஏற்றத்தாழ்வற்ற சமுதாயத்தை உருவாக்கவும் போரும் பூசலும் அற்று மக்கள் அமைதியாக வாழவும் அறிவுரை கூறி நெறிப்படுத்தினர். இன்று நாம் கூறும் தேசிய ஒருமைப்பாடு, உலக ஒருமைப்பாடு என்பதற்கு வழிகாட்டியாக விளங்கியவர்கள் சித்தர்கள்.’’[53]

*''சித்தர்கள் எதிர்பார்க்கும் அறிவுத் தெளிவு ஏற்பட்டுவிட்டால் சமயச் சண்டைகள் மறைந்து மனித குலத்தை முழுமையாக ஒருங்கிணைக்கும்; அன்பு பெருகும்''*[54]

என்ற க. நாராயணனின் கருத்து மேற்கண்ட கூற்றை உறுதி செய்யும்.

சமுதாயத்திற்காக வாழாத எந்த ஆன்மீகவாதியையும் மக்கள் புறக்கணித்து விடுவார்கள். இவர்கள் மக்கள் துன்பச்சூழலில் சிக்கி அழிந்து போகாதவாறு நல்வழி காட்டவேண்டும். துறவு என்ற பெயரால் சமுதாயத்தை விட்டுச் சித்தர்கள் ஒதுங்கி வாழ விரும்பியதில்லை.

'சமுதாயத்தின் உள்ளிருந்து கொண்டே மோன எண்ணத்தில் வெளியே இருப்பவர்களாகவும், மோன எண்ணத்தில் திளைத்துக் கொண்டே சமுதாய உள்ளுணர்வு கொண்டவர்களாகவும் விளங்குகின்றார்கள். அத்தகையோரே உண்மையான சித்தர் என்று இரா. கலாநிதி தம் நூலில் குறிப்பிடுகின்றார்'[55] இதனை,

*'நீரிலே முளைத்தெழுந்த தாமரையில் ஓரிலை*
*நீரினோடு கூடிநின்றும் நீரிலாத வாறுபோல்*
*பாரிலே முளைத்தெழுந்த பண்டிதப் பராபரம்*
*பாரிவோடு கூடிநின்ற பண்புகண் டிருப்பாரே*

என்னும் சிவவாக்கியார் பாடல் தெளிவுறுத்தும்.''[56]

சமுதாயத்திற்கும் சித்தர்களுக்கும் உள்ள உறவினை எள்ளும் எண்ணெய் போலவும், தாமரை இலையில் தண்ணீர் போலவும், புளியம் பழமும் ஓடும் போலவும், காந்தமும் இரும்பும் போலவும், பாலும் சுவையும் போலவும், கடலுக்கும் கப்பலுக்கும் இடையே உள்ள தொடர்பு போலவும் எனப் பல்வேறு உவமைகளின் மூலம் குறிப்பிடலாம். இவை யாவுமே ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிக்கமுடியாதவாறு தொடர்புடையவை. எனவே சித்தர்களும் சமுதாயத்தோடு நெருங்கிய தொடர்புடையவர்கள் ஆவர். இவர்களின் குரல்கள் சமுதாயத்தின் குரல்களாகவே ஒலிப்பதனை அவர்களது பாடல்களின் வழி அறியமுடிகின்றது.

### 5.8. சித்தர்களும் பெண்கள் பற்றிய உயர்ந்த சிந்தனையும்

பட்டினத்தார் செல்வச் செழிப்போடு வாழ்ந்த காலத்தில் விலைமாதுகளிடம் சுகபோகத்தைத் துய்த்து வாழ்ந்தவர். பின்னாளில் அவர் மகன் ‘காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே’ என நிலையாமையினை உணர்த்திவிட்டுச் சென்ற பின்னர் வீடு, மனைவி, வசதி, வாழ்க்கை என அனைத்தையும் துறந்து துறவியானார். துறவியான பின்பு தன் மனதைக் கட்டுப்படுத்த முயன்றும் அவரால் முடியவில்லை. இரும்பைக் காந்தம் இழுப்பது போல் அவருடைய எண்ணம் உலக வாழ்க்கையையே நாடி நின்றது. இறுதியில் துறவியான பின்பு இனிமாற்றமில்லை என்ற மனஉறுதி கொண்டு பரத்தையரை இழிபொருளாக நினைத்து மனத்தைத் தேற்றிக் கொண்டு அவர்களைப் பற்றி இழிவாகப் பாடமுற்படுகின்றார்.

*''வாய்நாறும் ஊழல் மயிர்ச்சிக்கு நாரிடும் மையிடுங்கண்*
*பீநாறும் அங்கம்பிணை வெடிநாறும் பெருங்குழிவாய்ச்*
*சீநாறும் யோனிஅழல்நாறும், இந்திரியச் சேறுசிந்திப்*
*பாய்நாறும், மங்கையர்க்கோ இங்ஙனே மனம்பற்றியதே''*[57]

என்று பட்டினத்தார் பரத்தையரின் அங்கங்களை இழிபொருளாக நினைத்துப் பாடுகின்றார். பெண்களைத் தாய்போல் கருதும் அளவிற்குப் பசி, பட்டினி, வறுமை, பிச்சையேற்று உண்ணல் எனப் பல துன்பங்களை அனுபவித்தபிறகு, தூய்மையான உள்ளம் கொண்ட பிறகு பட்டினத்தார் பெண்டிரை மிக உயர்வாகப் பாடுகின்றார்.

*''பேய்போல்திரிந்து பிணம்போல் கிடந்திட்ட பிச்சையெல்லாம்*
*நாய்போல் அருந்தி நரிபோல்உழன்று நன்மங்கையரைத்*
*தாய்போல்கருதித் தமர்போல் அனைவர்க்கும் தாழ்மைசொல்லிச்*
*சேய்போல் இருப்பர் கண்டீர் உண்மைஞானம் தெளிந்தவரே.''*[58]

உண்மை ஞானம் வந்தபின்பு ஒருசேய்போல், குழந்தை நிலைக்கு அவர் மனம் சென்றுவிட்டதை இப்பாடல் உணர்த்துகிறது. அவர் பெண்களைத் தாயாக எண்ணுகின்ற பாங்கிற்கு மேற்கண்ட பாடலே தக்க சான்றாகும்.

கொங்கணச் சித்தரும் வாலைக் கும்மியில் பெண்களைப் பற்றி உயர்வாகக் குறிப்பிடுகின்றார். ஒரு பெண் தன் குழந்தைக்குப் பாலூட்டி வளர்ப்பதால் தாய்; ஓர் ஆடவனை மணந்து சுகந்தரும்போது மனைவி;

ஒரு நல்ல அண்ணனுக்கு ஆதரவாக வந்து பிறக்கும்போது தங்கை; மனைவியின் தங்கையாகப் பிறக்கும்போது அவள் கொழுந்தி; மனைவிக்கும் கொழுந்திக்கும் அன்னையானபோது அவள் மாமி எனப் பெண் பல்வேறு உருவங்களில் வந்து மானிடரை வாழவைப்பவள் என்று பெருமிதத்தோடு கூறுகின்றார்.

*"மாதாவாய் வந்தே அமுதம் தந்தாள் - மனை*
*யாட்டியாய் வந்து சுகங்கொ டுத்தாள்*
*ஆதரவாகிய தங்கை யானாள் - நமக்கு*
*ஆசைக் கொழுந்தியும் மாமியானாள்"*[59]

என்று கொங்கணர் பெண்ணின் பெருமையைப் போற்றுகின்றார். கொங்கணச் சித்தர் மாதராரை,

*"கற்புள்ள மாதர் குலம்வாழ்க - நின்ற*
*கற்பை யளித்தவ ரேவாழ்க!*
*சிற்பர னைப்போற்றிக் கும்மியடி*
*கற்பர னைப்போற்றிக் கும்மியடி"*[60]

எனப் போற்றிப் பாடுகின்றார். தாமியற்றிய வாலைக்கும்மியில் பெண்டிர் குலம் வாழ்க. என்றுமே மாறாத பத்தினித் தன்மையுடைய கற்புடைப் பெண்டிரைப் பேணும் ஆண்மையும் வாழ்க என்று மாதரையும் அம்மாதரைக் காக்கும் ஆடவரையும் கும்மிகொட்டி இசையோடு போற்றிப் பாடுகின்றார். இடைக்காட்டுச் சித்தர்,

*"அன்னையைப்போல் எவ்வுயிரும் அன்புடனே காத்துவரும்*

*முன்னவனைக் கண்டு முக்தியடை புல்லறிவே"*[61]

எனத் தாயின் சிறப்புக்கு வலுச்சேர்க்கின்றார். இறைவனைப் போல் காத்துவரும் அன்னை என்று கூறாமல், அன்னையைப் போல் எவ்வுயிரையும் இறைவன் காத்து வருபவன் என்று கூறும்போது அந்த இறைவனுக்குச் சமமாக அன்னையை, குழந்தையை அன்புடன் பேணிக்காத்து வளர்த்திடும் தாயைப் போற்றுவதனை இப்பாடலடிகளில் காண முடிகின்றது.

கடுவெளிச் சித்தரும் பெண்கள் மீது உயர்வான எண்ணத்தையே கொண்டிருக்கின்றார். உத்தமப் பெண்களுக்குத் தரவேண்டிய மதிப்பையும் கொடுத்து,

*"பாம்பினைப் பற்றி யாட்டாதே - உன்றன்*

*பத்தினி மார்களைப் பழித்துக் காட்டாதே"*[62]

என்று பாடுகின்றார். மனித உளவியல் அடிப்படையில் சற்று நுணுகி ஆய்ந்தால் உண்மை புலப்படும். சித்தர்கள் இனப்பெருக்க உறுப்புப் பகுதியைப் பாம்பின் தலையாகக் கொள்வர். பாம்பின் வால்பகுதியை மனித தலைப் பகுதியிலே நிறுத்துதலைக் குண்டலினி சக்தியை மேலே எழுப்புதல் என்பர். பாம்பினைப் பற்றி ஆட்டாதே என்று கூறுவதற்கு இவரொன்றும் பாம்பாட்டிச்சித்தரல்ல. பாம்பின்மீது இரக்கப்பட்டுக்

கூறியிருப்பினும் பத்தினிப் பெண்ணைப் பழிக்காதே என்று கூறும்போது இங்கு பாம்பு பற்றிக் கூறவேண்டிய அவசியம் இல்லை. எனவே இங்கு மறைபொருளில் பாடியிருக்கின்றார் என்பர். பாம்பின் படமாகிய இடத்தை (அல்குலை)ப் பற்றி ஆட்டாதே என்பதற்குச் சில காம வெறியர்கள் எந்நேரமும் அதே எண்ணத்தோடே அலைவார்கள். மனைவிக்கு உடல்நிலையும், மனமும் சரியில்லாத போதும் அலைவார்கள். பெண்டிர் உடலுக்கு முடியாமல் மறுத்தால் உடனே சந்தேகப்புத்தியில் கடுமையான சொற்களால் உளறுவர். வாய்க்கு வந்தபடியெல்லாம் பேசுவர். இந்த உட்பொருளை வைத்துத்தான் சித்தர் பாடியிருக்கின்றார் என்பது தெள்ளத் தெளிவாகின்றது.

சித்தர்கள் பெண்களின் மேன்மையினை, இல்லறத்தை நல்லறமாக நடத்தும் அவர்களது பெருமையினைப் போற்றுகின்றனர். அதேசமயம் பொருளுக்காக உடலை விற்கும் விலை மகளிரைக் கண்டிக்கின்றனர். எனவே, சித்தர்கள் பெண்களைத் தவறாகவே சித்திரிப்பதுபோல் சிலர் கருதலாம். இதனை,

*"ஞானியர் பெண்பிறவியை இழித்துக் கூறிய தென்னை என்று சிலர் நினைக்கலாம். ஞானியர் பெண்ணுலகை இழித்துக் கூறவில்லை என்பது எனது ஆராய்ச்சியில் யான் கண்ட உண்மை. பெண்மையை நன்முறையில் தாய்மைக்குப்*

*பயன்படுத்தி இறைமைப் பேற்றைக் காணாது, வாழ்க்கையில் வழுக்கி வீழ்ந்த வரைவின் மகளிர் தீமைகளை உலகுக்கு உணர்த்த ஞானியர் மறுப்புமொழிகள் வழங்கியது உண்மையே. அம்மறுப்புரைகளைப் பொதுவாக்கிப் பெண்ணுலகின்மீது சுமத்துவது தவறு''*[63]

என்னும் திரு.வி.கல்யாணசுந்தரனாரின் கூற்றைக் கொண்டு தெளியலாம். மேற்கண்ட கூற்றை இரா. கலாவதி தமது நூலில் எடுத்தாண்டுள்ளார். பெண்களைப் பற்றிய சிந்தனையைத் தெளிவுபடுத்துவதாக இக்கூற்று அமைந்துள்ளது.

**5.9. முடிவுரை**

சித்தர் பாடல்கள், சமுதாயம் பல்வேறு நெறிமுறைகளைக் கொண்டதாக இருந்தாலும் ஏழையோ பணம் படைத்தவனோ, உயர்ந்த குலமோ, தாழ்ந்த குலமோ ஒழுக்கம் உள்ளவன் எவனோ அவனே பரமயோகி என்று தெளிவுபடுத்துகின்றன. மேலும் உலகமக்கள் உடல்நலத்தோடும் மன அமைதியோடு வாழவும், ஒற்றுமையை நிலைநாட்டவும் வல்ல கடவுள் - பரம்பொருள் ஒன்றே என்பதை ஆணித்தரமாக அவர்கள் பாடல்கள் வலியுறுத்துவதனைக் காணமுடிகின்றது.

பிறர்பொருளை மோசம் செய்து அடைய எண்ணுபவர்க்கு நரகம் காத்திருக்கிறது என்று சித்தர்கள் எச்சரிப்பதனை அறிந்து கொள்ளமுடிகிறது. போலிச் சாமியார்களின் நிலையினைக் கூறிச் சமுதாய மக்களை அவர்களிடம் இருந்து தற்காத்துக் கொள்ளுமாறு விழிப்புணர்வு ஏற்படுத்தியிருப்பதனைக் காண முடிகின்றது. ஏழை எளியவர்கட்கு, உணவின்றி நடமாடும் வறுமையாளர்கட்கு, நடமாடும் தெய்வங்களான அவர்களுக்குச் சோறிடுங்கள் அது தெய்வத்திற்குப் போய்ச்சேரும் என்ற சிந்தனை மெய்சிலிர்க்க வைக்கிறது. சமுதாயமக்கள் மேம்பாடடையும் வண்ணம் சித்தர்கள் கூறிய நல்லுரைகள் அனைத்தும் சமுதாயத்தைச் சீர்படுத்த வல்லனவாகும். பெண்கள் மீதும் அவர்கள் கொண்டிருந்த உயர்ந்த எண்ணம் புலனாகிறது. மொத்தத்தில் சித்தர்கள் தமக்கென வாழாமல் உலக மக்களுக்காகவே வாழ்ந்து தங்களைக் கொடையாக வழங்கியவர்கள் என்று கூறுவது பொருத்தம் ஆகும்.

**இயல் ஐந்து**

## அடிக்குறிப்பு விளக்கம்

1. ஆ. கருணாநிதி, சித்தர் இலக்கியங்களில் சமூகப் பார்வை, ப.114.
2. அகத்தியர் ஞானப்பாடல்,7.
3. மேற்படி.9.
4. மேற்படி.3.
5. மேற்படி.7.
6. மேற்படி.21.
7. சிவவாக்கியார் பாடல்,132.
8. மேற்படி.191.
9. மேற்படி.241.
10. மேற்படி.283.
11. மேற்படி.506.
12. மேற்படி.510.
13. மேற்படி.513.
14. மேற்படி.514.
15. மேற்படி.515.
16. மேற்படி.516.
17. மேற்படி.517.
18. கொங்கணர் வாலைக்கும்மி பாடல், 86.
19. மேற்படி.87.
20. திருமூலர் பாடல், 271.
21. திருமூலர், திருமந்திரம், 273.
22. மேற்படி.252.

23. மணிமேகலை, சிறைவிடுகாதை, 78-79.
24. புறநானூறு,18.
25. திருக்குறள்,226.
26. சிவவாக்கியார் பாடல்,191.
27. குதம்பைச் சித்தர் பாடல், 25.
28. மேற்படி. 30.
29. இரா. கலாவதி, சித்தர்பாடல்களில் நடப்பியல், ப.109.
30. கடுவெளிச்சித்தர் பாடல், 7.
31. மேற்படி. 9.
32. மேற்படி.24.
33. மேற்படி.25.
34. மேற்படி.27.
35. மேற்படி.14.
36. கடுவெளிச் சித்தர் ஆனந்தக் களிப்பு, பல்லவி.
37. கடுவெளிச்சித்தர் பாடல், 1.
38. மேற்படி.10.
39. மேற்படி, 2.
40. மேற்படி, 28.
41. க. நாராயணன், சித்தர் தத்துவம், ப.193.
42. பட்டினத்தார் பாடல், திரு ஏகம்பமாலை, 7.
43. மேற்படி (பொது), 17.
44. கடுவெளிச் சித்தர் பாடல், 30.
45. மேற்படி, 25.
46. க. நாராயணன் மு.கு.நூ.ப.194.

47. பட்டினத்தார் திருஏகம்பமாலை, 19.
48. மேற்படி.21.
49. மேற்படி. 171.
50. க. நாராயணன் மு.கு.நூ.195.
51. கொங்கணர் வாலைக் கும்மி, 90.
52. மேற்படி.94.
53. இரா. கலாவதி மு.கு.நூ.ப.104.
54. மேற்படி.105.
55. மேற்படி.105.
56. சிவவாக்கியார் பாடல்
57. பட்டினத்தார் பாடல் (பொது), 123
58. மேற்படி.126.
59. கொங்கணர் வாலைக்கும்மி, 65.
60. மேற்படி.46.
61. இடைக்காட்டுச் சித்தர் பாடல், 56.
62. கடுவெளிச் சித்தர் பாடல்,27.
63. இரா. கலாவதி மு.கு.நூ.ப.137.

# முடிவுரை

'சித்தர் இலக்கியம் - ஓர் ஆய்வு' என்னும் பொருள் குறித்து நிகழ்த்தப்பெற்ற இவ்வாய்வின் வாயிலாகக் கண்டறிந்த உண்மைகளுள் குறிப்பிடத்தக்கன கீழ்வருமாறு தொகுத்துரைக்கப் பெறுகின்றன.

சித்தர் என்ற சொல்லுக்குப் பல்வேறு பொருட்கள் வழங்கி வருகின்றன. சித்தர்களின் கொள்கைகளும், சித்து விளையாடல்களும் மக்கட்குப் பயன்தரத் தக்கனவாகும். சித்தர்கள் உடலையும், உயிரையும் பேணிக்காத்துள்ளனர். சித்தர்களின் வல்லமைக் கூற்றுகள் மனிதர்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டுவனவாகவே அமைந் திருப்பதனைக் காண முடிகின்றது. சித்தர்கள் மூடநம்பிக்கையைச் சாடுபவர்களாக விளங்கினர். மருத்துவத்துறையில் அவர்கள் ஆற்றிய பங்களிப்பு போற்றற்குரியதாகும். அவர்கள் தமது பாடல்களில் பயன்படுத்தியுள்ள நாட்டுப்புற மெட்டமைப்பும் செவிக்கினியதாகும். சித்தர்கள்மீதும் சித்தர் பாடல்கள்மீதும் மக்கள் பெருமதிப்புக் கொண்டுள்ளனர்.

பண்டைத் தமிழ் இலக்கண இலக்கியங்களில் நால்வருணப் பாகுபாடுகளைக் காண முடிகின்றது. மனிதரில் அந்நால் வருணப் பாகுபாடும் தொழில்முறைப் பகுப்பாகவே வழங்கப் பட்டிருந்தலைச் சங்கம் மற்றும் சங்கம் மருவிய கால இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. நால்வகைச் சாதிகளாக இருந்த நிலை மாறிப் படிப்படியாகச் சேக்கிழார் காலத்தில் நூற்றுக்கணக்கான சாதிகளுக்கு

மேலாக உருமாறியுள்ளன. அவர் சிவனடியார்களில் மட்டுமே பல இன மக்களைப் பதிவு செய்கிறார் என்றால், அடியார்கள் அல்லாத பொதுமக்களில் இன்னும் எத்தனை பிரிவுகள் இருந்தனவோ என்று எண்ண இடமளிக்கிறது. அச்சாதிகள் இன்று மேலும் கிளைத்து ஆயிரக்கணக்கான சாதிகளாக உருமாறிக்கொண்டு வருவதனைப் பார்க்க முடிகிறது.

இதுபோன்ற பல பிரிவினைகளால் மக்கள் துன்பத்துக்காளவர் என்றும், மக்களிடையே ஒற்றுமையும் அமைதியின்மையும் அடியோடு போய்விடும் என்றும் என்றெண்ணிய சித்தர்கள் சாதி சமய சாத்திர சடங்குகளை வன்மையாகக் கண்டித்தனர். சாதியமைப்பு முறையை எதிர்த்தனர். சாதிசமயமற்ற ஒரு சமத்துவ சமுதாயத்தை உருவாக்கச் சித்தர்கள் முயன்றனர். சித்தர்கள் வழியில் சான்றோர்களும் மக்களிடையே சமத்துவத்தை உருவாக்க முயன்று வருகின்றனர். சமத்துவபுரங்கள் பலவற்றை நிறுவி வருகின்றனர்.

குறிப்பிட்ட ஒரு சிலர் தம் நலன் கருதி மூடப்பழக்க வழக்கங்களை மக்களிடையே வலிந்து புகுத்தியுள்ளனர். மக்களில் பலர் அவற்றைப் பற்றி அறிவுக்கண் கொண்டு ஆய்ந்து பார்க்காமல் ஏற்றுக்கொண்டு விட்டனர். மக்களின் அறியாமையினைக் கண்டு வருந்திய சித்தர்கள் மக்களிடையே மண்டிக் கிடக்கின்ற அறியாமையை அகற்றும் நோக்கில் பாடல்கள் பலவற்றைப் புனைந்துள்ளனர்.

மக்களை முட்டாளுக்குகின்ற பல்வேறு மூடப்பழக்க வழக்கங்களைத் தத்தம் பாடல்களின் வழியே சுட்டிக்காட்டி மக்களிடையே பகுத்தறிவுச் சிந்தனையைப் பரப்பி, விழிப்புணர்வை ஏற்படுத்தியவர் களாகச் சித்தர்கள் விளங்கியுள்ளனர் என்பது அவர்களது பாடல்கள் மூலம் புலனாகின்றது.

மனிதரில் பலருக்கு உடலைப் பற்றிய முக்கியத்துவம் தெரிவதே இல்லை. கல்வியறிவு இன்மையாலும், அறியாமையினாலும், ஆணவத்தினாலும் தங்களது உடல் உறுப்புகளைப் பற்றியும், நோய்கள் பற்றியும், நோய்ப் பாதுகாப்புமுறை பற்றியும் அறியாமல் பிணியுற்று, துன்பத்தை அனுபவித்து வாழ்நாளில் முன்கூடியே இறப்பவர்கள் பலர். ஆனால் சித்தர்கள் தங்களது உடலை இறைவன் வாழும் இல்லமாகவே எண்ணினர். எனவே சித்தர்கள் மனிதர்களை நோக்கி உடலை அழுக்குடம்பு என்று எண்ணாமல், ஆண்டவன் வீற்றிருக்கும் ஆலயமாக எண்ணுங்கள் என அறிவுறுத்தினர்.

உடல் உறுப்புகளையும், உடலில் இயங்கும் காற்றின் தன்மைகளையும், மனத்தைச் செம்மைப் படுத்துதலையும் ஒவ்வொரு மனிதரும் தெரிந்திருக்க வேண்டும். என்பதனைச் சித்தர் பாடல்கள் வலியுறுத்துகின்றன. தனிமனித ஒழுக்கம் மிகமிக இன்றியமையாதது என்று சித்தர்கள் உணர்த்துகின்றனர். ஒழுக்கச் சீர்கேட்டால் வாழ்வு இருண்டுவிடும் என்றும் எச்சரிக்கை விடுப்பதனைச் சித்தர் பாடல்களில் காணமுடிகின்றது.

சித்தர் பாடல்கள் சமுதாயம் பல்வேறு நெறிமுறைகளைக் கொண்டதாக இருந்தாலும் ஏழையோ பணம் படைத்தவனோ, உயர்ந்த குலமோ, தாழ்ந்த குலமோ ஒழுக்கம் உள்ளவன் எவனோ அவனே பரமயோகி என்று தெளிவுபடுத்துகின்றன. மேலும் உலகமக்கள் உடல்நலத்தோடும் மன அமைதியோடும் வாழவும், ஒற்றுமையை நிலைநாட்டவும் வல்ல கடவுள் - பரம்பொருள் ஒன்றே என்பதை ஆணித்தரமாக அவர்கள் பாடல்கள் வலியுறுத்துவதனைக் காணமுடிகின்றது.

பிறர்பொருளை மோசம் செய்து அடைய எண்ணுபவர்க்கு நரகம் காத்திருக்கிறது என்று சித்தர்கள் எச்சரிப்பதனை அறிந்து கொள்ளமுடிகிறது. போலிச் சாமியார்களின் நிலையினைக் கூறிச் சமுதாய மக்களை அவர்களிடம் இருந்து தற்காத்துக் கொள்ளுமாறு விழிப்புணர்வு ஏற்படுத்தியிருப்பதனைச் சித்தர்கள் பாடல்களில் காண முடிகின்றது. ஏழை எளியவர்கட்கு, உணவின்றி நடமாடும் வறுமையாளர்கட்கு, நடமாடும் தெய்வங்களான அவர்களுக்குச் சோறிடுங்கள், அது தெய்வத்தைச் சென்று சேரும் என்ற சித்தர்களின் சிந்தனை மெய்சிலிர்க்க வைக்கிறது. சமுதாயமக்கள் மேம்பாடடையும் வண்ணம் சித்தர்கள் கூறிய நல்லுரைகள் அனைத்தும் சமுதாயத்தைச் சீர்படுத்த வல்லனவாகும். பெண்கள் மீதும் அவர்கள் கொண்டிருந்த உயர்ந்த எண்ணம் புலனாகிறது. மொத்தத்தில் சித்தர்கள் தமக்கென வாழாமல் உலக மக்களுக்காக வாழ்ந்தவர்கள் எனலாம்.

# துணைநூற் பட்டியல்

**முதன்மை நூல்கள்**

பெரியஞானக் கோவை என வழங்கும் சித்தர் பாடல்கள், - அரு. இராமநாதன், பிரேமா பிரசுரம், சென்னை-24.

சித்தர் பாடல்கள், - மானோஸ், சென்னை-4.

சித்தர் பாடல்கள், பெரிய ஞானக்கோவை, - முருகேசன், சி.எஸ், சங்கர் பதிப்பகம், சென்னை-49.

சித்தர் பாடல்கள் - வரத கோவிந்தராசன், கவிதா பப்ளிகேசன்ஸ், சென்னை-17.

**துணை நூல்கள்**


அம்பேத்கார். பி.ஆர்., - இந்துமதத் தத்துவமும் மனுதர்மமும், பெரியார் சுயமரியாதைப் பிரச்சார வெளியீடு, 50, ஈ.வி.கி. சம்பத் சாலை, வேப்பேரி, சென்னை-7.

அரிமதி தென்னகன், - தமிழ்-தமிழ் அகராதி, இலக்குமி நிலையம், 53/115 கவுடியா மடம் சாலை, இராயப்பேட்டை, சென்னை-14.

ஆறுமுக நாவலர், - பெரியபுராணம் வசனம், முல்லை நிலையம், 9, பாரதிநகர், முதல்தெரு, தி.நகர், சென்னை-17.

இராமச்சந்திரன், எஸ்.பி., - சித்தர்கள் வரலாறு, தாமரை நூலகம், 7, என்.ஜி.ஓ. காலனி, வடபழனி, சென்னை-26.

,, - நாற்பத்தெண் சித்தர்கள் பெரியஞானக்கோவை, தாமரை நூலகம், வடபழனி, சென்னை-26.

கணபதி, த.ந., - தமிழ்ச்சித்தர் மரபு,
ரவி பப்ளிகேசன்ஸ்
அசோக் நகர், 4வது அவென்யு,
சென்னை-83.

,, - சித்தர்களின் குறியீட்டு மொழியும்
திருமூலரின் சூனிய சம்பாஷனையும்,
ரவி பப்ளிகேசன்ஸ்,
அசோக் நகர், சென்னை-83.

கமலக்கண்ணன், ப., - சித்தர் தத்துவம்,
வானதி பதிப்பகம்,
13, தீனதயாளு தெரு,
தி. நகர், சென்னை-17.

கருணாநிதி, ஆ., - சித்தர் இலக்கியங்களில்
சமூகப்பார்வை,
பாவை பப்ளிகேசன்ஸ்,
142, ஜானிஜான்கான் சாலை,
இராயப்பேட்டை, சென்னை-14.

கலாவதி, இரா., - சித்தர் பாடல்களில் நடப்பியல்,
காவ்யா வெளியீடு,
16, இரண்டாம் குறுக்குத் தெரு,
டிரஸ்டுபுரம், கோடம்பாக்கம்,
சென்னை-24.

சிதம்பரனார். சாமி., - சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம், ஸ்ரீ செண்பகா பதிப்பகம், 24, கிருஷ்ணா தெரு, பாண்டிபஜார், தியாகராய நகர், சென்னை-17.

சித்த மருத்துவத்தொகுதி-1., - தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னைப் பல்கலைக் கழக வளாகம், சென்னை-5.

சோமு, மீ.ப., - சித்தர் இலக்கியம் (மூன்று தொகுதிகள்), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், சிதம்பரம்.

ஞானஜோதி சம்பங்கி, ஸ்ரீ., - சித்தர் சிவவாக்கியார் பாடல், ஞானதீபம் பதிப்பகம், தாதாபுரம்-604207, திண்டிவனம் வட்டம்.

தங்கபிரகாசம், சா., - பாரதிதாசன் பாடல்களில் பெரியார் சிந்தனைகள், பகுத்தறிவுப் பதிப்பகம், பகுத்தறிவு இல்லம், 5□, பாரதிதாசன் நகர், பெரம்பலூர்.

திருமூலர், - திருமந்திரம்
ப. பலராமப்பிள்ளை உரை,
கழகம்,
சென்னை.
(1996)

திருமூலர், - திருமந்திரம் (மூன்று தொகுதிகள்)
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.
(2001)

தெய்வநாயகம், சி.கோ., - சித்தர் சிந்தனைகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை-108.

தேவநாதன், சி.எஸ்., - உள்ளொளி பெருக்கும் சித்தர்கள்,
செண்பகா பதிப்பகம்,
தி. நகர்,
சென்னை-17.

தேவநேயப் பாவாணர், - பாவாணர் பேருரைகள்,
பைந்தமிழ்ப் பாசறை,
7, மூன்றாம் தெரு, கலைஞர் நகர்,
திருவொற்றியூர் மேற்கு,
சென்னை-19.

தொல்காப்பியர், - தொல்காப்பியம் - பொருளதிகாரம்,
நச்சினார்க்கினியர் உரை,
கழகம், சென்னை.
1977.

நாராயணன், க., - சித்தர் தத்துவம்,
தமிழ்ப் புத்தகாலயம்,
தி. நகர், சென்னை-17.

,, - சித்தர் சிவவாக்கியார்,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை-17.

பாரதியார், - பாரதியார் கவிதைகள்,
இலக்குமி நிலையம்,
கவுடியாமடம் சாலை,
இராயப்பேட்டை,
சென்னை-14.

பெரியார், - ஜாதி ஒழியவேண்டும்-ஏன்?
திராவிடர் கழக வெளியீடு,
50, ஈ.வி.கே. சம்பத் சாலை,
வேப்பேரி, சென்னை-7.

,, - மனுநீதி ஒருகுலத்துக்கு ஒரு நீதி!
திராவிடர் கழக வெளியீடு,
சென்னை-7.

பெரியார், - புத்தநெறி,
திராவிடர் கழக வெளியீடு,
சென்னை-7.

மாணிக்கவாசகம், இரா., - நம் நாட்டுச் சித்தர்கள்,
அன்னை அபிராமி அருள்,
9, செல்லம்மாள் தெரு,
செனாய் நகர், சென்னை-30.

முத்துசாமி, அ., - சங்க இலக்கியத்தில் ஆயர்,
இராணி பதிப்பகம்,
இராயப்பேட்டை,
சென்னை-14.
முதற்பதிப்பு, 1990.

வரதராசன், மு., - திருக்குறள் தெளிவுரை,
கழகம்,
54, டிடிகே சாலை, சென்னை-18.

வில்சன் அமல்ராஜ், - அகப்பேய்ச் சித்தர் பாடல்,
சித்தர் பாடல்கள் ஆய்வகம்,
475/2 துரைநகர்,
திருப்பத்தூர், வேலூர் மாவட்டம்.

,, - கடுவெளிச் சித்தர் பாடல்,
சித்தர் பாடல்கள் ஆய்வகம்,
திருப்பத்தூர், வேலூர் மாவட்டம்.

வில்சன் அமல்ராஜ், - குதம்பைச் சித்தர் பாடல், சித்தர் பாடல்கள் ஆய்வகம், திருப்பத்தூர், வேலூர் மாவட்டம்.

ஜெகதா, - இறவா வரம்பெற்ற இந்தியச் சித்தர்கள், ராஜமாணிக்கம்மாள் வெளியீடு, ராம்பிரசாத் பப்ளிகேசன்ஸ், இராயப்பேட்டை, சென்னை-14.

**ஆய்வேடுகள்**

சண்முகம், தி., - கல்வியியல் தத்துவத்தின் அடிப்படையில் தமிழிலுள்ள சித்தர் பாடல்கள், சென்னைப் பல்கலைக் கழக முனைவர் பட்ட ஆய்வேடு, (2007)

மகாலட்சுமி, தி., - அகத்தியரின் பல்துறைச் சிந்தனைகள் சென்னைப் பல்கலைக் கழக முனைவர் பட்ட ஆய்வேடு, (2007)

## பின்னிணைப்பு

**'சித்தர் வல்லமை' குறித்துப் பாம்பாட்டிச் சித்தர் கூறியுள்ள பாடல்கள்**

*எட்டுநாகம் தம்மைக்கையால் எடுத்தே ஆட்டுவோம்*
*இந்திரனார் உலகத்தை இங்கே காட்டுவோம்*
*கட்டுக்கடங் காதபாம்பைக் கட்டி விடுவோம்*
*கடுவிடந் தன்னைக் கக்கி ஆடுபாம்பே.*

*தூணைச்சிறு துரும்பாகத் தோன்றிடச் செய்வோம்*
*துரும்பைபெருந் தூணாகத் தோற்றச் செய்குவோம்*
*ஆணைப்பெண்ணும் பெண்ணைஆணும் ஆகச் செய்குவோம்*
*ஆரவாரித் தெதிராய்நின் றாடு பாம்பே.*

*எட்டுமலை களைப்பந்தாய் எடுத்து எறிகுவோம்*
*ஏழுகட லையுங்குடித்து ஏப்ப மிடுவோம்*
*மட்டுப்படா மணலையும் மதித்து விடுவோம்*
*மகராசன் முன்புநீ நின்றாடு பாம்பே.*

*மண்டல முற்றுமெங் கையால் மறைத்திடுவோம்*
*வானத்தையுமே வில்லாக வளைத்து விடுவோம்*
*தொண்டருக்குச் சூனியம் சொல்லிக் காட்டுவோம்*
*தோன்றலுக்கு முன்புநீ நின்றாடு பாம்பே.*

மூண்டெரியும் அக்கினிக்குள் மூழ்கி வருவோம்
முந்நீருள் இருப்பினும் மூச்ச டக்குவோம்
தாண்டிவரும் வன்புலியைத் தாக்கி விடுவோம்
தார்வேந்தன் முன்புநீ நின்றாடு பாம்பே.

செப்பரிய மூன்றுலகுஞ் செம்பொன் ஆக்குவோம்
செங்கதிரை தண்கதிராய்ச் செய்து விடுவோம்
இப்பெரிய உலகத்தை இல்லாமற் செய்வோம்
எங்கள் வல்லபங் கண்டுநீ ஆடுபாம்பே.

வேதன்செய்த சிருட்டிகள்போல் வேறு செய்குவோம்
வேதனையும் எங்கள்கீழே மேவச் செய்குவோம்
நாதனுடன் சமமாக நாங்களும் வாழ்வோம்
நாங்கள் செய்யும் செய்கைஇதென் றாடுபாம்பே.

அறுபத்து நாலுகலை யாவும் அறிந்தோம்
அதற்கு மேலொரு கலையான தறிந்தோம்
மறுபற்றுச் சற்றுமில்லா மனமும் உடையோம்
மன்னனே ஆசானென் றாடுபாம்பே.

*சீறுபுலி யானையாளி சிங்க முதலாய்ச்*

*சிற்றடிக்குக் குற்றேவல் செய்யச் சொல்லுவோம்*

*வீறுபெருங் கடவுளை எங்க ளுடனே*

*விளையாடச் செய்குவோமென் றாடுபாம்பே.*

**படிக்காத பாமரனும் எளிதில் பொருள் விளங்கிக்கொள்ளும்**
**சித்தர் பாடல்கள்**

*மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டாம்*

*(அகத்தியர் ஞானம் 2).*

*கறந்தபால் முலைபுகா கடைந்தவெண்ணெய் மோர்புகா*

*உடைந்துபோன சங்கினோசை உயிர்களும் உடல்புகா*

*விரிந்தபூ உதிர்ந்தகாயும் மீண்டும்போய் மரம்புகா*

*இறந்தவர் பிறப்பதில்லை இல்லையில்லை இல்லையே*

*(சிவ.வாக்-48).*

*மாடுகன்று செல்வமும் மனைவிமைந்தர் மகிழவே*

*மாடமாளி கைப்புறத்தில் வாழுகின்ற நாளிலே*

*ஓடிவந்து காலதூதர் சடுதியாக மோதவே*

*உடல்கிடந்து உயிர்கழன்ற உண்மைகண்டும் உணர்கலீர்*

*(சிவ.வாக்-83).*

*மீன்இறைச்சி தின்றதில்லை அன்றும்இன்றும் வேதியர்*

*மீன்இருக்கும் நீரலோ மூழ்குவதும் குடிப்பதும்*

*(சிவ.வாக்-158).*

*மாதர்தோள் சேராதவர் மாநிலத்தில் இல்லையே*

*மாதர்தோள் புணர்ந்தபோது மனிதர்வாழ்வு சிறக்குமே*

*மாதராகும் சக்தியொன்று மாட்டிக்கொண்ட காதலால்*

*மாதராகும் நீலிகங்கை மகிழ்ந்துகொண்டான் ஈசனே*

*(சிவ.வாக்-503).*

*நாறுமீனைப் பலதரம் நல்ல தண்ணீரால்*

*நாளும் கழுவினும் அதன்நாற்றம் போமோ*

*கூறும்உடல் பலநதி யாடிக் கொண்டதால்*

*கொண்டமலம் நீங்காதென் றாடுபாம்பே*

*(பாம்பாட்டியார்-65).*

*மயிலென்றும் குயிலென்றும் மாணிக்க மென்றும்*

*மானேயென்றும் தேனேயென்றும் வானமு தென்றும்*

*ஒயிலான வண்ணமயிற் கொத்தவ ளென்றும்*

*ஓதாமல் கடிந்தோமென் றாடுபாம்பே*

*(பாம்பாட்டியார்-56).*

*பேசரு நாற்றம் பெருகும் உடலுக்கு*

*வாசனை ஏதுக்கடி - குதம்பாய்*

*வாசனை ஏதுக்கடி* *(குதம்பை-62).*

*நீச்சுக் கவுச்சது நீங்காமெய்க்கு மஞ்சள்*
*பூச்சுத்தான் ஏதுக்கடி - குதம்பாய்*
*பூச்சுத்தான் ஏதுக்கடி (குதம்பை-64).*

*காகம் கழுகு களித்துண்ணும் மேனிக்கு*
*வாகனம் ஏதுக்கடி - குதம்பாய்*
*வாகனம் ஏதுக்கடி (குதம்பை-64).*

*கோவணத் தோடே கொளுத்தும் உடலுக்குப்*
*பூவணை ஏதுக்கடி - குதம்பாய்*
*பூவணை ஏதுக்கடி (குதம்பை-70).*

*கையால் அழைப்பது போலுன துண்கண்*
*மையால் அழைப்பதென்ன - குதம்பாய்*
*மையால் அழைப்பதென்ன (குதம்பை-72).*

*மஞ்சு போலாகி வளர்ந்திடும் கூந்தலும்*
*பஞ்சுபோல் ஆகிடுமே - குதம்பாய்*
*பஞ்சுபோல் ஆகிடுமே (குதம்பை-78).*

*பொன்னாலே செய்ஆடிப் போன்றஉன் கன்னங்கள்*
*பின்னாலே ஒட்டிவிடும் - குதம்பாய்*
*பின்னாலே ஒட்டிவிடும் (குதம்பை-79).*

*நல்லாய்உன் அங்கங்கள் நன்கு நிமிர்ந்தாலும்*
*வில்லாய்ப்பின் கூனிவிடும் - குதம்பாய்*
*வில்லாய்ப்பின் கூனிவிடும். (குதம்பை-80).*

*பிறக்கும் போதுற்ற பெருமையைப் போலவே*
*இறக்கும்போ தெய்துவிடும் - குதம்பாய்*
*இறக்கும்போ தெய்துவிடும் (குதம்பை-82).*

*கள்ளம்கட் காமம் கொலைகள் கபடங்கள்*
*பள்ளத்தில் தள்ளுமடி - குதம்பாய்*
*பள்ளத்தில் தள்ளுமடி (குதம்பை-84).*

*செத்தப்பின் சாப்பறை செத்தார்க்கு சேவித்தால்*
*சத்தம் அறிவாரடி - குதம்பாய்*
*சத்தம் அறிவாரடி (குதம்பை-193).*

பேச்சுவழக்குச் சொற்களைக் கொண்டே இன்னும் இதுபோன்று ஏராளமான பாடல்கள் இயற்றப்பட்டுள்ளன. அதனால் பாமர மக்களிடையே

இப்பாடல்கள் செல்வாக்குப்பெற்றன. மேலும் சித்தர் பாடல்களுக்கேயுரிய சிறப்பு என்னவெனில் மறைபொருளில் பாடல்களை இயற்றி, அதன் உட்பொருளை அறியும் தகுதியுடையோர்க்கு மட்டுமே இயற்றப்பட்டனவாகும்.

*ஆயிரத்தெட் டிதழ்வீட்டில் அமர்ந்த சித்தன்*
*அண்டமெலாம் நிறைந்திடும் அற்புதச் சித்தன்*
*காயமில்லா தோங்கிவளர் காரணச் சித்தன்*
*கண்ணுள் ஒளியாயி னானென்று ஆடுபாம்பே*
*(பாம்பாட்டி-103).*

*கண்டவர்கள் ஒருக்காலும் விண்டி டார்களே*
*விண்டவர்கள் ஒருக்காலும் கண்டி டார்களே*
*கொண்டகோலம் உள்ளவர்கள் கோன்நிலை காணார்*
*கூத்தாடிக் கூத்தாடியேநீ ஆடுபாம்பே*
*(பாம்பாட்டி-105).*

*அன்ன மிருக்குது மண்டபத்தில் விளை*
*யாடித் திரிந்ததே ஆண்புலியும் - அங்கே*
*இன்ன மிருக்குதே அஞ்சு கிளியவை*
*எட்டிப் பிடிக்குமே மூன்றுகிளி*
*(கொங்கணர்-52).*

தோப்பிலே மாங்குயில் கூப்பிடு தேபுது

மாப்பிள்ளை தான்வந்து சாப்பிடவும்

ஏய்க்கும் இப்படி அஞ்சா றாந்தை

இருந்து விழிப்பது பாருங்கடி

(கொங்-53).

எரியு தேயறு வீட்டினி லேயதில்

எண்ணையில்லை அமிழ்தண்ணீ ரில்லை

தெரியுது போக வழியுமில்லை பாதை

சிக்குது சிக்குது வாலைப்பெண்ணே

(கொங்-26).

முச்சுடரான விளக்கி னுள்ளே மூல

மண்டல வாசி வழக்கத்திலே

எச்சுட ராகி யந்தச் சுடர்வாலை

இவள்விட வேறில்லை வாலைப் பெண்ணே

(கொங்-29).

நாலுத் தெருவினிலே நாலுக் கம்பம்

நடுத்தெரு வினிலேயோர் பொன்னுக் கம்பம்

போலும் விளங்கு பொன்னுக் கம்பத்தினுக்கே

பூமாலை சூடியேநின் றாடுபாம்பே

(பாம்பாட்டி-84).

# பொருள் விளக்கங்கள்

அஞ்சுகிளி - மெய், வாய், கண், மூக்கு, செவி.

அறுவகைச் சாத்திரம்- வேதாந்தம், வைசேடிகம், பாட்டம், பிரபாகரம், பூர்வமீமாஞ்சை, உத்திர மீமாஞ்சை.

ஆ - பசு.

ஆதிவத்து - பரம்பொருள்.

உத்தியம் - யாகவகை.

காயம் - உடம்பு.

காலன் - எமன்.

கிரியை - ஆகம விதிப்படி இறைவனை வழிபடுவது.

கோகிலம் - குயில்.

சட்டுவம் - அகப்பை, கரண்டி.

சதுர்வேதம் - ரிஜ், யஜுர், சாம, அதர்வணம்.

சரியை - கோயில் கட்டி வழிபடுவது.

சழக்கு - குற்றம், அழக்கு.

சாப்பறை - இறப்பிற்கு ஒலியெழுப்பும் மேளம்.

ஞானம் - அறிவுக்கண் கொண்டு வழிபடுவது.

தரா - சங்கு.

நடுவன் - எமன்.

முந்நீர் - கடல்நீர் (ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர்).

மூன்றுகிளி - ஆணவம் கன்மம், மாயை.

மேதி - எருமை.

யமபுரம் - எமனூர்.

யோகம் - யோகம் தவம் மூலம் வழிபடுவது.

வராகம் - பன்றி.

வல்லபம் - திறமை, வல்லமை.

வறையோடு - பிச்சைப் பாத்திரம்.

வாலை - வாலாம்பிகை, கன்னிப்பெண்.

வேதன் - பிரம்மா.